# EVERY DAY LIFE

OF

# THE ANCIENT TAMILS.

By

VIDWAN

K. C. VANMEEKANATHAN

Lecturer in Tamil

MADURA COLLEGE, MADURA.

Printed at

The " Sri Shanmukha Press, "

TANJORE.

1938

 R. 1—4—0

# பண்டைத் தமிழரின்

# நித்திய வாழ்க்கை.

ஐ. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.


ஆக்கியோன்

வித்வான் K. C. வன்மீகநாதன்

(Son of M. R. Ry. K. M. Chidambara Iyer
Rtd, Tamil Pandit, G. T. S. Tanjore.)

தமிழ்ச் சொற்பொழிவாளர்

மதுரைக் கல்லூரி

மதுரை.





1938

பதிப்பகம்

ஸ்ரீ ஷண்முக அச்சுக்கூடம், தஞ்சாவூர்.

# நூன் முகம்.

மலர் தலை யுலகில் மாண்புமிக, இற்றைக்கு 1700 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த தமிழர்களின் வாழ்க்கை நிலையினை, எண்வகைக் கட்டுரைகளின் முகத்தான் பரக்கக் கூறுவது இவ்வுரைநூல். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, திருக்குறள்; தொல்காப்பியம்-பொருளதிகாரம், இறையனார் அகப்பொருள்; சிலப்பதிகாரம், மணிமேகலை; பிற்காலத்திய நூல்கள் முதலியனவற்றிற் காணப்படும் குறிப்புகளைத் தொகுத்தே இஃதெழுதப்பட்டது.

பண்டைக்காலத்திய கிரேக்கர், உரோமர், எகிப்தியர் போன்றாரின் தினசரி வாழ்க்கைகளைக்கூறும் நூல்கள் மேனாடுகளிற் பலவுளபோல, நம்நாட்டிலும் இருத்தலை விரும்பி இதனை எழுதலானேன். தமிழரெனப்பெயர் கொண்டு தமிழ் நூல்களிற் கூறப்பட்டிருப்பனவற்றைப் பொதுவாகவேனு முணராதோர்க்கும், கல்லூரி, உயர்தரப் பள்ளி, வித்வான் வகுப்புகளிற் பயில்வோர்க்கும் இந்நூல் பெரிதும் பயனளிக்குமென்பதே என்றன் உட்கிடை.

நூலியற்றுந்துறைக்கு விருந்தினனும், சிறியவனுமாகிய வென்னையூக்கி, முன்னேறச் செய்யுமாறு, தமிழறிவு சான்ற சான்றோர்களை வேண்டுகின்றேன்.

கூ. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

மதுரைக் கல்லூரி,
மதுரை.

K. C. வன்மீகநாதன்.



# பொருளடக்கம்.





உ

சிவமயம்.

முருகன் துணை

# பண்டைத் தமிழரின் - -
# - - - நித்திய வாழ்க்கை.

## 1. வீர வாழ்க்கை.



நமது தமிழ்நாட்டில் வதிந்துவந்த பண்டைத் தமிழ் மக்கள் வீரத்திற் சிறந்து விளங்கினார்கள். முடியரசர்களும், சிற்றரசர்களும், ஏனைய வீரர்களும் வீரமே தமக்கு உயர்ந்த அணியெனக் கருதினார்கள். மயிர்நீப்பின் வாழாக் கவரிமானன்னாராய் விளங்கியவர்கள் தொகை எண்ணிலடங்கா. அரசர்கள் ஒவ்வொருவரும் இவ்வுலகம் யாவர்க்கும் பொது என்பதைக் கேட்க விரும்பார். இடஞ்சிறிதென்னும் ஊக்கம் துரப்ப மேற்சென்று கொண்டிருப்பர்.

அரசர்களிற் பலர் தங்கள் இயற்பெயர் மாத்திரம் கோடலை விரும்பாமல், ஏதேனும் வீரச் செயல்கள் செய்து, அச்செய்கைகளை அடையாகக்கொண்ட பெயர்களையே கொள் வாராயினர். உதாரணங்களாக, சேரன்—செங்குட்டுவன், 'கடல்பிறக் கோட்டிய' என்ற அடையையும், பெருஞ் சேரலிரும்பொறை, 'தகடுரெறிந்த' என்ற அடையையும், நெடுஞ்செழியன், 'தலையாலங் கானத்துச் செருவென்ற' என்ற அடையையும், அவ்வவ் வீரச்செய்கையைச் செய்த பின் கொண்டிருந்தனர். அவ்வரசர்களுள், போரென்ன வீங்கும் பொருப்பன்ன திண்புயத்தானும் இருந்தான் ஒருவன். போ ரெனிற் புகலும் புனைகழல் மறவராயிருந்தவர் பலர். ஊர்மன்றி னிடத்துக் கட்டப்பட்டிருக்கும் முழவில், காற்றடிப்பதனால் உண்டாகிய ஒலியைக்கேட்டு, போரென்று கருதி மகிழ்வெய் தும் மைந்துடைமைந்தர் பலரிருந்தனர். இவற்றை ஆய்வோ மாயின் அவர்கள் வீரம் நமக்கு நன்கு விளங்கும்.

போர் தொடங்குவதற்கு முன்பு அவர்களிற் சிலர் கூறும் வஞ்சினங்கள் உலகில் உள்ள யாவராலும் போற்றத் தக்கனவே. அஃது இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனக்கூறுதலாகும். ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் என் பான் 'பலவேந்தர் ஒருங்குகூடி என்னுடன் பொருவே மென்று கூறுகின்றனர். அவர்களை ஆரமரில் அலறத் தாக்கி அவர்ப் புறங்காணேனாயின் என் மனைவியை விட்டுப் பிரிவே னாக; கொடுங்கோல் செய்தேனாகுக; இவ்வுயர்ந்த அரசகுலத் திற் பிறவாமல், என்னுடைய குடிப்பிறப்பினின்றும் நீங்கப் பெற்றவனாய் மாறித் தாழ்ந்த குலத்திற் பிறப்பேனாக' என்று வஞ்சினம் செய்தான்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வஞ்சினம் ஏனையோர் வஞ்சினத்திலும் தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்ததாகும். அவன் கூறியன: 'தம் நாவினைக் காவாத வாய்ச் சிறு சொற்சொல்லிய எனது பகையரசர்களை அவர் தம்முரசத்தொடு அருஞ்சமத்தில் அகப்படுத்தேனாயின், என் னுடைய குடைநிழற் கண் வாழும் குடிகள் வேறு செல்லு மிடங்காணுதவர்களாய், 'எம்மிறை கொடியன்' என்று கண் ணீர் பரப்பிப் பழி தூற்றும்படியான கொடுங்கோலனாகக் கடவேன்; ஓங்கிய சிறப்பினையும் உயர்ந்த கேள்வியினையும், உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பினையுமுடைய மாங்குடி மருதனார் முதலான புலவர்களால் பாடப்பெறாமல் என் மனே நீங்குவதாக; இரப்போர்க்கீய வொன்றும் இன்மையை யான டைக' என்பனவே.

சோழன் நலங்கிள்ளியோ 'என் மாற்றாரயினும், மெல் லவந்து என்னுடைய நல்லடிகளை வணங்கி, ஈயென்றிரந்தால் இந்நாட்டையே அன்றி என் இன்னுயிரையும் இன்புடனளிப் பேன். என் உள்ளம் எள்ளிய அறிவில்லாதோன் உளனெ னின் அவன் தூங்கும் புலியை இடறி, அதனைத்துயிலுணர்த் திய குருடன் போலப் பிழைத்துப்போவது அரிதாகும். யான் மேற்சென்று பகைவர்கள் வருந்தும்படி பொருதிலேனாயின், என்னிடம் காதல் கொள்ளாப் பெண்டிரோடு கலந்தேனா வேன்' என்று வஞ்சினம் கூறினான்.

இவற்றை நாம் தெளிவுற நோக்கின் பண்டைத் தமிழ் அரசர்களின் மனப்பான்மை நமக்குத் தெற்றெனவிளங்கும். அவர்கள் தம் உயிரைச் சிறிதும் மதித்தாரில்லை. இங்ஙனம்

வஞ்சினங்கூறிய அரசிற் பெரும்பாலோர் தாம் சொல்லிய விதம் செய்தே முடிப்பர். ஏனெனில் அங்ஙனம் கூறுவதற் கேற்ற உண்மை யாற்றல் பெற்றோரே அவ்வாறு வஞ்சினங் கூறுவர். அவர்கள் சொல்லிய விதம் பகைவர்களைக் கோறல் புரிய ஒண்ணாதவர்களாய்ப் போரில் இறந்துபடின், இறந்து பட்ட அவ்வஞ்சினம் கூறியோர், அவ்வஞ்சினத்தை முடித் தோராகவே உலகினரால் கருதப்படுவர். ஆசிரியர் திருவள்ளு வரும்,

> இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
> பிழைத்த தொறுக்கிற் பவர்"

என்று கூறினர். வஞ்சினம்கூறி அதனை முடியாமல் இறந் தாரை இகழ்வார் இப்புவியில் ஒருவரும் இல்லை. இனி, போர் செய்யுங்கால் பகைவரை வெகுண்டு நோக்கியகண், பகைவர் தம் கைவேல் தன்மேல் வருவதைக்கண்டு இமைக்குமாயின், அத்தகைய கண்களையுடையவன் வீரனாகக் கருதப்படான். அங்ஙனம் இமைப்பது வீரர் வீரத்திற் கிழுக்கென்று கருதி னர். அன்றியும், தம்முடைய வாழ்நாட்களில் விழுப்புண் படாது கழிந்த நாட்களைப் பயனில்லாமற் கழிந்த நாட்களாகக் கருதினர். விழுப்புண் என்பது முகத்தினும் மார்பினும்பட்ட புண்களாகும்.

போரில் பகைவர் வேலால் எறியப்பட்ட வீரன், தன்னி டம் அதற்குமாறாக அவன்மேல் எறிய வேல் இல்லையென்று மயங்கான். தன் மார்பிற்றைத்த வேலையே பறித்து எறி வான். இச்செய்கையே, 'தூழிலாட்டு' என்ற புறப் பொருட் டுறைக்கிலக்கணமாக,

" களங்கழிய படையிரிய
உளங்கழிந்தவேல் பறித்தோச்சின்று "

என்று புறப்பொருள் வெண்பா மாலையினும்,

" கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும் "

என்று திருக்குறளிலும் கூறப்பட்டது. இதுவரை முற்காலத்து ஆடவர் வீரம் கூறினோம். இனி அக்காலத்துப் பெண்டிர் வீரம் கூறுவாம்.

பண்டைப் பெண்டிர் கற்பும், வீரமும் ஒருங்கமையப் பெற்றிருந்தனர். அவர்தம் கற்புநிலை வேறோரிடத்தில் விளங்கக் கூறப்படும். அவர்கள்,

வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோன—
அவ்வேலே
அம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று"

என்றபடி, தம் கணவர் மார்பைக் கிழித்த வேலாலேயே தாமும் உயிர் துறப்பர். அக்காலத்தில் வீரத்தாயர் பலரிருந்தனர். போருக்குச் சென்ற தம் மைந்தர் வெற்றி கொள்ளாது மீளின் தம்முயிர் தரியார். அத்தகைய மைந்தர், தம் மறக்குடிக்குப் பெரும்பழி உண்டு பண்ணியதாகக் கருதுவர். இச்செய்தி தகடூர் யாத்திரையால் நன்கு விளங்கும்.

ஓர் வீரத்தாய், தன் மகனைப் போர்க்கனுப்பியிருந்தாள். போர்க்குச் சென்ற மைந்தன், தன் கை வேலால் யானையை எறிந்தான். அவ்வேல் அதன் முகத்தின் கண்ணே தங்கியது. அதனால் அவன் மேற்கொண்டு போரைச்செய்யாமல் வெறுங் கையுடன் வீடு திரும்பினான். தன் மைந்தன் போரில் இறந் துபடாமல் வெறுங்கையுடன் வீடு திரும்பியதை அவன் தாய் வெறுத்தாள்.

'எம்மில் செய்யாப் பெரும்பழி செய்த
கல்லாக் காளையை ஈன்ற வயிற்றை நோவேன்'

என்றாள். இதுபோன்ற செய்கைகள் வேறு சிலவற்றை ஈண்டுக் கூறுவாம்.

நரம்பு வெளிப்பட்டு உலறியிருக்கின்ற மெல்லிய தோளு டன் ஒரு முதுமகள் இருந்தாள். அவட்கு இவ்வுலகத்தில் இருந்த செல்வமெல்லாம் ஒரு சிறுவனே. அவன் பால் மண மாறாப் பாலகன். போர்க்களத்திற்குச் சென்றான். ஆயின், அவனைப்போர்க்குச் செல்ல ஏவியது அக்கிழத்தாயே. போர்க் களத்திற் சென்று பொருத அவன், பகைவர் வேலை மார்பில் ஏற்றுத் துறக்கம் புகுந்தான். அதனை யறிந்த பலர், அம்முதிய வளின் மனப்பான்மையை அறிவான் வேண்டியோ, அன்றி வேறு எக்காரணங் குறித்தோ, அம் முதியோளிடஞ் சென்று, அவள் மகன் அமரிற் குடைந்தனன் என்று பொய் கூறினர். அதனைச் செவியேற்ற அக் கிழத்தாய், தன் செவியையே நம்பவில்லை. ஆண்டு நின்றும் பொருக்கென எழுந்தாள். 'உண்மை அங்ஙனமிருப்பின் அப்பாலகன் பாலுண்ட இத் தனங்களை அறுத்திடுவேன்' என்று பலருமறியக் கூறிய

வளாய், அவள், தன் தனத்தை அரிவதற்கு வாள் கைக்கொண்டு விரைவிற் சென்று போர்க்களம் புகுந்தாள். தன் மகனைப் பூசற் களரியிற் றேடினாள். மகன் மார்பிற்பட்ட புண்ணுடன் ஆண்டு இறந்து கிடப்பதைக் கண்ணுற்றாள். கண்ணுற்ற அவள் மனமடைந்த மகிழ்ச்சியை யாவரே அறிய வல்லார்! தான் அம்மைந்தனைக் கவானிற் கண்ட நாளினும் பெரிதுவந்தாள்.

வேறொரு மறத்தாயின் தன்னை மேனாள் நடந்த போரில் யானையை எறிந்து களத்திற் பட்டொழிந்தான். அவள் கணவன் நேற்றைப் போரில் பசுக்களை எதிர்நின்று தடுத்து ஆண்டு இறந்தான். இங்ஙனம் யாவரும் இறந்த பிறகும் பகைவர், போர் நீங்காதவர்களாய்ப் போர்ப்பறை முழங்கச் செய்தனர். இறந்து பட்டவர்களொழிய அத் தாய்க்கு எஞ்சி நின்ற சுற்றம் அவளுடைய ஒரே சிறுவனாகும். பகைவரது போர்ப்பறை கேட்டு அதனைப் பொறுதவளாய் எஞ்சி நின்ற தன் ஒரே மகனைப் போர்க்கனுப்பத் துணிந்தாள். உடனே அவன் கையில் வேலைக்கொடுத்தாள். வெள்ளை ஆடையை அவனுக்கு உடுத்தினாள். அவனுடைய விரிந்த மயிரினையுடைய குடுமிக்கு எண்ணெய் பூசி, அழகு செய்தாள். போர்களத்திற்குச் செல்லும் வழியைக் காட்டி, அவனைச் செல்கென விடுத்தாள். தன்னுடைய சுற்றத்தாரும், கணவனும் பட்ட பிறகு, தனக்கு உறுதுணையாகத் தன்மகனேனும் உயிருடன் இருக்க விரும்பாமல், அவனைப் போர்க்களத்திற்குத் துணிந்து செல்ல விடுத்த அவள் வீரம் சொல்லுந் தரத்ததொன்றோ!

வீரர்க்கேயன்றி, அம்மறக்குடியிற் பிறந்த மகளிர்க்கும்

கோபமுண்டாதலை மிகுத்துச் சிறப்பித்துக் கூறும் மூதின் முல்லை யென்ற துறையை விளக்க,

" வந்தபடை நோனாள் வாயின் முலைபறித்து
வேந்திற லெஃக மிறைக்கோளீஇ—முந்தை
முதல்வர்கற் றன்காட்டி மூதின் மடவாள்
புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு "

என்ற வெண்பா வெண்பாமாலையில் காணப்படுகின்றது. தன் புதல்வர்க்குப் பாலூட்டிக் கொண்டிருந்த தாய், பகைவர் பலர் எதிர்த்தனர் என்பதைக் கேள்வியுற்றவுடன், அதனைப் பொறாளாய், தன் புதல்வனைப் பாலுண்ணுதலினின்றும் நீக்கி, முன்பு பகைவரைக் குத்தி வளைந்த வேலை வளைவு தவிர்த்து அவன் கையிற் கொடுத்து, பழைய மறக்குடியிற் பிறந்த தன் மையினால், அச்சிறுவனைப் போர்க்கு அனுப்புகின்றாள். அவ் வாறு அனுப்புவாள், தன் குடியின் முன்னோர்கள் நடுகற்களை அவனுக்குக்காட்டிய பிறகே அனுப்புகின்றாள். போர்க்குச் செல்லுஞ் சிறுவற்கு நடுகல் காட்டி அனுப்புமவள் யாது நினை வினளோ வெனின் நாம் அதனை ஒருவாறு ஊகித்தறியலாம். நடுகல் என்பது, போரில் வீரத்துடன் பொருதபின் பகைவர் படைகள் மார்பிற்றைக்க, அதனால் உயிர்துறந்த ஒரு வீரனின் பெயரும் புகழும் என்றும் நின்று நிலவுதல் வேண்டி, அவ னுடைய பெயரும், அவனது வீரச் செயல்களும் வரைந்து நடப்பெற்ற ஓர் கல்லாகும். இத்தன்மையான நடுகல்லை அத் தாய் சிறுவனுக்குக் காட்டியது, ' மைந்த ! போரிற் சென்று மாற்றலர் வெங்கிடும்படியாகப் பொருது வெற்றியுடன் திரும்புவாயாக; இன்றேல் போரில் இறந்து உனக்கும் ஒரு

நடுகல் அமைக்கும்படி செய்வாயாக; தோல்வியுற்றுத்திரும்பி வாரற்க' என்று வெளிப்படையாகக் கூறாமல், அவற்றை அவனுக்குக் குறிப்பினால் உணர்த்தற் பொருட்டேயாகும்.

மேற்காட்டிய செய்திகளால் பண்டைப் பெண்டிரின் வீரத்தையும் ஒருவாறு அறியலாம். அக்காலத்தில், 'போரிற் புண்பட்டு இறந்தோரே துறக்கமடைவர்; நோய்வாய்ப்பட்டேனும், அன்றி முதுமைமிக்கேனும் இறப்பின் அவர்க்குத் துறக்கமின்று' என்று யாவரும் கருதினர். ஆதலின் ஒரு அரசன் நோயுற்று இறப்பின், இறந்த அவ்வரசனின் உடலை, அந்தணர் ஒருங்குகுழீஇ, தருப்பையிற் கிடத்துவர். கிடத்திய அவ்வுயிரிலுடம்பை வாளாற் பிளப்பர். அவ்வாறு பிளக்குங்கால் 'தமது மறமே கருதாக, நல்லமரில் வீழ்ந்த மறவர் செல்லும் உலகத்திற்கு இவரும் செல்வாராக' என்று கூறுவர். ஆயின் இவ்வாறு ஒரு அரசன் மூப்பால் இறத்தல் அக்குடிக்கே இழுக்கென்று கருதினர்.

அன்றியும், இருவர் அரசர் பொருங்காலையில், ஒரு அரசனுடைய அம்பு, மற்றோர் அரசனுடைய மார்பிற்றைத்து ஊடுருவிச்சென்று, அவனது புறத்தே புண்ணுண்டு பண்ணின், அப்புண்பட்ட அரசன் அதனைத் தனது வீரத்திற்கு இழுக்காகக் கருதி நாணுவான். சோழன் கரிகாற் பெருவளத்தானுடன் வெண்ணிப் பறந்தலையிற் பொருது, அவ்வரசனால் அடைந்த புறப்புண்ணிற்கு நாணிய பெருஞ் சேரலாதன் அதன் பிறகு உயிருடன் வாழ விரும்பாமல், உயிர் துறக்கக் கருதியவனாய்த்தன் வாளுடன் வடக்கிருந்தான். வடக்கிருத்

தல் என்பது, இவ்வுலக இன்பத்தைத் துறந்து, மேலுலகு அடைய விரும்பியோர், உண்ணு நோன்பிருந்து உடல் மெலி வித்து உயிர் நீக்கிக்கொள்ளக் கருதி புண்ணியத் திசையாகிய வடதிசையிற் சென்றிருத்தலாகும்.

போர் புரிவதும், பற்பல வீரச் செய்கைகளைச் செய் வதும் அக்காலத்து மைந்தர்களின் கடமை யென்றே யாவ ருங் கருதினர். பலர் கடமைகளைக் கூறுமுகத்தான், தன்னு டைய வீர வுணர்ச்சியையும் வெளிப்படுத்த வேண்டி ஓர் மறத்தாய்,

> " ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே
> சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
> வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
> நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே
> யொளிறுவா ளருஞ்சம முருக்கிக்
> களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே "

என்று கூறுகின்றாள். பண்டைத் தமிழரின் போர் முறை களைப்பற்றிக் கூறுமிடத்தில் அவர்கள் வீர வாழ்க்கையும் பல் லாற்றானும் வெளிப்படும் ஆதலால் ஈண்டு விரித்திலம்.



## 2. கொடைத்திறம்.

அக்காலத்தில் முடியரசர்களிலும், குறுநில மன்னர்களி லும், செல்வம் மிக்கிருந்தவர்களிலும், ஏழைமக்களிலும் பலர் பெரிய வள்ளல்களாய் விளங்கினர். அவ்வள்ளல்களில், இல்லை யென்றிரப்போர்க்கில்லை யென்றுரையாத இதயம் படைத்தவர் களாய் இருந்தனர் சிலர். இரவலர், தம் இன்னுயிரைக் கேட் பினும் தாழாது கொடுத்தனர் சிலர். புலவர்கள் வேண்டி வரும் பொழுதெல்லாம் அவர்கள் வேண்டியவற்றை இடை யுறாது கொடுத்து, அவர்களாற் பாடல் பெற்றனர். புலவர்க் கீந்து பாடல் பெறாத மன்னர் இழிந்தவராகக் கருதப் பட்டனர்.

இரவலர் கேட்கும் பொழுது தாம் ஈய முடியாத நிலை மையிலுள்ள வள்ளல்கள் இல்லையென்றுரைக்க மனமிசையார். அவ்வாறு இல்லை யென்றுரைத்தலினும் இறத்தலே சிறந்தது என்று கருதினர். அதனான்றோ,

> " ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற்
> சாதலுங் கூடுமோ மற்று "   என்றும்,

> " கருங்கட லுடுத்த மல்லன் ஞாலத்து
> செம்மையின் வழாஅது கோடைக்கடன் பூண்டு
> வாழ்வது போருந்தா தாகிற்
> சாவது மினிதவர் வீவது முறமே "   என்றும்,

> " சாதலின் இன்னாத தில்லை யினிததூஉம்
> ஈத லியையாக் கடை "

என்றும், ஆன்றோர் கூறிச்சென்றனர். தன்னை வந்திரந்த புலவர்க்கு ஒன்றும் ஈய வியலாத நிலைமையிலிருந்த காளத்தி யப்ப முதலியார் தன்னுயிரைப் போக்குவான் வேண்டி அராப் புற்றில் கை நுழைத்தார். ஆயின், யாவர்க்கும் ஈந்து அதனாற் புகழ்பெற்ற அவ்வள்ளலின் கையினை, அம்மற்றினைப் பொருளாகிய அரவும் கடித்தற் கஞ்சி, அவ்வள்ளலுக்குத் தன்னால் இயன்ற ஒன்றை அளிக்கக்கருதித் தன்னிடமிருந்த மணியை அவ்வள்ளல் கையினில் இட்டது. பெறுதற்கரிய அம்மணியினைப் பெற்ற புரவலரும் தன்னை இரந்த இரவலர்க்கு அதனை அளித்துப் பெரு மகிழ்ச்சி யடைந்தார். அன்றியும் இது வேறொரு செய்தியாலும் விளியுறும்.

முதிரம் என்னும் மலைக்குத் தலைவன் குமணன். இரப்போர்க்கு இயன்றனவற்றைக் கரவாது அளிக்கும் பெருந்தகையோன். அவனுடைய சீர்த்தி எங்கும் பரவியது. யாவரும் அவனைக் கொண்டாடலாயினர். ஆயின் அவனது பின்னோன் இளங்குமணன் அதுபற்றித் தனது முன்னோனிடம் அழுக்காறு கொண்டான். குமணனைக் காட்டிற்கோட்டி நாடு கைப்பற்றினன். காட்டகமடைந்த குமணனோ தன் வள்ளன்மையை ஒழித்தானில்லை. தன்னிடமிருந்த ஒன்றிரண்டு அணிகளை இரவலர்க்கீந்து மகிழ்ந்திருந்தான்.

காட்டகத்தே குமணனைச் செலுத்திய இளங்குமணன், தன் முன்னோன் இறந்து பட்டாலொழியத் தான்புகழடைதல் இயலாதென்றெண்ணி, அவன்றலையைக் கொணர்வோர்க்குப் பரிசில் அளிப்பதாகப் பறை யறைவித்திருந்தான். இந்நிலையில் பெருந்தலைச் சாத்தனார் குமணனை அடைந்து தன்னுடைய

வறுமையை விளக்கி நின்றார். என் செய்வான் குமணன்! இல்லை யென்றுரைக்க நாவெழவில்லை. புலவரை நோக்கினன். புலவரே! யான் செல்வத்துடன் வாழ்ந்து வேண்டியார்க்கு வேண்டியன அளித்த அந்நாளில் தாங்கள் வரவில்லை. இந்நாள் என்னை வந்தடைந்தீர்! ஆயினும் என் றலைதனை அரிந்து கொடு போய், என் தம்பிகைக் கொடுத்தால் அதற்குரிய பரிசிலை அவன் மகிழ்ந்து கொடுப்பான். அதனைப்பெற்று நுமது வறுமைநோய் போக்கிக் கொள்ளுங்கள் என்றுவாளை அவர் கைக்கொடுத்தான். அச்சமயத்தில் குமணனது உட்கோள் யாது? பெருமை பெற்ற ஒரு பரிசிலன் தன்னைப்பாடிவந்து, ஒரு பயனுமில்லாமல் வாடியவனாய்ப் பெயர்தல், தான் நாடிழந்த துன்பத்தினும் மிகத் துன்பம் பயப்பது என்பதே யாகும். அன்றியும், குமணன் இரவலர்க்குச் சிறந்த ஒன்றையே அளிப்பானாதலால், அந்நிலையில் தன்னிற் சிறந்த வேறொரு பொருளை அவன் கண்டிலனாதலின் தன்னையே அளிக்க எண்ணி வாளை அவர் கைக்கொடுத்தான்.

வள்ளல்கள் ஈயும்பொழுது இரப்பவர் இன்முகங் காணு மளவும் ஈவர். அவ்வாறு இன்முகங் காணுமளவும் ஈதல் எளியதன்று. வள்ளுவனாரும்,

> " இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
> இன்முகங் காணு மளவு "

என்று கூறினார். பறம்பிற் கோமான் பாரி கடையெழுவள் ளல்களுள் தலையாயவன். கொடையினால் யாவரையும் வென் றவன். தனக்குரியனவாயிருந்த முந்நூறு ஊர்களையும் பரி சிலர்க்குக் கொடுத்து மிகப்புகழ் பெற்றவன். ஒரு சிற்றரசன்

அத்துணைப் புகழ்பெற்றது கண்ட முடியுடை மன்னர் மூவரும் ஆற்றாராயினர். பாரியை எங்ஙன மேனும் கொல்ல வழி தேடினர். மூவரும் ஒருங்கு சேர்ந்து, படைதிரட்டிப் பறம்பை முற்றினர். நெடுநாள் முற்றியும் மூவர் எண்ணமும் முடிவு பெறவில்லை. மூவரும் செயலற்றிருக்கும் காலையில் பாரியின் உயிர் நண்பர் கபிலர் தன் அரசனின் மேம்பாட்டை மூவர்க்கும் அறிவுறுத்த எண்ணி, அவர்களையடைந்து 'நீங்கள் எத்துணைக்காலம் முற்றினும் பறம்பு கொள்வதற்கரிய தொன்றாகும். பரிசிலராக வந்து பாரியின் புகழைப்பாடினால் நீங்கள் எதுவேண்டினும் அதனைப்பெறலாம்' என்றனர். அவ் வண்ணமே செய்யக்கருதிய மூவர் வேந்தரும், பரிசிலராக உருமாறி வந்து பாரியைப் புகழ்ந்து பாடினர். பாரி பொன் னும், மணியும் மிகக்கொடுத்தான். பரிசிலர் முகம் பொலிவு பெறவில்லை. பாரியோ இரப்பவர் இன்முகங் கண்டன்றி அவர்களைச் செல்ல விடான். செய்வகை யறியாது தவித்தான் எத்துணைப் பொருள் அளிப்பினும் இவர்கள் முகம் கூம்புதல் ஒழியாதுகொல் என்றெண்ணினன். இறுதியில் அவர்களை நோக்கித் தாழ்மையாக, 'நமக்கு வேண்டுவனவற்றை என் னிடம் காவாது கூறுமின்' என்றனன். உடனே அவர்கள் 'யாம் உன்னையே பரிசிலாக வேண்டினம்' என்றனர். பாரி மனமிக மகிழ்ந்தான். தன்னிடத்திலுள்ள ஒரு பொருளையே அவர்கள் கேட்டதற்குக் கடவுளை மனமார வழுத்தினன். அங்ஙனமே தந்தேன் என்றான். அருகிலிருந்தார் தடுத்துக் கூறியனவற்றிற்குச்சிறிதும் செவி சாய்த்தானில்லை. பாரி, தாம் வேண்டியதாகிய அவனுயிரை அளிக்க இசைந்ததைக்கண்ட மூவர் முகங்களும் விரிந்தன. அம்மலர்ச்சியைக்கண்ட பாரி, அன்றே தான் பிறந்த பயனை அடைந்ததாகக்கருதினன்.

இனி, அவர்கள் கொடுக்குங் காலையில் பிறன் கடை மறப்ப நல்கினர். தம்மை வந்து பாடிப்பரிசில் பெறுவா னொருவன் வேறு எவரிடமும் பொருள் கருதிச் செல்லாத வாறுகொடுப்பாராயினர். இச்செய்தி,

"நிற்பாடிய வலங்குசெந்நாப்
பிறரிசை நுவலாமை
ஓம்பாதீயு மாற்றலேங்கோ"

என்ற அடிகளாலும்,

"செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த பின்னர்—ஒரு நாளும்
பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற்
பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்"

என்ற வெண்பாவாலும் உணரப்படும்.

ஈதலின் சிறப்பை விளக்க எழுந்த குறட்பாக்களில்,

"இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள"

என்னும் குறட்பாவும் ஒன்றாகும். வள்ளுவர் நூற்கு உரை யெழுதிய உரையாசிரியர்கள் இக்குறட்குப் பலவிதமான உரைகள் கூறினர். உரையாசிரியர்கள் ஒரு செய்யுட்கு உரை யெழுதுங்கால், அந்நூலெழுந்த காலத்து மக்களின் பழக்க வழக்கங்களையும் ஒட்டி, அவைகட்கேற்பப் பொருளெழுதி

யிருத்தலுங் கூடும். இக்குறட்பாவிற்கும் அங்ஙனமே உரையாசிரியர்கள் உரை யெழுதியதாகக் கோடல் சிறந்ததாகும். ஏனெனில் அவர்களால் கூறப்படும் பலவித உரைகளுக்கும் உதாரணங்களாகப் பண்டைத் தமிழரிடைப்பலர் வாழ்ந்து வந்திருக்கின்றனர்.

திருக்குறட்கு உரையெழுதிய ஆசிரியர்களில் தலைசிறந்தவராகக் கருதப்படும் பரிமேலழகர், ' இரப்பவன் தன்னுடைய வறுமையைப்பற்றித் தன்னிடங்கூறிய இளிவரவைப் பிறரிடம் சொல்லாமலிருத்தலும், அதனைத் தன்கட்கூறி இரந்தார்க்கு மாற்றாது ஈதலும், குடிப்பிறந்தார்கண் உளவாவன ' என்று கூறினர். குமணனைப் பாடிவந்த புலவர்களில் பெருஞ்சித்திரனர் என்பவர் தன்னுடைய வறுமையை, ' வயது முதிர்ந்த எனது தாய் தனது கால்களால் நடக்க வியலாமையின் தண்டையே காலாகக்கொண்டாள். தலை நூல் விரித்தாற் போன்று வெண்மையாகி விட்டது. கண்மறைந்து விட்டது. அப்பால் நகர இயலவில்லை. இத்தகைய முதுமைப்பருவமடைந்த அவள், வீட்டின் வறுமை நிலையைக்கண்டு ' எனது உயிர் இன்னும் போகின்றதில்லையே ' எனக்கூறி வருந்துகின்ருள். மக்கள் பசியினல் மிக வாடுதலைக்கண்ட எனது மனைவி மிகவும் வருந்தி, குப்பையில் எழுந்த வேளைக்கீரையை உப்பில்லாமல் வேகவைத்து, மோருமில்லாமல் மக்கட்கு ஊட்டி, எஞ்சுதலின்மையின் தானுண்ணுதவளாய், மாசின சின்னத்துணியினளாய், அறக்கடவுளைப் பழித்தவளாய் இரா நின்ருள். அவ்விருவர் நெஞ்சமும் உவப்ப, நீ உவந்து கொடுத்து என்னைச் செல்ல விடுவாயாக ' என்று விளக்கிக்கூறிப் பரிசில் வேண்டினர். அது கேட்ட குமணன் அப்புலவர்க்கு வேண்டு

வனவற்றை ஈந்து விடுத்தான். அவர்கூறிய இளிவரவைப் பிறரிடம் கூறினனில்லை. இவனேயன்றிக் கடையெழுவள் ளல்களும், வேறு சில வள்ளல்களும், பரிமேலழகர் கூறிய உரைக்கு எடுத்துக்காட்டாய் விளங்கியிருந்தனர்.

இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல் என்ப தற்கு, அவ்விளிவரவை ஒருவன் தன்னிடஞ் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தல் என்வும், அவ்விளி வரவை அவன் பின்னும் பிறனொருவன்பாற் சென்று உரையா வகையாற் கொடுத்தலெனவும், யானிது பொழுது பொருளு டையேனல்லேன் எனக்கூறாது கொடுத்தல் எனவும் வேறு சில பொருள் கூறுகின்றனர். குறிப்பையறிந்து ஈயும் ஆற் றல் சில வள்ளல்களிடம் நன்கு அமைந்திருந்தது. குறிப் பறிந்து ஈதலே கொடையென்பதும் இதுபற்றி யெழுந்ததே யாகும்.

சுரும்புகள் உண்ணப்பூக்கள் தேனை உறைக்கும்படியான நாகம் நின்ற நெடுவழியிலே பாரி தன்து தேரிற் சென்று கொண்டிருந்தான். அவ்வழியில் சிறிய பூக்களையுடைய ஒரு முல்லைக்கொடி, படர்ந்து ஏறுவதற்கோர் கொழு கொம்பின் றித் தளர்ந்திருந்தது. அச்சமயம் காற்று மெல்லென வீச, அக்கொடி தாங்கலாற்றாது தரையில் வீழ்வதும், எழுவதுமா யிராநின்றது. அவ்வாறு தென்றலினால் அசைகின்ற கொடி யைக்கண்டான். வேண்டியார்க்கு வேண்டுவனவற்றைக் கொடுப்பதையே இடையறாது நினைவிற் கொண்டிருக்கும் பாரிக்கு, அம்முல்லைக்கொடி தன்னிடம் ஏதோ ஒரு பொருளை

வேண்டுவது போற்றேற்றியது. அவ்வளவில் நின்று ஆராய்ந் தான். அக்கொடி படர்ந்து ஏறுவதற்கு ஒரு கொழு கொன் பின்மை அவனது மனதிற்படவே, தான் ஏறிவந்த தேரை, ஏறுவதற்கேற்பச் சமைத்த அணியோடும், புரவியோடும், அதன் அருகே நிறுத்திக் கீழேயிறங்கினன். மறுமுறை தென் றல் மெல்லென வீசவே அக்கொடி அத்தேர்மேல் வீழ்ந்தது. கண்ட பாரி தான் அளித்த கொடையை அக்கொடி ஏற்றுக் கொண்டு விட்டதென்று அகமகிழ்ந்து, கால் நடையாகத் தன்னகர் சார்ந்தான்.

கூதிர்க்காலத்தில் ஒரு காட்டகத்தே ஒரு மயில் கூவியது. அவ்வாறு அம்மயில் கூவுவதைக்கண்ட பேகன், 'அஃறிணைப் பொருளாகிய இம்மயில் ஏதோ ஒன்றினை என்னிடம் விரும் பியே இங்ஙனம் கூவியது. இதற்குப் பேசும் வன்மை யிருப் பின் இன்னது வேண்டுமென்று என்னைக்கேட்கும். ஆதலின் இதற்கு வேண்டிய பொருளை நாம் அளிக்க வேண்டும்' என்றுன்னினன். அதுபொழுது தண்ணென்று காற்று வீசி யது. கூதிர்க்கிடைந்த இம்மயில் என்னிடம் போர்வையை விரும்பியே கூவியது என்றெண்ணி, தான் மேலே போர்த்தி யிருந்த போர்வையை அம்மயிலின் மேலே போர்த்தி அப்பாற் சென்றான். முல்லையும், மயிலும் காத்தழும்பேறப் பாடவில்லை யாயினும் தேரும், போர்வையும் பெற்றன. இச்செய்தியையே,

" முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையு
மெல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
யிரவாம லீந்த விறைவர்போ னீயுங்
கரவாம லீகை கடன் "

என்ற வெண்பாவும் வெளிப்படுத்துகின்றது. இவ்வள்ளல்கள் இரவாமல் ஈந்த இறைவர்கள் எனவே குறிப்பறிந்து கொடுக்க வல்லார் என்பது பெறப்பட்டது.

தன்னிடங்கூறிய இளிவரவைப் பின்னும் பிறரிடம் சென்று உரையா வகையிற் கொடுத்தல் முன்னமே கூறப் பட்டது. யான் இதுபொழுது பொருளுடையேனல்லேன் என்று பொய்யுரையாது கொடுத்ததற்கு, வள்ளல் என்று பெயர் பெற்ற எவரையும் உதாரணமாகச் சொல்லுதல் தகும். ஏனெனில் அவ்விதம் கொடுப்போரே வள்ளல் என்று கூறப் பெறுவர்.

அவ்வள்ளல்கள் வண்மை மறுமை நோக்கிற்றன்று. பிறர் வறுமையையே நோக்கியது. அவ்வண்மை குறியெதிர்ப்பை நீர்மையை உடையதன்று. ஒரு பயனைக்கருதிக் கொடுப்பதன்று. அவர்கள் இம்மையில் ஈந்தால் மறுமையில் அதற்கேற்ற புண் ணியப்பயனை யெய்தலாகும் என்று ஈந்தாரில்லை. இதுபற்றியே,

> " சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா லந்தப் ,
> பெறுநன்றி மன்னும் பெரிதென்—றுறுநன்றி
> தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென்பவே
> வானவா முள்ளத் தவர் "

என்ற செய்யுள் எழுந்ததாகும். கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய ஆய் அண்டிரனது கொடைப் பெருமையை விளக்க உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார் என்ற புலவர்,

> " இம்மைச் செய்தது மறுமைக் காமெனு
> மறவிலை வணிகன் ஆஅ யலன் "

என்று பாடினர்.

அவர்கள் ஏதேனும் உயர்ந்த பொருள்களோ அல்லது பெறுதற்கரிய பொருள்களோ பெற்றால் அவைகளைத்தாமே வைத்துக்கொள்ளார். அவற்றின் பயனைத்தாமே நுகர வெண்ணார். அதியமான் நெடுமானஞ்சி என்பவன், பெரிய மலையின் முழையிலிருந்து ஓர் நெல்லிக்கனியை மிக முயன்று பெற்றான். அந்நெல்லிக்கனியின் தன்மை யாதெனில், அதனை யுண்டார் பன்னெடுங்காலம் உயிர் வாழ்ந்திருப்பதே யாகும். அக்கனிக்கு அத்தன்மை உண்மையை அறிந்தே அவன் பெறுதற்கரிய அதனைப் பெற்றான். அதியமானின் அருகில் இருந்து, செந்தமிழ்ப்பாக்களை அவன் செவியில் நிறைப்பவர் நல்லிசைப்புலமை மெல்லியலாராகிய ஔவையாராவர். தான் பெற்ற கனியை உண்ணக்கருதிய அதியமான் தன்னுள் எண்ணலானான். இக்கனியை யுண்டு, யாம் பல நாள் உயிர் வாழ்தலால் உலகிற்கேற்படுவதோர் பயன் இல்லை. தம் அருமைப் பாக்களால் உலகத்தை நல்வழிப்படுத்தும் ஔவையார் இதனையுண்டு பன்னெடுநாள் வாழ்ந்திருத்தல் சாலச் சிறந்ததாகும் என்று முடிவுசெய்தான். அக்கனியின் உண்மைத் தன்மையை ஔவை யறியின் உண்ண மறுப்பாள் என்று அவன் அறிவான். ஆதலின் அந்நெல்லியின் நீர்மையை மறைத்து ஔவைக்கு அதனை யீந்தான். உண்டபிறகே அவள் அஃது அமிழ்தனைய தீங்கனி யென்பதை யறிந்தாள்.

கொடை யென்பது இயற்கையிலேயே அமைந்திருக்கும் குணமாகும். கொடையும் பிறவிக்குணம் என்பதும் இது கருதியே யாகும். அன்றி வழிவழியாகவும் வந்துகொண்டிருந்தது என்னலாம். அதை விளக்கும் பொருட்டே,

"எந்தை நல்கூர்ந்தான் இரப்பார்க்கீந் தேன்றவன்
மைந்தர்தம் மீசை மறப்பரோ—பைந்தோடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி"

என்றார் சிவப்பிரகாச சுவாமிகளும். இவர் பண்டைக்காலத்தில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளை அறிந்து, அதற்கேற்பவே இங்ஙனம் பாடியிருக்கிறார் என்று கோடல் பொருந்தும். கீழ்க் கூறப்படும் கதைக் குறிப்பைக்கொண்டே சிவப்பிரகாசர் அவ்வாறு பாடினார்போலும்!

பாரி இரவலர் இன்முகம் காணும் பொருட்டுத் தன்னுயிரை யீந்ததாகக்கூறி, அவர்தம் இன்முகங்கண்டு, பின்னர் உயிர் நீத்தான். அவ்வள்ளலுக்கு அங்கவை, சங்கவை என்று இரு பெண்கள் இருந்தனர். அவர் தம் மணமுடிவதற்கு முன்னரே பாரி தன் உயிரீந்து புகழ்பெற்றான். அவன் இறந்தவுடன் அவனுக்குத் தோன்றாத் துணைவராக இருந்த கபிலர், கன்னியாயிருந்த அவ்விருவர்க்கும் மணமுடிப்பது தமது கடமையென்றெண்ணி, அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு ஒவ்வோர் ஊராகச் சென்றார். ஒவ்வோர் அரசனையும் மணமுடித்துக்கொள்ளும்படி வேண்டினார். பாரியின் மேலிருந்த அழுக்காற்றினால் அரசரெவரும், அவர்களை மணக்க இசையவில்லை. இறுதியில் அவ்விரு பெண்களையும் பார்ப்பார்க்கு மணமுடித்துக் கொடுக்கப்பட்டது. அவ்விரு பெண்களும் இல்லறம் நடாத்தி வந்தனர். அவர்கள் எளிய அந்தணர்க்கு வாழ்க்கைப்பட்டிருந்தும், அவர்களுடைய பரம்பரைக் கொடை குணம் அவர்களிடம் இயற்கையிலேயே அமைந்திருந்தது.

அவர்கள் வாழ்ந்த நாட்டில் ஒருகால் மழையின்றி வானம் பொய்த்து எங்கும் இலம்பாடு மேம்பட்டது. அச் சமயத்தில் ஒரு பாணன் இவ்விருவருள் ஒருத்தியுழைச் சென்று தன்னை யுண்பிக்க வேண்டினன். அவள் அந்த வறட் காலத்தில் அரிசி பெற்றாளில்லை. தன்னை வேண்டினார்க்கு இல்லை யென்றுரைக்க விசையவில்லை. ஆதலின் தானணிந்திருந்த பொன்னணிகளை எடுத்து நீருலையிற் பெய்து அட்டாள். அவ ளது கொடையின் மாண்பினாலும், கற்பின் திட்பத்தினாலும் அப்பொன்னும் சோறாகியது. அச்சோற்றை வந்த பாண னுக்கு இட்டு மகிழ்ந்தாள்.

மற்றொருவர்க் களிக்குங்கால் முழுமனதுடனில்லாமல் குறைமனதுடன் பலரீவதை நாம் கண்கூடாகக் கண்டிருக்கி றோம். பண்டைக்காலத்தில் வள்ளல்கள் என்று புகழப்பட் டோர், தாம் ஈயும் பொருள் சிறிதேனும், அதனை முழுமன துடன் ஈவர். இரவலர்கள் தம் கடைவாயிலை அடையும் பொழுதே இன்முகங் காட்டலை இன்றியமையாததாகக் கொண்டிருந்தனர். இல்லறம் நடத்துவார் விருந்தினரை ஓம் புதல் கூறுமுகத்தான் திருவள்ளுவர்,

> "மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து"

என்று கூறினார். அஃதாவது விருந்தினரைச் சேய்மைக்கட் கண்டுழி இன்முகங்காட்டல் வேண்டும் என்பது. இது போலவே அவ் வள்ளல்களும் முதலில் இன்முகங் காட்டியும், அதுபற்றி நண்ணியவழி இன்சொற் சொல்லியும், அதுபற்றி உடன்பட்டவழி வேண்டுவன அளித்தும் வந்தனர். அவ்

வாறு முதலில் இன்முகங் காட்டாது எத்துணைப் பொருள் களைப் பின்னரளிப்பினும் அதனால் பயனொன்றுமில்லை. இர வலர் இன்முகங் காண்டலரிதாகும். இன்சொற் கூறுதலும் கொடைக்கு இன்றியமையாததாகும். கொடுக்கும் பொருள் தினைத்துணையாயினும், இன்முகமும், இன்சொல்லும் இருப் பின் அதனைப் பரிசிலர் பனைத்துணையாகக் கருதிக்கொள்வர்.

வள்ளல்கள் தம்மிடம் வரும் இரவலர், பரிசிலர் இவர் களில் பரிசிலர்கட்குப் பரிசிலளிக்குங்கால் அவரவர் தாமறிந்து கொடுத்தனர். பரிசிலர்களுடைய தாமறிந்தளித்தல் எளிய தொன்றன்று. அவர்தம் தகுதி யறிவதற்கேற்ற அறிவாற் றல்கள் நிரம்பியவர்களாயிருப்பவர்களே அவ்வாறளிப்பர். அக் காலத்தில் சில வள்ளல்களிடம் இத்திறமை இயற்கையிலேயே அமைந்திருந்தது. அதற்கான கல்வியறிவையும் அவர்கள் உடையவர்களாயிருந்தனர். புலவர்களோ தம் தாமறிந்து, நன்மதிப்பளித்துக் கொடுக்கும் பரிசில்களையே பெற்றனர். தம் தாமறியாமலீயும் பொருள்களைப்பெற மறுத்தனர். அன் றியும் தம்மை மதியாமலளிப்பினும், காலம் நீட்டித்துப்பின் பரிசிலளிப்பினும், முகமாறியளிப்பினும் அத்தகைய பொருள் களையும் அவர்கள் பெறுவதில்லை. ஆயின் அப்புலவர்கள் ஒரு வன் பரிசில் நீட்டித்தான் என்று அவன்மேற் சீற்றங்கொள் ளார். அவன் பரிசிலளியாதிருப்பினும் அவன்மேற் சினவாது, தமக்கு அவன் ஈயாமையின் அடையப்போகின்ற துன்பத்திற் காக வருந்துவர். அவ்வள்ளல்கள் முகமலர்ந்து மிகச்சிறு பொருளையளிப்பினும் அதனை இன்புடன் ஏற்றுக்கொள்வர். உதாரணமாகக் குமணனைப்பாடிய பெருஞ்சித்திரனார்,

" உயர்ந்தேந்து மருப்பிற் கோல்களிறு பெறினுந்
தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்துநீ
யின்புற விடுதி யாயிற் சிறிது
குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண
அதற்பட வருளல் வேண்டுவன் "

என்று கூறுகின்றார். இத்தகைய புலவர்களின் தன்மைகளைவே றோரிடத்தில் விரித்துரைப்பாம்.

ஒரு வள்ளலின் வள்ளன்மையை விரித்துரைக்கப்புகுந்த ஒரு புலவர்,

" இன்று செலினுந் தருமே சிறுவரை
நின்று செலினுந் தருமே பின்னு
முன்னே தந்தனெ னென்னாது துன்னி
வைகலுஞ் செலினும் பொய்யல னாகி
யாம்வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன்"

என்று கூறுகின்றார். இதனின்றும், அக்காலத்திற் கொடைக் கடம் பூண்டோருழை, எப்பொழுது புலவர்கள் செல்லினும் பரிசில் பெற்று வந்தனர் என்பதும், முன்னமே இவற்கு ஈந்து விட்டோம் என அவர்கள் வாளா விருப்பதில்லை என்ப தும் நாம் நன்கு அறியலாகும். அன்றியும் இத்தகைய விழுமி யோரின் இலக்கணத்தை,

" பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை
யென்னானும் வேண்டே வென்றிகழ்ப—

வென்னானும்

வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டோறுஞ் செய்வர் சிறப்பு "

என்று நாலடி கூறும். இச்செய்யுளின் ஈற்றிரண்டடிகளுக் கிலக்கியமாயுஞ் சிலர் வாழ்ந்து வந்தனர் என்பது,

" ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாட் பயின்று பலரோடு செலினுந்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ "

என்ற ஔவையின் அருமை மொழிகளால் அறியலாகும். புலவர்கள் வள்ளல்களிடம் எப்பொழுது செல்லினும், நன்னிமித்தம் கூடாது தீ நிமித்தம் தோன்றியவழிச் செல்லினும், பரிசில் பெறுவர். அவ்வள்ளல்கள், தம்மிடம் மடவர், மெல்லியர் வரினும் ஈவதை ஒழியார். இதனாலன்றோ பேகன்,

" கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக்குறினே "

எனப்பாணரால் பாடப்பெற்று, கொடை மடஞ் சிறந்தோன் எனப்பெற்றான். கொடையாளிகட்குக் கொடைமடம் படுதற் குணம் சிறந்ததொன்றாகும் என்பதையும், கொடைமடம் படுதல் எவ்வாறு என்பதையும் பிற்காலத்தவராகிய வில்லிபுத்தூராரும் தமது பாரதத்தில் கன்னனுடைய கொடைச் சிறப்பை விளக்கு முகத்தான்,

" வல்லார் வல்ல கலைஞருக்கு
மறை நூலவர்க்குங் கடவுளர்க்கு

மில்லாதவர்க்கு முள்ளவர்க்கு
மிரந்தோர் தமக்கும் துறந்தவர்க்கும்
சொல்லாதவர்க்குஞ் சொல்பவர்க்குஞ்
சூழுஞ் சமயாதிபர் களுக்கு
மல்லாதவர்க்கு மிரவி மக
னரிய தான மளிக்கின்றான் "

என்று கூறினர்.

கொடைக்கடம் பூண்டோர் பரிசில் பெற வந்தவரை, யான் இது பொழுது ஈயும் நிலையில் இல்லை யென்றேனும், இதுபொழுது நம்முடைய பாடலைக்கேட்டற்குக் காலமுடையேனல்லேனென்றேனுங் கூறி, இப்பொழுதுபோய்ப் பின்னொரு நாட் பரிசிற்குவாரும் என்று கூறமாட்டார்கள்.

பரிசிலர் கேட்பதனைக்கொடாது வேறு பரிசில் கொடுப்பர் சிலர். ஏனெனில், சில சமயங்களில், பரிசிலர் தம்மிடம் கேட்கும் பொருள் மிகத்தாழ்ந்ததும், அளவிற் குறைந்ததுமாகிய பொருள்களாக இருக்கலாம். அப்பொழுது அவர்கள் அத்துணைத்தாழ்ந்த பரிசில் கொடுப்பது தம்முடைய வாழ்விற்குத் தாழ்வைத்தருமென்று எண்ணினாராதலால், உயர்ந்ததும், தம்முடைய நிலைமைக்கேற்ற மதிப்புடையதுமாகிய பொருளையே கொடுத்தனர். ஔவையை ஆதரித்த சிலர் இதற்கு எடுத்துக்காட்டாக இருக்கின்றனர்.

ஒருமுறை ஔவையார் நாஞ்சில் மலைக்குத்தலைவனும், சோழனுக்குப் படைத்துணைவனுமாய் இருந்தவனாகிய நாஞ்சில் வள்ளுவன் என்ற அரசனிடஞ் சென்றார். அவ்வரசனிடம்

இவர் சென்றது சிறிது அரிசி பெறுவதற்கேயாம். ஔவையார் அவ்வரசனைக்கண்டு, அரசே ' என்னைச்சேர்ந்தவர்களும் யானும் உண்ணும் பொருட்டுப் பற்றாக இலைக்கு, மேல்தூவிக் கொள்வதன்பொருட்டுச் சிறிது அரிசி யாங்கள் வேண்டினோம்' என்றனர். அது கேட்ட அரசன் புன்முறுவல் பூத்தவனாய், அவர்களுடைய வறுமையைப் பார்த்ததோடல்லாமல் தன்னுடைய மேம்பாட்டையும் சீர்தூக்கிப்பார்த்தான். அன்றியும் பரிசிலர் வரிசையறிந்து கொடுப்பது அவனதியற்கை. ஆதலால் கல்விசைப்புலமை மெல்லியலாராகிய ஔவைக்கு, அரசனாகிய தான் சிறிது அரிசியை அளிப்பது, தன்னுடைய பெருமைக்கும், அவளுடைய பெருமைக்கும் சிறுமை அளிக்கும் என்றெண்ணினான். அவ்வளவில் மலைபோல்வதொரு யானையைக் கொடுத்தனுப்பினான்.

மற்றொருமுறை ஔவையார் தன்னிடத்தில் அன்பு பூண்டிருந்த பழையனூர்க்காரிக்கு ஓர் சுரப்பாடு வாங்கியளிக்க எண்ணிச் சேரலர்கோனிடத்துச் சென்று ஓர் சுரப்பாடு வேண்டுமென்று கேட்டனர். சேரலர்கோனும் புலவர்களின் புலமையையும், மேம்பாட்டினையும் அறிந்து அவற்றிற்கேற்பப் பரிசளிப்பவனாகலின், பொன்னால் ஆடு ஒன்று செய்வித்து அப்பொன்னாட்டை ஔவைக்கு ஈந்தான். பொன்னாட்டை மகிழ்ச்சியுடன் பெற்ற ஔவையார், இரு பொருள்படும்படி, 'சேரா உன்னாடு பொன்னாடு' என்று கூறினர். உன் ஆடு, பொன் ஆடு என்றும், உன் நாடு பொன் நாடு என்றும் இரு விதமாகப்பிரித்து, உன்னுடைய ஆடு பொன்னாற் செய்யப் பட்ட ஆடு என்றும், உன்னுடைய நாடு பொன்னாடு என்றும் முறையே இரு பொருள் படும். ஔவையால் பொன்னாடு

என்று சிறப்பித்துக் கூறப்பெற்ற காரணத்தினாலேயே இன்றும் சோகாடு சிறப்புற்று விளங்குகின்றது என்று சிலர் கூறுவர்.

அக்காலத்திய கொடையாளிகளிற் சிலர் புலவர்கட்கு வேண்டுவன அளிப்பரேயன்றி, பரிசில் பெற்ற பின்னர் அப் பரிசிலர் தம்மை விட்டு அப்பாற் செல்வதை விரும்பார். அவர்கள் தம்முடன் எப்பொழுதும் இருத்தலையே விரும்புவர். அவர்களுடைய செந்தமிழ்ப் பாக்களைக் கேட்பதையே பொழுது போக்காகக் கொண்டிருந்தனர். அவர்கள் செய்யுள்களாகிய செவியுணவு இல்லாத காலத்திலேயே சிறிது வயிற்றிற்கும் ஈந்தனர். பலர் ஔவையினுடைய செய்யுளில் மயங்கி அவரை விட்டுப்பிரிய மனமில்லாதிருந்தனர். ஒரு முறை ஔவையார் பறம்பிற்கோமானும், நாத்தழும்பேறப் பாடாதாயினும் குறிப்பறிந்து, தனது தேரை முல்லைக்கொடிக்குக் கொழுகொம்பாக நிறுவியோனுமாகிய பாரியினிடத்திற் பரிசில்பெற வேண்டிச் சென்றனர். பாரியின் செவிகளில் ஔவையாரின் பாக்களாகிய தேன் புகுந்து நிறைந்து வழிந்தது. அதனால் மனமிக மகிழ்ந்த பாரி, பரிசளிக்கத் துணிந்தவன், பரிசில் பெறின் தன்னை விட்டு அவர் பிரிந்து விடுவர் என்றெண்ணிப்பரிசில் அளியாது நீட்டித்தான். பின்னர், பரிசிலளியாது நெடுநாள் நீட்டிப்பின், தம்மேற் சீற்றங்கொள்ளினுங் கொள்வரென்றெண்ணிப் பரிசிலளித்து விடுத்தான். அவனது எண்ணம் என்னவெனில், பரிசில் பெற்றுத் தன்னிருப்பிடஞ் செல்லும் ஔவையை, தனது ஏவலாளர்களைக் கொண்டு வழிமறித்து, அவர் பெற்ற பொருள்களைக் கவரும்படி செய்தால் அவர் மீண்டு தம்மிடம் வருவர் என்பதேயாம். அவ்வாறே ஔவை பரிசில் பெற்று

அவனை வாழ்த்தி அவ்வூர் நீங்கி அயலிலுள்ளதோர் காட்டின் வழியே செல்லுங்கால், பாரியின் ஏவலர் ஆண்டு நின்று வழி மறித்து, அவர் பாரியிடம் பெற்ற பொருள்களை வௌவி மறைந்தனர். ஔவையார் அது பாரி செய்த சூழ்ச்சி யென்றறியாதுமீண்டும் அவனிடம் வந்து நிகழ்ந்தன கூறினர். பாரியும், ஔவையை வழிமறித்து அவர்தம் பொருள்களை வௌவிய கள்வர்களைச் சிறிது நாட்களில் கண்டுபிடித்து, இழந்த பொருள்களை மீட்டும் அவர்க்களிப்பதாகக் கூறிச் சின்னாள் அவ்விடமே தங்குமாறு செய்து, அவருடன் இருந்து, அவர்தம் பாட்டின் இன்பத்தை நுகர்ந்தான். சின்னாட்கள் இவ்வாறு கழிந்த பின்னர் பாரி அவரிடம் உண்மையை உரைத்து, தன் குற்றம் பொறுக்கும்படி வேண்டி, மேலும் பொருள்களை அளித்து விடுத்தான்.

ஒருநாள் ஔவை, தன்னைப் பசிப்பிணி வருத்தப் பழைய னூர்க் காரியினிடத்திற் சென்று, தன் பசியைப்போக்குமாறு வேண்டினர். அவரது பசிப்பிணியைப் போக்கின்ல் அவர் விரைவிற் றன்னைவிட்டுப் பிரிந்து செல்வர் என்றெண்ணி, ஓர் உபாயஞ் செய்தான். அவர் கையிற் களைக்கொட்டொன்று ஈந்து, வேலை செய்யுமாறு செய்து பின்னரே சோறளித்தான்.

இத்தகைய வரலாறுகட்குச் சங்க விலக்கியங்களிற் சான்றுகள் காணப்படவில்லை யேனும், மழையில் நனைந்து குளிர்ச்சியால் விதிர்ப்புற்ற ஔவைக்கு, ஓர் இடைப்பெண் மனமிரங்கித் தனக்குரித்தாகியதொரு நீலச்சிற்றுடையையீந்து அவர்தமது வருத்தத்தை போக்கிய காலையில், அவளைப் புகழ்ந்து ஔவையால் பாடப்பெற்றது என்று கூறப்படும்,

" பாரி பறித்த பறியும் பழையனூக்
காரியன் றீந்த களக்கோட்டும்—சேரமான்
வாரா யெனவழைத்த வாயமையு மிம்மூன்றும்
நீலச்சிற் றுடைக்கு நேர் "

என்ற ஓர் பழஞ் செய்யுள் கேட்கப்படுகின்றமையின் அவை களை உண்மையெனக் கோடலிழுக்கன்று. புறநானூறு முதலியவற்றில் பாரியை ஔவை பாடியதாகச் செய்யுட்கள் காணப்படாமல் காலவரையறையிற் சிறிது மாறுபாடுகள் காணப்படுதல் பற்றி, இச்செய்தியைமறுப்பவர் உண்டேனும், பெரிய வள்ளல்கள் என்று பெயர் பெற்ற அவர்களிடம் இத் தகைய தன்மை அமைந்திருத்தல் சாத்தியமானது என்பதை ஒருவரும் மறுக்க மாட்டார்கள்.

அக்காலத்தில் வள்ளல்கள் பரிசிலர்கட்கு ஈவதற்குரிய பொருள்களாயிருந்தனவற்றிற் பெரும்பாலன களிறுகளே. ஆய்அண்டிரன் என்னும் கடையெழு வள்ளல்களிலொருவன் தன்னைப்பாடி வருவோர்க்கு யானைகளையே யீந்து வந்தான். எத்துணைப்பரிசிலர் வரினும் யானை யீதலை ஒழியாத அவனைப் பாடிய ஒரு புலவர்,

" விளங்குமணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீ னும்மோ "

என்று அவனது யானைக்கொடையைப் புகழ்ந்ததோடன்றி, ஒரு காட்டில் எண்ணிறந்த யானைகள் இருப்பதைக்கண்டு, இக்காடு ஆய் அண்டிரனைப்பாடியதோ ? என்று அவனைப்பாடி

யோர் எண்ணிறந்த யானைகளைப் பெறுவர் என்பதையும் வெளிப்படுத்தினர். இனி, குதிரை கட்டிய தேர், மார்பிற் பூண்ட வயங்குகாழாரம் முன்கைக் கடகம், தழலின் கண்ணே செய்யப்பட்ட பொற்றாமரையாகிய வெள்ளி நாரிற் றொடுத்த பூ, பொன், மலை மீதிருந்து கண்ணிற்கெட்டிய அளவிலிருக்கும் நிலப்பரப்பிலுள்ள நாடுகள், பெறற்கரியவுயிர் முதலியனவும் கொடைக்குரிய பொருள்களாக இருந்தன.

கொடுத்துண்டு அறியாதவர்கள் மிகத்துன்பமடைந்து பலராலுமிகழப்படுவர் என்று அவர்கள் கருதினர். விருப்பு வெறுப்பற்ற சைனத்துறவியாகிய திருத்தக்கதேவரும்,

> " மாசித் திங்கள் மாசின சின்னத் துணிமுள்ளின்
> ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப்
> பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக்
> கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார் "

என்று தமது சிந்தாமணியிற் கூறினர்.



# 3. போர்முறை.

இனிப்பண்டையோர் போர்புரியும் முறையினை யாராய்வோம். போர் என்னும் உரைகேட்டால் பெருமகிழ்வுறும் வீரர்களை நந்தஞ் செந்தமிழ் நாடு உடைத்தாயிருந்தது என்பது முன்னரே கூறப்பட்டுளது. மன்னுயிர் காக்கும் அன்புடை வேந்தற்கு மறத்துறையின் கண்ணும் அறமே நிகழல் வேண்டும் என்பது பண்டையோர் வகுத்த விதியாகும். 'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்' என்ற புறநானூற்றடியும் அவ் விதியுண்மையை வலியுறுத்தும். அதனால் இரு பெருவேந்தர் பொருவது கருதிய பின், ஒரு வேந்தன், மாற்றரசனுடைய நாட்டில் வாழும், தீங்கு செய்தல் தகாத உயிர்களை ஆண்டு நின்றகற்றுவன். ஆவும், ஆனியற் பார்ப்பன மாக்களும், பெண்டிரும், பிணியுடையோரும், தென்புலத்தார்க்கு அருங் கடன் இறுக்கும் புதல்வர்ப் பெறாதோரும் அவ்வாறு நாட்டினின்றும் அகற்றற்குரிய உயிர்களாகும். திருத்தக்கதேவரும் சீவகன் வஞ்சினம் கூறுமுகத்தான் " நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பார், என்பாரை யோம்பேனெனின் யானவனாக வென்றான் " என்று அரசனால் ஓம்பற்குரியனவாய வுயிர்களைக் கூறினர். இத்தகைய உயிர்கட்குத் தீங்கு செய்யும் அரசனுடைய அரசியலைச்சிறப்பில்லா அரசியல் என்று அவர்கள் கருதினர். தொல்காப்பியத்திற்குரை யெழுதிய உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரும், 'சிறப்புடை அரசியலாவன :— மடிந்த உள்ளத்தோனையும், மகப் பெறாதோனையும், மயிர் குலைந்தோனையும், அடிபிறக்கிட்டோனையும், பெண் பெயரோனையும், படையிழந்தோனையும், ஒத்த படையெடாதோனையும் பிறவும் இத்தன்மை யுடையோரையுங்

கொல்லாது விடுதலும், கூறிப்பொருதலும் முதலியனவாம்' என்று சிறப்புடையாசிரியரின் ற்றத்தை நன்கு விளக்கிச் சென்றனர்.

ஆகவே ஒரு நாட்டின்மேற் படையெடுத்துச் செல்லக் கருதியோன், தான் செல்லக்கருதிய அந்நாட்டில் வாழும், மேற்கூறிய தீங்கு செய்தல் தகாத உயிர்களை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டி, அந்நாட்டிடைத் தான் படையெடுக்குஞ் செய்தியைப் பறையறையச் செய்வான்.

" மண்டமர் மேல்கோடு வந்தன மின்னே
தண்டக நாட்டுறை தாபதர் நோயோர்
பெண்டிரு நம்மர ணேகுதிர் பெட்டென்
றெண்டிசை யார்ப்ப விசைப்பறை சாற்றி "

என்ற காஞ்சிப்புராண அடிகளும் படையெடுக்கக்கருதிய அரசன் பறையறைவித்ததை வெளிப்படுத்தும். மேற்கூறிய தீங்கு செய்யத்தகாத சாதிகளுள் ஆவினையொழிந்த ஏனைய பகுத்தறிவுடைய மக்கள் ' எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின் ' என்று கேட்டவளவில், அவ்விடத்தினின்றும் தாமே அகன்று, பாதுகாவலுடைய இடத்தினை யடைவர். அங்ஙனம் செல்லுதற்கேற்ற பகுத்தறிவில்லாத ஆநிரையைப் படையெடுக்கும் அரசன் காப்பாற்ற வேண்டுவது அவனுடைய கடமை யாதலான், அவ்வரசன், தான் செல்லக்கருதிய நாட்டில் வாழும் பசுக்களைக் களவில் கொண்டு வருவான். இதுவே நிரை கவர்தற்குக் காரணமாகும். இவ்வாறு நிரையைக்களவு

செய்த அரசனை, அவன் களவு செய்தான் என்ற காரணத்தால், கொடுங்கோலன் என்று எவரும் கூறுர். ஆயினைப்பாது காப்பான் வேண்டியே களவு நிகழ்த்தினமையின், அக்கள வினை நாம் மறமெனக்கோடாது, அறமெனவே கோடல் வேண்டும். இதுபற்றியே 'ஆதந்தோம்பல்' என்ற பெயரை இதற்கு அளித்தனர்.

பகைவர் நிரையைக் கவர்தற்குக் குறுநில மன்னரும், ஏனை மறவர் முதலியோரும் உரியாரவர். நிரை கவர்தல், அரசனதேவலினுலும், அரசனதேவலின்றியும் நிகழும். இவை முறையே மன்னுறுதொழில், தன்னுறுதொழில் எனப்படும். 'தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென், றன்ன விரு வகைத்தே வெட்சி' என்பது பன்னிருபடலம். நிரைகவர்தற்கு ஏற்ற காலம் இரவேயாகும். இவ்வாறு, இரவில் பகைவர் ஊரிற் சென்று ஆநிரையைக்கவரும் பொழுது, ஆநிரைகாவ லர்க்கும், அந்நிரையை கவரச்சென்ருர்க்கும் போர் நிகழும். பெரும்பாலும், நிரையைக்கவரச் சென்ரோர், அந்நிரை காவல ரைக்கொன்றே நிரையைக்கவர்வர். ஏனெனில், நிரை காவல ரும், தம்முயிர் போகும்வரையில் நிரையைக் கைவிடாராகலான் என்க.

பகைவர் நாட்டு ஆநிரை கவரச்செல்வோர் வெட்சிப் பூவினைத்தமக்கு அடையாளமாகச் சூடுவர். அக்காலத்தில் இருவேந்தர் பொருங்கால், அவர்களுடைய வீரர்கள் ஒருவர்க் கொருவர் கலந்து செய்யும் போரிடை, இருபாலர்க்கும் வேற் றுமை தெரிவான் வேண்டி அடையாளப் பூவொன்றினைச் சூடுதல் இன்றியமையாததாயிருந்தது. ஆதல்பற்றியே வெட்சி போன்ற பூக்களைச் சூடிப்பொருதனர்.

கல்வார் நிரையினைக் கவரவேண்டி வெட்சி சூடிய வெட்சியார், விரிச்சி கேட்பர். விரிச்சி என்பது நற்சொல். கருதிச் செல்லுந்தொழில் இனிது முடியுங்கொல் என்றறியும் பொருட்டே நற்சொற் கேட்டலை மரபாகக்கொண்டனர். நிரை கவர்தற்குரிய காலம் இரவாகலான், விரிச்சி போர்த்தற்குரிய காலம் மாலையும், இரவுமேயாகும். இத்தகைய நற்சொற் கோடற்குரியோர் சென்று, மலரையும் நெல்லையுந்தூவிக் கை தொழுது நின்று விரிச்சி கேட்பர் என்பது, 'நெல்லும் மலரும் தூஉய்க்கை தொழுது', 'அரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடுதூஉய்' என்ற ஆன்றோர் அடிகளால் நன்கு உணரப்படும். அன்றியும், 'நென்னீரெறிந்து விரிச்சியோர்க் குஞ் செம்முது பெண்டு', 'பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப' என்ற அடிகளால், நெல்லையும் நீரையுஞ் சொரிந்து விரிச்சி கோடற்குரியார் மிகமுதிர்ந்த பெண்டிர் என்ற செய்தியும் அறியக்கிடக்கின்றது. இங்ஙனம் நற்சொற் கேட்டலை நல்வாய்ப்புட் கேட்டல் என்றும் கூறப்படும்.

இதுவேயன்றி நிமித்திகனும் நிமித்தம் பார்த்துக்கூறுதல் உண்டு. அவ்வாறு நிமித்தம் பார்த்துக்கூறுபவனும் முதியவனே. அவன் அவ்வமயத்தில் உண்டாகும் புட்குரலின் குறிப்பை ஆராய்ந்து கூறுவன். அஃதாவது ஆந்தை முதலாகிய பறவைகளின் குரலாலும், காரி என்ற கரிக்குருவி தீய நிமித்தத்தை வெளிப்படுத்து முகத்தான் அழுதல், உள் புகுந்தழித்தல் முதலியன நிகழ்தலாலும், நிகழாமலிருத்தலாலும் இனி நிகழ்வன இவையென்று ஆராய்ந்து கூறுதல். இவர்கள் கூறும் நிமித்தம் அறிந்த பிறகு அரசன் நிரைகொணரப்படைகளை ஏவுதலும் உண்டு.

அக்காலத்தில் அரசர்களிடை ஒற்றர்கள் இருந்தன ராகலான், அவ்வொற்றர்கள், முன்னதாகவே சென்று, பகைவர்தம் பசுக்கள் நிற்கும் இடத்தையும், பசுவினுடைய அளவையும், அப்பசுக்களைக்காத்து நின்ற விற்படையின் அளவையும் அறிந்து வந்துரைப்பர் அப்படி ஒற்றி வந்துரைத்தார்க்கு வேண்டிய சிறப்புக்கள் செய்யப்படும். பின்னர் மேற்சென்று நிரைகளைக்களவு செய்யுங்கால் நிரைகாவலர் போர்க்குவரின், அவர்களுடன் பொருது நிரைகவர்வர். அவர்களோடு பொருங்கால் இரு பாலாரிலும் பலர் இறப்பர். ஆயினும் நிரைகாவலரிடையே மிகுதியான வீரர்கள் இறப்பதும், வெட்சியார் நிரை கவர்ந்துமீளலும் பெரும்பான்மையாக நிகழும்.

அவ்வாறு கவர்ந்த நிரையை வெட்சியார் சிறிதும் வருத்துதல் இன்றி, அருஞ்சுரத்து வழியே விரைவுமின்றி நடத்திமீள்வர். முன்னே ஆநிரையும், பின்னே வீரர்களும் வருதலைக் கண்ட வெட்சியாரின் மகளிர் மனமிக மகிழ்வர். அந்நிரை மன்றத்திடத்தே செலுத்தப்படும். பின்னர் 'ஒள்வாண் மலைந்தார்க்கும், ஒற்றாய்ந்துரைத்தார்க்கும், புள்வாய்ப்பச் சொன்னபுலவர்க்கும்' நிரைபகுத்து அளிக்கப்படும். இது 'பாதீடு' எனப்படும். அன்றியும் கிணையன், துடியன், விறலி, பாணன் முதலியோரும் பசுக்களைப்பெறுவர். வீரர்கள் கள்ளுண்டு களித்து ஆடுவர்.

இவ்வாறு வெட்சியாரால் நிரைகவரப்பட்ட பொழுது அவரது பகைவேந்தர் அதனைப்பொறாது எதிர்சென்று தடுத்து, அவர்கள் கைக்கொண்ட நிரையை மீட்டலும் நிகழும். அவ்விதம் நிரைமீட்போர் கரந்தைப்பூவைச் சூடுதல் மரபு. வெட்சி

யாரொடு பொருதலும், புண்ணொடு வருதலும், போர்களத் தொழிதலும் உண்டு. சில சமயங்களில், கரந்தையாரது நிரை யினுள் பிள்ளை யுள்புகுந் தழிப்பினும், புட்குரல் தீயதாக இருப்பினும் சிலவீரர்கள் அவைகளைப் பொருட்படுத்தாமற் சென்று பொருது, பசுக்களை மீட்ட முயல்வர். இவர்கள் கரந்தைப்பூவை அடையாளமாகச் சூடுவர் என்பது வெண்பா மாலையாசிரியர், உரையாசிரியர் முதலியோர் கருத்து. வெட்சி யையும், கரந்தையையும் சேர்த்து வெட்சியென்றே தொல்காப் பியர் கொண்டார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

பின்பு பகைவர் நாட்டைக்கொள்ள நினைந்து மேற்செல் வர். இவர்கள் வருவதை யறிந்த பகையரசர்களும் எதிரூன் றுவர். இவ்விருவகை வேந்தரையும் வஞ்சி வேந்தர் என்றே தொல்காப்பியர் கொண்டனர். ஆனால், வெண்பாமாலை யாசிரி யர், படையெடுத்து மேற்செல்லும் அரசன் வஞ்சிப்பூவைச் சூடுவன் என்றும், எதிரூன்றுமரசன் காஞ்சிப்பூவைச்சூடுவன் என்றும் கூறி வஞ்சி, காஞ்சி என்று தனித்தனியே திணையாக் கினர். தொல்காப்பியரும் காஞ்சி என்று ஒரு தனித்திணை கூறியிருப்பினும் அக்காஞ்சித்திணை வெண்பாமாலை ஆசிரியரின் காஞ்சித்திணையினும் வேறுபட்டது. காஞ்சி என்பதற்குத் தொல்காப்பியர் கொண்ட பொருள் 'நிலையாமை' என்பதாகும். சங்கநூல்களுள் ஒன்றாகிய பத்துப்பாட்டின் ஆறுவது பாட லாகிய மதுரைக்காஞ்சி என்ற செய்யுட்கு நச்சினார்க்கினியர் பொருளெழுதுங்கால், மதுரைக்காஞ்சி என்ற சொற்றொ டர்க்கு மதுரையிடத்து அரசற்குக்கூறிய காஞ்சி எனப் பொருள் விரித்தார். தொல்காப்பியர்,

" பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் ருனும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே "

என்று காஞ்சிக்குப் பொதுவிலக்கணம் கூறினர். எனவே வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோ ருறையும் குறிப்பினது காஞ்சித்திணை யென்பதாகும். அன்றி யும் தொல்காப்பியர், தடுத்தற்கரிய கூற்றம் ஒருகால் வந்து நம்முயிர் கொள்வான் என்பதைச் சான்றோர் சொல்வதும், இளமை கழிந்து மூப்படைந்த அறிவின்மிக்கோர், இளமை, யாக்கை, செல்வம் யாவும் நிலைநில்லாமலழியும் என்று கூறு வதும் போன்ற துறைகளை இக்காஞ்சித்திணைக்குத் துறை களாக எடுத்துக்கூறியுள்ளார். அஃதெங்ஙனமாயினும், மேற் செல்வோர் வஞ்சியரசர் என்பது யாவருக்கும் ஒப்ப முடிந் ததேயாகும். வஞ்சி யென்பது,

" எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே "

என்ற தொல்காப்பியத்தான், இருபெரு வேந்தர்க்கும் இடை யீடாகிய மண்ணிடத்துக்கொண்ட வேட்கையினன், ஒரு அரசன் மற்றோரரசனை வெல்வான்கருதி, அவன் நாட்டிலுள் ளோர் அஞ்சும்படியாக மேற்சேறலாகும் என்பதைப்பெற் ரும். ஓரரசன் மண்ணிடத்து வேட்கையானே மேற்சென்ருல், அம்மண்ணைப் பாதுகாப்பான்வேண்டிப்பகையரசனும் எதிரே வருதலின், இரு வேந்தரும் மண்மேற்கொண்ட விருப்பத் தாலேயே மேற்சென்றனராகும். எனவே, இருவரையும் வஞ்சிவேந்தர் என்று கோடலிற்றவறின்றென்க.

அக்காலத்தில், படையெடுத்துச் செல்லுமரசன், முதலில் குடையையும், வாளையும் அனுப்புதல் மரபு. அஃதெற்றிற் கோவெனின்: அரசன் போர் செய்வதற்கு, அவனாட்டினின் றும் கிளம்புவதற்கேற்ற நன் முகூர்த்தத்தை, நிமித்தம் வல்ல நிமித்திகன் ஆராய்ந்து, அரசற்கு அறிவிப்பான். அவ்வாறு குறிப்பிடப்படும் காலத்தின் வரையறை மிகக்குறைவுள்ளதாக லின், அக்குறுகிய காலத்திற்குள் அரசன் அவனாட்டினின்றும் கிளம்புதல் இயலாது. ஆதல்பற்றி அரசனானவன் அந்நன் முகூர்த்தத்தில் வாளையும், குடையையும் அரசுவாவின் மேலேற்றி, தான் மேற்செல்வதற்குரிய திசையை நோக்கி அனுப்புவன். இவையே குடைநாட்கோள், வாணாட்கோள் எனப்பெறும்.

பன்னிருபடலம் முதலிய நூல்களுள் வஞ்சிவேந்தர்க் கும் காஞ்சிவேந்தர்க்கும், பகைவர் மதிலை முற்றுகை செய்யும் உழிஞையார்க்கும் குடை நாட்கோள், வாணாட்கோள் கூறப் பட்டுள்ளன. ஆயின் தொல்காப்பியர் இந்நாட்கோளை உழிஞை யார்க்கே கூறினர். நிரைகொண்ட அரசரும், கொள்ளப்பட்ட அரசரும் மிக விரைந்து மேற்செல்ல வேண்டுமாகலின் வஞ்சி யரசர்க்கு இந்நாட்கோளைத் தொல்காப்பியர் கூறவில்லை. உழிஞையார்க்கு இஃதின்றியமையாததாகும். ஆயினும், வட திசைமேற் படையெடுத்துச் சென்றவர்களாகிய, சோழன் கரிகாற் பெருவளத்தானும், சேரன்-செங்குட்டுவனும், நன் முகூர்த்தத்தில் வாளுந்திசையும் வடதிசைப் பெயர்த்தினர் என்று சிலப்பதிகாரத்தில் நாம் அறிகின்றோம். அன்றியும் செங்குட்டுவன் வடதிசையிற் செல்லும்பொழுது வஞ்சி

கூடியே சென்றான் என்று பலவிடங்களில் இளங்கோவடிகள் குறித்துள்ளார்.

இனி, மேற்சென்ற அரசரும், அவரால் எதிர்க்கப்பெற்ற அரசரும் ஆகிய இருவகையோரும், இருவகைப் பகைப்புலத் திலும் எரி மூட்டிச்சுடுவர். பிறவேந்தரும் அவண் வந்துகூடி தத்தமக்கு விருப்பமான அரசர்க்குத் துணையாவர். ஒவ்வொரு அரசரும் தத்தமுடைய படையாளர்க்கு, அவரவர் தகுதிக்கும் வீரத்திற்கும் ஏற்ற படைக்கலங்களை அளிப்பர். அக்காலத்தில் வீரர்கட்குப்பலவிதச் சிறப்புகள் செய்வதும் வழக்கமாயிருந் தது. அஃதாவது பல பட்டங்களை யளித்தல். அவை ஏனாதி, காவிதி, முதலிய பட்டங்களாம். இத்தகைய பட்டங்களே யன்றி, காடு, ஊர் முதலியனவும் அவ்வீரர்கள் பெறுவர்.

இங்ஙனம் அரசனுற சிறபபடைநத ஒருவனை ஒருபடைக் குத்தலைவனுக்கி, அவன் சொல்லும் விதமே ஏனைய வீரர்கள் கேட்டல் வேண்டுமென்று முடிவுசெய்வர். இவ்வாறு ஒரு படைப்பகுதிக்குத்தலைவனுகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவன் தானே தன்னுடைய வீரத்தையும்,போர்ச்செயலையும் எடுத்துக் கூறுவன். அன்றி, அப்படையிலுள்ள வேறு எவரேனும் அத்தலைவனின் வீரத்தை எடுத்துக்கூறுதலும் உண்டு. ஒருவன் தனது வீரத்தைத்தானே எடுத்துக்கூறுதல் ஏற்றதோ? அது தற்புகழ்தல் என்னும் குற்றத்துட்படாதோவெனின் படா தாம். என்னெனின், எதிர்த்துவரும் வீரர், இவ்வீரனின் வீரத்தை அறியாதவர்களாய் இருப்பினும் இருக்கலாம். ஆத லின், அத்தகையோர்கள் அறிந்துகொள்வான் அவ்வாறு எடுத்துக்கூறுதல் அமைவுடைத்தாம். தன்னுடையாற்றல்

உணாரிடையே தற்புகழ்தல் குற்றமின்று என்பது ஆன்ஞோர் கருத்தாகும்.

மேற்கூறிய சிறப்புகளைப்பெற்று ஒருசார் படைக்குத் தலைவனாகிய ஒரு வீரன், பகைவர்கள் எவரையும் மதியாது மேற்செல்வான். சில சமயங்களில் அவ்வீரனின் படையோர் பகைவர் போர்க்கு ஆற்றாது தளர்ந்து சிதறிப் பின்வாங்குவர். அதுகண்ட பகைவரும் பெரிய வெள்ளம் பெயர்ந்து வருவதுபோல மேலே போதுவர். அப்பொழுது, விசைப்புனலைக் கல்லணையானது தடுத்து நின்றாற்போல, சிறப்பெய்திய அவ்வீரன் ஒருவனாகவே, எதிர்வரும் அப்படைகளை அஞ்சாது தடுத்து நிற்பான்.

போர்தலைக்கொண்ட பிற்றை நாளில், அரசனே படையாளர் யாவர்க்கும் உபசாரம் செய்யக்கருதி, அவர்களுக்கு உண்டியளிப்பான். இதற்குப் பெருஞ்சோற்று நிலையென்று பெயர். வடவாசர்களை வென்று வணக்குவான் வடநாடு சென்ற சேரன்-செங்குட்டுவனும் தன் படைவீரர்க்குப்பெருஞ் சோறளித்த பின்னர் மேற்சென்றான் என்று சிலப்பதிகாரத் தாலும் அறிகின்றோம். இவ்வண்ணம் பெருஞ்சோற்று நிலை கொண்ட இருபெரு வேந்தருள், ஒருவன், மாற்றானுடைய வீரத்தின் மிகைகண்டு அஞ்சித்திறையளித்துப் பெயர்தலும் நிகழும்.

போர் நிகழுங்கால், சிலர் தம் அரசனுடைய புகழைப் பலபடக்கூறிப் பகைவர் நாடழிவதற்கும் இரங்குவர். போர் முடிந்த பின்னர், தோற்றும் வென்றும் மீண்ட இருவரசரும்,

தம் படையாளரிடைப் புகுந்து, போரில் கணையும் வேலும் பாய்தலினுண்டான புண்ணுடையோர்க்கு வேண்டிய பொருள்களைக்கொடுப்பர். அவர்களுடன் இனிமையாய்ப்பேசுவர். அவர்களைத் தழுவிக்கொள்வர். இறந்தவர் மக்கட்கும் வேண்டிய பொருள்களைக்கொடுப்பர். வடவரசரை வென்ற செங்குட்டுவன் கங்கைக்கரையிலமைந்த பாடியின்கண், போரில் இறந்தோர் மைந்தரும், போரில் வெற்றிகொண்டோரும் வருகதாமெனக்கூறி, அவர்கட்கு வாகைப் பொலந்தோடு பெருநாளமயம் பிறக்கிடக் கொடுத்தான் என்ற சிலப்பதிகாரத் தாலும் இதன் உண்மையறியலாகும்.

காஞ்சி என்பதற்கு எதிரூன்றல் என்று வெண்பாமாலை யாசிரியர் கொண்டார் என்பது முன்னரே கூறப்பட்டது. அவர் அதுபற்றிக் கூறியிருப்பன: 'வஞ்சி வேந்தரால் அடர்க்கப்பெறும் காஞ்சி யரசனும் அவனுடைய படையினரும், வேற்று மன்னரும் படையாளரும் மேலே வந்துவிட, காஞ்சிப்பூவைச்சூடித் தம் நாட்டைக்காவல்புரிய எண்ணுவர். அவர்கள் வருதற்கியன்ற வழிகளைக் காவல்புரிவர். அரசன், வீரர்கட்கு அவரவர் தகுதிக்கேற்ற படைக்கலங்களை வழங்குவான். அவ்வாறு அரசனால் சிறந்த படைக்கலம்பெற்ற வீரன் தன்னுடைய மேம்பாட்டை நினைந்து மகிழ்வன். காரணமென்னையெனில், தன்னையொத்த பலவீரர்கள் இருக்க, அவர்கட்கு அச்சிறந்த படையை அளியாது, தனக்கே வழங்கினன் என்றதனால் ஆகும். இந்நிலையில் பகைவராகிய வஞ்சி வீரரிற் சிலர் போர்க்கு அறைகூவி யழைப்பர். அதனைப் பொறாத காஞ்சியரசன், தன் வாளையும், குடையையும் புறவீடு விடுத்துப் போர்க்கெழுவான். காஞ்சியார் வஞ்சினங்கள் பல

கூறுவர். (இன்னது செய்தல் ஆற்றேனுயின் இதுவாகியர் என்று கூறிப்பொருதலே வஞ்சினக் காஞ்சியாகும். வஞ்சினக் காஞ்சியைப்பற்றியும், வஞ்சினங்கூறுமாற்றையும் தமிழர் வீர வாழ்க்கையிற் பாக்கக்கூறினும்) பின்னர் போரைஏற்றுக்கொள் வதற்கு அரசன் கொடுத்த பூவினைக் கைக்கொண்டு போர் புரிவர்.

இங்ஙனம் போர்புரியுங்கால், காஞ்சி வீரரில் ஒரு வீரன், வஞ்சியாரிற் றலைசிறந்தவீரரிற் றலையானவன் றலையைத் தடிந்து அத்தலையைக் கொடுபோந்து, தன் றலைவனிடங் காட்டுதலும் உண்டு. அவ்வாறு தலைபொடு வந்தாற்கு அரசன் வெறுக்கை வெறுக்கவளிப்பான். சில சமயங்களில், வீரன் ஒருவன் இறந்ததை அயலார் கூறக்கேட்டுணர்ந்த, அவ்வீரனின் மனை யாள் போர்க்களத்திற்புகுவாள்; தன்கணவன் தலையைத்தேடி எடுப்பாள்; அத்தலையைத் தன்மார்புடன் சேர்த்துத் தழுவு வாள்; தன் முகத்துடன் சேர்ப்பாள்; கண்ணீர் பெருக்கு வாள்; கழிபெருந்துன்பமுற்றுழல்வாள்; பின்னர், தன்னுயிர் கொண்டு தன் கணவன் உயிரைத்தேடுபவள்போல உயிரை விடுவாள். சிலபெண்டிர் தம் கணவரொடு எரியிற் புகுவர். சிலர், தம்கணவர் உயிர்போதற்குக் காரணமாயிருந்தவேலையே, அவர் தம் மார்பினின்றும் பறித்து, தம்மார்பிற்செலுத்தி, உயிரைப் போக்கிக்கொள்வர்.

வீரர்களே போர்புரிதலன்றி, வேந்தரும் பகைவர் நடுங்க, படையுட்புகுந்து உழக்குதலும் உண்டு. இச்செய்தி,

> "வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்
> கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது"

என்று செங்குட்டுவனை நோக்கி, வில்லவன் கோதையென்னு மமைச்சன் கூறுவதாக வரும் சிலப்பதிகார அடிகளாலும் உணரலாம்.

சில வீரர், பகைவருடன் பொருது, அவர் தம் வேலால் மார்பிற் புண்பெறுவர். அப்புண் பெரிதாயிருந்து மேற் கொண்டு போர்செய்ய இயலாத நிலையில் ஒருவன் இருப்பானு யின், அவன் தன் புண்ணைத் தானே பிளந்துகொண்டு உயிர் விடுவான். போரில் இறந்து வீர சுவர்க்கம் அடைந்தவனு டைய வீரத்தையும், பண்பினையும் ஏத்திப் பலர் வருந்துதலும் உண்டு. அன்றியும், மிகவீரச்செயல்கள் செய்து இறந்த ஒரு வனுடைய உடலைச் சிலபேய்கள் பாதுகாக்கும் என்றும், சில பேய்கள் புலாலிடத்தே குற்றுயிருடன் கிடக்கும் வீரனையச்சு றுத்தும் என்றும், சில அங்குக்கிடக்கும் வீரனுடைய புண் ணைத்தீண்டும் என்றும், சில வீரத்தன்மையையுடைய அவ னது புண்ணைத் தீண்டுதற்கு அஞ்சிப்பெயர்ந்து செல்லும் என் றும் பலபடக் கூறப்பட்டுளது. போர்முடிந்தபின் அரசன், போர்செய்த மைந்துடைமைந்தர் யாவர்க்கும் மதுவை மகிழ் தூங்க அளிப்பான்.

சில சமயங்களில் முடியுடைப் பேரரசனொருவன், ஒரு சிற்றரசனுடைய மகளை மணம் பேசுவான். அம்முடியரசன், தன்னிலும் தாழ்ந்தவனாகிய சிற்றரசனுடைய மகளை மணம் புரிதல் எளிதென்று கருதி இகழ்ந்து பேசி, உயர்ந்தோன் இழிந்தோனொருவனைக் கேட்கும்படியான மிக்கோன் இரப் புரையாகிய, 'கொடு' என்ற சொல்லினால் கேட்பானாயின், சிற்றரசன் அதனைப்பொறாது, அப்பேரரசனுடன் போர்புரி வான். இது மகட்பாற் காஞ்சி யெனப்படும்.

இனி, ஒரு அரசன் மற்றொரு அரசனுடைய கோட்டை யைக் கைக்கொள்ள எண்ணி அக்கோட்டையை முற்றுகை யிடுவான். கோட்டைக்குள்ளிருக்கும் அரசன் அக்கோட் டையைப் பகைவன் கைக்கொள்ளாதவாறு காப்பாற்றுவான். வெண்பாமாலையாசிரியர் முற்றுபவன் உழிஞைப்பூவை யணி வான் என்றுகூறி அதனை உழிஞைத்திணையென்றும், முற்றப் படுபவன் நொச்சிப்பூவைச் சூடுவான் என்றுரைத்து அதனை நொச்சித்திணையென்றும் கூறினர். ஆனால் தொல்காப்பியர் நொச்சியென ஒரு தனித்திணைகொள்ளாது,இரண்டும் உழிஞை யென்றே ஒரு திணையாக்கினர்.

ஒரு அரசனுடைய நாட்டைச்சுற்றி மதில்களும், மதில் கட்குப்புறத்தே இடங்கர் பலகிடக்கும் கிடங்குகள் சூழ்ந் துமிருக்கும். அவற்றின் புறத்தே, மதிலை யணுகவியலாவாறு முட்காடுகளையும் ஏற்படுத்தியிருப்பர். தோட்டி, முள் முதலி யன பதித்த காவற்காடுகளாலும் சூழப்பட்டிருக்கும். பகை வர்களின்மேல் தானகவே அம்புகளை யெய்யும் பொறிகளும், இன்னும் பல்வித வஞ்சனைகள் செய்யும் பொறிகளும் யவனர் களால் இயற்றப் பெற்றிருக்கும். கற்பொறியும், பாம்பும், கனலும், கடிகுரங்கும், வேலும் உடையனவாயிருக்கும். அம் மதில்களின் வாயிற் கோபுரங்கள் எழு, சீப்பு முதலியவற்றால் வழுவின்றியமைக்கப்பெற்றனவாகும்.

இன்ன தன்மை வாய்ந்த மதிலைக் கொள்வெண்ணிச் செல்லுமரசன், முன்னே உழிஞைக்குக் குடைநாட் கோளும் வாணாட் கோளும் இன்றியமையாதது என்று கூறப்பட்ட படி, குடையையும், வாளையும், ஓர் நன்னளில் புறவீடு விடுப்

பான். கோட்டை யகத்தேயுள்ள வேந்தனும், முற்று விடல் வேண்டி வரும்பொழுது, இவ்வாறே குடையையும், வாளை யும் முன் செல்ல விடுப்பான்.

உழிஞையாரின்படையிடத்தே, பொன்னாற் செய்த உழிஞை மாலையைச்சூடி, ஆடு வெட்டியிடும் பலியை நுகரும் படியான, வாரால் கட்டப்பட்ட வீரமுரசம் மழைபோல் முழங்கா நிற்க, அரசன் தன் படையுடன் பகைவர் மதிலை யடைந்து அதனை முற்றுவான். இவ்வாறு மதிலை முற்றியிருக் கும் வேந்தன், அந்நாட்டினைத்தான் கைக்கொள்வதற்கு முன் பே, அந்நாடு தன்னைச் சேர்ந்துவிட்டது போலவெண்ணி, தன் மனதிற்கிசைந்த எவர்க்கேனும், அதனை அளிப்பதாக வாக்குறுதி செய்து விடுவான். இதனைக் கொள்ளார்தேஎங் குறித்த கொற்றம் என்பர் தொல்காப்பியர். இச்செய்தி,

ஆரெயி லவர்கட் டாகவு நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய் "

என்ற புறப்பாட்டின் அடிகளால் அறியலாம். அன்றியும், இராமன், தன் தம்பி இலக்குவனோடும், சுக்கிரீவன் அநுமன் முதலிய வானர வீரர்களோடும் சேர்ந்து, இராவணனோடு போர் புரிவதுபற்றிச் சூழ்ந்திருக்கையில், இராவணன் தம்பி யாகிய வீடணன், இராமனிடம் அடைக்கலமென்று வந்தான். பலர் தடுத்துங் கேளாது, வீடணற்கடைக்கல மளித்துப் பின்னர், இராமன் வீடணனுக்குத் தேறுதல் கூறுவதாகக் கம்பர்,

" ஆழியா னவனை நோக்கி யருள்சுரந் துவகை தூண்ட
ஏழினோ டேழாய் நின்ற வுலகுமென் பெயரு மெந்நாள்
வாழுநா ளன்று காறும் வாளெயிற் றரக்கர் வைகும்
தாழ்கட லிலங்கைச் செல்வம் நின்னதே தந்தே
னென்றான் "

என்று கூறியுள்ளார். போர் செய்து, இராவணனைக் கொன்று வாகை சூடிய பிறகே தனக்குரிமையாகக் கூடிய இலங்கையை போர் செய்வதற்கு முன்பே, இராமன் வீடணனை நோக்கி, 'இலங்கைச் செல்வம் நின்னதே, தந்தேன்' என்றான். கம்பர் இவ்வாறு இத்துறையை யமைத்துச் செய்யுள் செய்திருப்பதாலும், பண்டைத் தமிழரசரிடை, நாட்டைக் கொள்வதற்கு முன்பே, அதனை வேண்டியோர்க்குக் கொடுத்தலைக் குறித்த கொற்ற முண்மையைத் தெளியலாம்.

இவ்வாறு குறித்த அக்குறிப்பினை அவ்வரசன் முடித்தே தீர்வன். ஏனெனில், பகைவர் நிலத்தைக் கைக்கொள்வதற் கேற்ற படைப்பெருமையும், வீரமும் உடைய ஒருவனே அவ்வாறு கூறுவானே யொழிய, ஏனையோர் அவ்வாறு கூறாராகலான். இத்தகைய அரசனுடைய வென்றிச் சிறப்பினை அவனுடைய படைத்தலைவரும், பகையரசனிடம் தூது செல்வோரும் பல பட வெடுத்துரைப்பார். பின்பு அம்மதிலை 'இற்றைப்பகலுள் இவ்வெயிலை அழித்து அதனகம்புகுவேன் அவ் வெயிலகம் புக்கன்றிப் போனகங் கைக்கொள்ளேன்' என்று கூறி, மதிலகத்தோர் அம்புகளை விலக்குதற்கு, கண்ணடி நிரைத்த கிடுகு படைகளையும், கேடகங்களையும் கொண்டு அம் மதிலைச் சேர்வான்.

அது பொழுது மதிலினகத்தே இருக்கும் அரசனுடைய படை வீரரில் ஒருவரேனும், அன்றி அவ்வரசனுடைய உயிர் நண்பராயிருக்கும் புலவரேனும், தம் அரசனுடைய குறைவில்லாத செல்வத்தைப் புறத்தே முற்றியிருந்தோருக்கு அறிவிப்பார். குறைவில்லாத செல்வமாவன, படை குடி கூழ் அமைச்சு நட்பும், நீர் நிலையும், அவனுக்குப் பாதுகாவலாயுள்ள சிறந்த பொருள்களுமாகும். ஒரு கோட்டையை முற்றுகை யிட்டால், வெளியூர்களிலிருந்து எவ்விதமான பண்டமும் அந்நாட்டிற்குட் செலவிடாது தடுத்து விடுவதே முற்றுவோரின் முதற் செய்கையாகும். அங்ஙனம் செய்யின், கோட்டையினுள்ளிருக்கும் அகத்தோர்க்கு உணவுப் பொருள் அஃகி, அவர்கள் உயிரை விட்டு விடுவர் அல்லது தமக்கு அடங்கித் தம்மிடம் வந்து தாழ்வர் என்பதே அப்படி முற்றுவதன் கருத்தாகும்.

ஆனால் மதிலினகத்தோரிற் சிலர் தாம் இவ்வாறு முற்றுகை யிடப்பட்டிருப்பதைப் பற்றிச் சிறிதும் கவலுறார். ஏனெனில் தமது உள் நாட்டிலுள்ள இயற்கைச் செல்வ மிகுதியினாலேயாம். பறம்பிற் கோமான் பாரி முடியுடை மன்னர் மூவரில் எவருக்கும் தன்னுடைய பெண்களை மண முடிக்க இசைந்தானில்லை. இதனைப் பொறாத மூவேந்தரும் கடுஞ்சினங்கொண்டு பாரியின் பறம்பை முற்றினர். ஆனால் அகத்தோனாகிய பாரி அது பற்றிச் சிறிதும் கலங்கவில்லை, கவலைப்படவுமில்லை. அவனது காடு இயற்கை வளத்தினால் இலக்கமுற்றிருந்தது. ஆதல் பற்றியே பாரி பனிப்பின்றி யிருந்தான். இவனது நாட்டின் செல்வ நிலையையும், இவனது சிறப்பையும், புறத்தே முற்றியிருந்தார்க்கு அறிவிப்பான்

வேண்டி அவனது உயிர் நண்பரும், பெரும் புலவருமாகிய கபிலர், மதிலின் புறத்தே வந்து, மூவேந்தரை நோக்கி, ' முடிமன்னர்காள் ! நீவிர் மூவிரும் கூடி எத்துணைக்காலம் எமது பாரியினது பறம்பை முற்றியிருப்பினும், சிறிதும் கவலையுறேம் ; எம் நாடு உழவர் உழாதன நான்கு பய னுடைத்து. முதலாவது மூங்கிலினுடைய நெல் விளையும். இரண்டாவது இனிய சுளையினையுடைய பலவினது பழம் பழுக்கும். மூன்றாவது வள்ளிக்கிழங்கு எங்கும் இருக்கும். நான்காவது தேனடையினின்றும் தேன் சொரிந்து கொண்டிருக்கும். இந் நான்கும் எக் காலத்திலும் குறைவுபடா. அன்றியும், எங்கள் மலையில் சுனைகள் விண் மீன்கள் போல் அளவற்றன. யாம் வெளியூர்களிலிருந்து பொருள்களை எதிர்பாரோம். ஆதலின் நீவிர் முற்றுகையிடுவ தால் ஒரு பயனுமடைய மாட்டீர்கள் ' என்று கூறினார். இச் செய்தியினின்றும், அகத்தோரிற்சிலர் தாம் முற்றப்பட் டிருப்பதுபற்றிக் கவலையுறார் என்பதையும், அவரது செல் வத்தைப் புறத்தோர்க்கு அறிவிப்பதும் உண்டு என்பதையும் நாம் உணரலாகும். அகத்தோர் இங்ஙனம் புறத்தோ ரினும் செல்வத்தால் மேம்படுதலேயன்றி, முற்றுகையிட்ட அரசர்களைப் போரில் வென்று, அவர்களை ஓட்டுதலும் உண்டு.

இனி அகத்தோர்க்கும், புறத்தோர்க்கும் பொதுவான சில நிகழ்ச்சிகளைக் கூறுவாம். புறத்தோர் மதிலின் மேல் ஏறுதற் பொருட்டு ஏணிகளை நிறுவுவர். அவ் வேணிகள் மீதிடு பலகையோடு மடுத்துச் செய்யப்பட்டனவாம். அங்ஙனம் நிறுவப்பட்ட ஏணிகளில் ஏறும் பகைவரை ஏற

விடாது அகத்தோர் தடுத்துப் போர் புரிவர். சிலர் அவ் வேணிகளின் வழியாகக் கீழே இறங்கியும் போர் புரிவர். இவ்வாறு புறமதிலின் கண்ணும், இடைமதிலின் கண்ணும் போர் நடைபெறும். பின்னர் ஒரு வேந்தன் நிற்குமிடத்தை மற்றொரு வேந்தன் கைக்கொள்ள முயல்வான்.

மதிலையடைந்த புறத்தோர் அதனை விட்டுச்செல்ல விரும்பாது அகழியின் அப்பால் நின்று, நாவாய் தோணி இவற்றைச்சார்ந்து இப்பால் வரவும், அகத்தோர் அவர்கள் அகழியைத்தாண்டித் தாம் நிற்கும் கரைக்கு வாரா வண்ண மும், நீரிடைப் பரந்து கிடக்கும் நீர்ப்பாசி போல இருந்து போர் செய்வர். இங்ஙனம் இவ்விருவர்க்கும் நீர்ப்பாசியை உவமையாகக் கூறியது ஏனென்றால் பாசிபோல் நீங்காமல் நிற்றலினாலும், இருவரும் ஒதுங்கியும், தூர்ந்தும் போர் செய்தலினாலும் ஆகும். இவ்வாறு போர் செய்து, மதிலைத் தாண்டி யுட்சென்று கோயிற் புரிசைகள் மீது நின்றும் இரு வர் படைகளும் போர் செய்யா நிற்கும்.

இவ்வாறு போர் செய்த பின் கொல்லப்பட்ட அரச னுடைய முடிக்கலம் முதலியனவற்றை, கொன்ற வேந்தன் கைக்கொண்டு, இறந்து பட்ட அரசனுடைய பெயரால் முடி புனைந்து நீராடுவான். பின்னர் அவ்வாறு வெல்வதற்கும், முடி புனைதற்கும் காரணமாயிருந்த வாளையும் நீரும், மலருஞ் சேர்த்து மஞ்சன மாட்டுவான். வாளிற்கேயன்றி வேற்கும் சிற பான்மையோர் இங்ஙனம் நீராட்டுவர். அரசன் முடி புனைந்து நீராடுதல் மண்ணு மங்கலம் என்றும், வாளை மஞ்சன மாட்டுதல் வாண்மங்கலம் என்றும் பெயர் பெறும். இவ்விரு

வகை மங்கலமும் நிகழ்ந்த பின்னர், அவ்வரசன், தன் படைக் கடற்கெல்லாம் பெருஞ் சிறப்புச் செய்வான் வேண்டி அவர்கள் யாவரையும் ஒருங்கு கூட்டுவான்.

இங்ஙனம் போர் முடிந்த பின் பண்டையரசர்களிடை உழுது வித்திடுதல் என்ற ஒரு வழக்கம் இருந்ததாகத் தெரிகிறது. இஃதகத்தோர்க்கின்றிப் புறத்தோர்க்குரிய செய்கையாகும். பகைவர்களை நூறி, மாடங்களை அழித்து வெளி செய்து, நாட்டினுள் நுழைவர். ஆண்டு நின்றும் கொள்ளற்குரிய வளங்களைக் கொள்ளை கொள்வர். பின்னர் வெள்வாய்க்கழுதைகளை ஏரிற் பூட்டி, கையின்கணுள்ள வாளையேனும், வேலையேனும் கோலாகக் கொண்டு அந் நிலத்தை உழுது வெள்ளை வரகும், கொள்ளும் வித்துவர். கவடி வித்துதல் என்றும் இதற்குப் பெயர். சில சமயங்களில் அகத்தோன் பணிந்து திறை கொடுக்க, அது கொண்டு, சினந் தணிந்து மீளுதலும் உண்டு.

சில அரசர்கள் உலகம் யாவர்க்கும் பொது என்பதைப் பொருது, தமது வலியினை உலகிலுள்ளோர் உயர்த்திப் புகழ்ந்து கூறுதலையே தமக்குப் பெறு பொருளாகக்கருதி மேற் செல்வர். அங்ஙனம் வந்த ஒரு வேந்தனை மாற்று வேந்தனும் அவன் கருதிய வலியினையே தானும் பொருளாகக் கொண்டு எதிர் சென்று அவனுடன் பொருவான். இவ்வாறு போர் புரியும் அரசர் இருவரும் தும்பைப்பூவைச் சூடுதல் மரபாதலின், இதனைத் தும்பைத்திணையென்பர். போர் புரிவோர் தும்பைப்பூவினைச்சூடுவர் என்பது யாவர்க்கும் உடன்பாடாகும். வலிமையைப் பொருளாகக் கொண்டு போர் புரித

லே தும்பைக்குப் பொது விலக்கணம் ஆகும். ஆயின் யாவற்றினும் சிறந்த இரண்டு செய்கைகளை, இத் தும்பைக்குச் சிறப்பிலக்கணமாகக் கூறுவர் தொல்காப்பியர். அவ்விரண்டும் பின் வருமாறு :— (1) பலர் சேர்ந்து போர் புரியுங்கால் ஒரு வீரன் யாவரினும் மேலாக வீரத்துடன் போர் புரிவான். அத்தகைய வீரனருகில் நெருங்குதற்கும் யாவரும் அஞ்சுவர். ஆதலால் அவ்வினையனுகாது, சேய்மையில் நின்ற பலர் அம்பானெய்தும், வேல் கொண்டெறிந்தும், அவனுடைய உயிரைப் போக்கமுயல்வர். இத்தகைய படைக்கலங்கள் ஒரு சேர ஒருவனுடைய மெய்யிற் செறிதலின் அவன் குற்றுயிருடன் இருப்பான். ஆயின் அவனது வீரத்தால் அவனது உடம்பானது, சிறிதும் துளங்காது நிலையாக நிற்கும்.

(2) சில சமயங்களில் வாள் சக்கரம் முதலியவற்றால் ஒரு வீரன் தாக்கப்பட்டபொழுது, அவற்றால் ஏறுண்ட அவனது தலையேயாயினும் உடலேயாயினும் நிலத்தைத் தீண்டாது எழுந்து ஆடும். இதனை அட்டையாடல் என்றும் கூறுவர். அட்டை இரண்டாகத் துண்டிக்கப்பட்ட பொழுதும் ஊரும். அது போலத் தலையும், உடம்பும்வேறு படுத்தப்பட்டும் உடம்பு ஆடுதலின் இஃதட்டையாடல் என்ற பெயரைப் பெற்றது.

போர் புரிதலே தும்பைக்கு இலக்கணம் என்பது முன்னரே கூறப்பட்டது. நிரை கவரும் பொழுதும், மீட்கும் பொழுதும் நிகழும் போர் வெட்சிப் புறத்துத் தும்பையாம். பகைவர் நாட்டைக் கொள்ளக் கருதிச் சென்றபொழுது நிகழும் போர் வஞ்சிப்புறத்துத் தும்பையாம். அரணை முற்

றும் பொழுது நிகழும் போர் உழிஞைப் புறத்துத் தும்பை யாம். ஆனால் இத் தும்பைத்திணைக்கும் அவற்றிற்கும் வேறு பாடு உண்டு. இத் தும்பைத்திணை நாடு, மதில் இவை களில் மேல் விருப்பமின்றி, தம்முடைய வலிமையை வெளிப் படுத்தவும், துறக்கத்தை வேட்டும் போர் புரிவதாம்.

போர்புரியும் பொழுது காலாட் படை வீரர்கள் மிகுந்த கோபங்கொண்டு, தம்மைத் தலைவர்கள் ஏவாதிருக்கும் பொழுதே போர் புரிவர். இது தானை மறம் எனப்படும். யானைகளும் பாகர் இல்லாதிருக்கும் பொழுதே மதமிகுதியாற் கதமிகுந்து, பகைவர் படையினூடே சென்று பலரைக் கொல் லும். இது யானை மறம் எனப்படும். இவ்வாறே குதிரை கள் தாமாகவே பகைவர் படையிற் பலரைக்கொல்லுதல் குதி ரை மறம் எனப்படும். குதிரைகள் கட்டப்பட்டிருந்தாலன்றி, தேர் தானகவே செல்லாமையால் தேர்க்கு மறம் இல்லை.

திருவிழாவிற்கு மகிழ்ச்சியொடு செல்வோர் போலப் படை வீரர்கள் மகிழ்ச்சியொடு மிகைத்தெழுவர். அங்ஙனம் மிகைத்தெழுந்த இரண்டரசர்களின் படை வீரர்களும் தலை மயங்கிப் போர் புரிவர். மழை பெய்யுங்கால் உண்டாகிய மொக்குள் ஒரு கணத்தில் மறைவதுபோல, வீரர்கள் அழிவர். தகருந்தகரும் மோதுமாறுபோல முகமுகஞ் சிதர முட்டு வோர் பலர். முட்டியின் முறை முறை குத்துவோர் பலர். தன் கை வேலைக்களிற்றொடு போக்கி வெறுங்கையுடன் மீளு மொரு வீரன் பகைவனை எறிதற்கு வேறு வேலின்மையின் மயங்கானாய், பகைவரான் எறியப்பட்டுத் தன் மார்பகத்தே அழுந்திக் கிடக்கும் வேலைப்பறித்துக் கைக்கொண்டு மகிழுவான்.

தன் தலைவன் வீரத்தை எடுத்துரைக்கப் புகுந்த ஒரு வீரன், அத் தலைவனை எதிர்ந்த பகைவரை நோக்கி, 'தெவ்விர்! என்னை முன் நில்லன்மின்; ஏனெனில், என்னை முன்னின்று பொருது நடுகலாய் நின்றவர் பலராவர்' என்பான்.

இங்ஙனம் தன் படையாளர் போர் செய்வதைப்பார்த்த அரசன், தானும் போர் செய்யக்கருதி அவர்க்கு முன்னே சென்று போர்புரிவான். சிலசமயங்களில் அவ்வரசனைப் பகைவரிற் பலர் வந்து சூழ்ந்து போர்புரிவர். அப்பொழுது அவ்வரசனுடைய படைத்தலைவனாயினும், அவனுக்குத்துணை யாகவந்த அரசனாயினும், தான் செய்யும் போரை நிறுத்தி விட்டு வேகமாகவந்து, அரசனைச் சூழ்ந்த பகைவர்களுடன் போர் செய்வான். அன்றியும், ஒருபடையில் உள்ள அரசனை யேனும், ஒரு தலைவனையேனும், அப்படையிற் சிறந்த ஒரு வீரனையேனும் குறித்து, மாற்றார் வேல் ஒன்று வருமாயின் அவ்வேலால் அரசனோ, அன்றி அத்தலைவனோ இறத்தலை விரும்பாத மற்றொரு வீரன், அவ்வேலைத்தன்மேல் ஏற்றுக் கொள்ளவேண்டி, மழை பெய்யுமிடத்து மழைத்துளிகள் மேல் விழாது பாது காக்கும் குடையைப்போல முன்சென்று, அவ் வேலை மறைத்துத் தன்மேல் ஏற்பான். இதனைப்பின்வரும் ஓர் செய்தியால் நன்குணரலாகும்.

இலங்கையில் இராமவிராவணப்போர் நடைபெறுகின்றது. இலக்குவனும், சுக்கிரீவன் முதலிய வானரப்படைகளும், இராமனை அடைக்கலமாக அடைந்த வீடணனும் இராமனைச் சூழ்ந்திருக்கின்றனர். இலக்குவன் இராவணனுடன் பொருது அவனுக்குப்பலவித இடையூறுகள் செய்தான். இராவணன்

இலக்குவனது மிகையான் அவன்மேற் சீற்றமிகக்கொண்ட போதினும், அச்சீற்றத்தினும் பதின்மடங்கு சீற்றம் வீடணன் மேற்கொண்டான். ஏனெனின், தன்னைவிட்டுப் பிரிந்ததோடன்றி பகைவர்க்கு உதவியாயுமிருக்கின்றானென்பதனாலாம். ஆதலால் அவ்வீடணன் உயிரைப்போக்கக் கருதித்தன் கையின்கணிருந்த வேலை எறிந்தான். அவ்வேல், எவர்மேற் படினும், அவர்தம் உயிர் நீங்குதல் திண்ணம். அத்தன்மை வாய்ந்த அவ்வேல் வீடணனை நோக்கி வருவதைப்பார்த்த இலக்குவன் அவ் வேலைத் தன்மார்பிலேற்க முன் சென்றான். அவ்வாறு சென்ற இலக்குவற்கு முன் வீடணன் புகுந்தான். அவ்விருவரையும் விலக்கி அங்கதன் மேற்சென்றான். அவனையும் விலக்கி சுக்கிரீவன் செல்ல, அவனையுந்தாண்டி அநுமன் முன் கடுகினன். அடைக்கலம் புகுந்தவனழியப் பார்த்தல் தகாது என்பதனை மனதிற்கொண்ட விலக்குவன், ஏனையோர் இறத்தலையும் விரும்பாது, யாவரையும் விலக்கி முந்துறச் சென்று அவ்வேலைத் தன் மார்பில் ஏற்றான்.

இனி, இருபெருவேந்தர்தம் படைத்தலைவரும் தம்மிற் பொருது, இருவரும் ஒருசேர இறத்தலும் உண்டு. ஒரு அரசன்படை மாற்றரசன் படைக்கு அஞ்சி முதுகிடும். அப்படிப்பட்ட சில சமயங்களில் முதுகிட்ட சேனையைச்சேர்ந்த ஓர் வீரன் சிறிதும் அஞ்சாமல், அவ்விடத்தினின்றும் சிறிதும் பெயரானாய், பகைவர்மேல் வருதலை, தாங்கின எருமைக்கடாப் போலத்தடுத்து நிற்பான். கைப்படையைப் பகைவர்மேல் வழங்கிய ஓர் வீரன், தன்மெய்யினாற் போர்செய்தற்கும் உரியன். படையின்றி, மெய்யாற் செய்யும் இப்போரினை மற்போர் என்றும் கூறுவர்.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரில் ஒருங்கு இறந்தது போல் இருபெருவேந்தர் இறத்தலும், அவரவர்க் குத்துணையாகிய வேந்தரும், தானைத்தலைவரும், படையும் ஒருசேர இறந்துபடுதலும் உண்டு. ஒரு அரசன் மாற்றரசனுடைய வஞ்சனையால் இறந்து விடுவானாயின் இறந்த வேந்தனுடைய படைத்தலைவன் கோபமிகுந்து, எல்லோரையும் கொன்று நல்ல புகழையடைவான். கீழ்க்காணும் பாரதச் செய்தி இதனை வலியுறுத்தும்.

பாண்டவரும் குருக்களும் தம்மிற் பொருதனர். இருபாலிடையும் பலர் இறப்பினும், துரியோதனனுக்குத் துணையாக இருந்த வேந்தரும், தம்பிமார்களும் இறந்து பட்டனர். அரவக் கொடியோன் இறந்த யாவரையும் உயிர்ப்பிப்பான் வேண்டித்தவஞ் செய்தான். அதனை யறிந்த கண்ணன் பாண்டவரை யுடன் கொண்டு சென்று, வீமனைக் கொண்டு துரியோதனனைப் போர்க்கழைக்கச் செய்து, சமந்த பஞ்சகம் என்ற இடத்தில் அவ்விருவரும் போர் புரியும்படி செய்தான். இருவரும் தண்டெடுத்துப் பொருதனர். துரியோதனன் 'குறங்கின் வழியாக உயிர் நீங்குக' என்று பாஞ்சாலியால் சாபம் பெற்றவனாகலின், அவ்வுண்மையை யறியாத வீமனால் அவனைக் கொல்ல முடியவில்லை. அச் சமயம், பாண்டவர்களுக்கு எவ்வழியினும் உதவி செய்ய நிற்கும் கண்ணன், வீமனுக்கு, அரவக் கொடியோனின் உயிர் நிலையைக் குறிப்பாலுணர்த்த விரும்பித் தன் குறங்கினைத்தட்டிக் காட்டினன். அக் குறிப்பினையுணர்ந்த வீமன், தன் தண்டால் துரியோதனன் குறங்கினைக் குறித்து அடிக்க, அவன்

உயிர் நீங்கியது. கண்ணன் வீமனுக்கு, துரியோதனன் உயிர் நிலையைக் குறிப்பாலுணர்த்தியது குற்றமாகும். அன்றியும் கதையெடுத்துப் பொருவோர், கடிதடத்திற்குக் கீழ் அடித்தல் அறப்போரன்று. ஆகவே அரவக் கொடியோனை வீமன் கொன்றது வஞ்சனையினாலாம். தன் வேந்தனை வஞ்சனையாற் பகைவன் கொன்றதையுணர்ந்த அச்சுவத்தாமா சினந்து எரியெனச் சீறி, பாண்டவரை வேருடன் கொல்ல எண்ணி, அவ்விரவிலேயே பாஞ்சாலரையும், பாண்டவர் மக்களைவரையும் கொன்று வெற்றி கொண்டான். இங்ஙனம் வஞ்சனையால் இறந்து பட்ட அரசனின் படைத்தலைவன் சின மிகுந்து, போர்க்குப் புறங்கொடுத்து ஓடுவோரைக் கொன்று குவித்தலும் உண்டு. ஆயின் பண்டையோர், இச்செய்கையை அறனன்றென்று கருதாது அறனென்றே கொண்டனர்.

அரசனுடைய தேரின் முன்னே பல வீரர்கள் கை கோர்த்தாடுவர். தேரின் பின்னும் வீருடன், பாணிச்சியர் ஆடுவர். இவை யிரண்டும் முறையே முன்றேர்க்குரவை, பின்றேர்க்குரவை யெனப்படும். அரசனுடைய தேரின் முன்னும், பின்னும் பகுவாய்ப் பேய்கள் ஆடுதலும் உண்டு. பகைவர்களும் புகழுமாறு கீழே புண்பட்டுக்கிடந்த வீரனை, அவன் மனைவி ஆண்டு வந்து தழுவுவாள். வாளால் விழுப் புண் பெற்றுக்கிடக்கும் அக் கணவனைக் கண்டு மகிழ்ந்து கண்ணீர் சொரிவாள். சில வீரர் தம் இறைவன் இறந்ததைப் பொறாது, வாளமரில் தாமும் இறப்பர்.

மேற் கூறியவாறு போர் செய்து வெற்றிகொண்ட வேந்

தர் வாகைப்பூவைச் சூடுதல் மரபு. அவ்வாறு வெற்றி கொண்ட வேந்தரை, புலவர்களும், கூத்தர்களும், இசைப்பாணர், பேரியாழ்ப்பாணர், சீறியாழ்ப்பாணர், மண்டைப் பாணர் முதலிய பாணர்களும், ஏர்க்களம் பாடுநர், போர்க்களம் பாடுநர், பாணி பாடுநர் முதலிய பொருநர்களும், விறல்பட ஆடும் விறலியரும் அணுகி, அவரவர் தகுதிக்கேற்ற பரிசில்களைப் பெறுவர். இது காறும் கூறிப் போந்தனவற்றினின்றும் பலவித காரணங்களால் போர் நிகழும் என்பதும், ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான அடையாளப்பூவினைச் சூடியே பொருவர் என்பதும் பெற்றாம். நிரைகவரச்செல்லும் அரசன் வெட்சிப் பூவைச் சூடுதலும் அவன் படையாளரும் அங்ஙனமே வெட்சியை அடையாளமாகச் சூடுதலும், இவ்வாறே நிரைமீட்போர் கரந்தையைச் சூடுதலும், பகைவர் மண்ணை விரும்பிச் செல்வோர் வஞ்சி சூடுதலும், அவர்களைத் தடுத்து எதிரூன்றுவோர் காஞ்சி சூடுதலும், பகைவர் மதிலைக் கொள்ள முற்றுவோர் உழிஞை சூடுதலும், மதிலினகத்தோர் நொச்சி சூடுதலும், போர் புரிபவர்கள் தும்பை சூடுதலும், வெற்றி பெற்றவர்கள் வாகை சூடுதலும் மரபாம் என்பது பன்னிருபடலம் புறப்பொருள் வெண்பாமாலை முதலியவற்றுற் பெறப்படுகின்றது. அன்றியும் இது,

> " வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்
> வட்கார்மேற் செல்வது வஞ்சியாம்—உட்கா
> தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்த னொச்சி
> அதுவளைத்த லாகு முழிஞை—அதிரப்
> பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர்
> செருவென் றதுவாகை யாம். "

என்ற ஒரு பழஞ் செய்யுளாலும் வலியுறும். தொல்காப்பி யத்திற்கும், பன்னிருபடல முதலியவற்றிற்கும் சிறு பான் மையே வேற்றுமை காணப்படுகின்றது. அடையாளப்பூவைச் சூடுதல் யாவருக்கும் உடன் பாடேயாகும்.



# 4. மணமும் இல்வாழ்க்கையும்.

இருக்கு முதலான நான்கு வேதங்களில் மணம் எண் வகைப்படும் என்று ஓரிடத்தே கூறப்பட்டிருக்கிறது. அவை, பிரமம்; பிராசாபத்தியம்; ஆரிடம்; தெய்வம்; காந்தருவம்; ஆசுரம்; இராக்கதம்; பைசாசம் என்பனவாம். அவற்றுள், பிரமம் என்பது: "அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண் டாறினிற் கழிப்பிய" என்று முருகாற்றுப்படையுட் கூறிய தற்கிணங்க, நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங்காத்தவனும், ஒத்த கோத்திரத்தானுமுள்ள ஒருவனுக்கு, பன்னீராட் டைப் பிராயத்தாளாய், அறிவடைந்த ஓர் பெண்ணைப் பூணணிந்து, தானமாகக்கொடுப்பது.

பிராசாபத்தியம் என்பது: மணமகனைச் சேர்ந்தோர் அளித்த பரிசத்தினிரட்டி தம்மகட்கு ஈந்து கொடுப்பது. இனி மைத்துனக் கோத்திரத்தான் மகள் வேண்டிச் சென்றால் மறுது கொடுப்பது என்றும், தலைமகனது இருமுதுகுர வரும் வேண்டத் தலைமகள் குரவரும் மறுது உடன்பட்டு, தலைமகளையலங்கரித்துத் தீமுன்னர்க் கொடுப்பது என்றும் கூறுவர்.

ஆரிடம் என்பது: பெண் கோடற்கு ஏற்ற தகுதியுடைய ஒருவற்கு மணமகளையளிப்பது. அவ்வாறு அளிக்கும்போது ஆவும், ஆனேறும் பொற் கொம்பும், பொற் குளம்பும் உடை யனவாயிருக்குமாறு செய்து, அவற்றினிடையே நிறுத்தி ஈவர். அங்ஙனம் ஈவதன் உட்கோள் என்னெனின், அந்த ஆவும், ஆனேறும் போல ஒத்த அன்பினராய் இருந்து,

இல்லறம் நடத்தல் வேண்டும் என்பதே. நீவிரும் இது போற் பொலிந்து வாழுமின் என்று கூறுதலும் உண்டு.

தெய்வம் என்பது : பெரு வேள்வி செய்வானொருவன், அவ் வேள்வி யாசிரியர்களுட் பலவாற்றானும் கன்னியைக் கோடற்கு ஒத்த ஒருவற்கு, அவ்வேள்விக்குத் தக்கிணையாக, அவ் வேள்வித்தீயின் முன்பாகவே, அக்கன்னியை அலங் கரித்து அளிப்பது.

இந்நான்கு மணங்களும் பெருந்திணையின் பாற்படும் என்பர். பெருந்திணையென்பது பொருந்தாக்காமமாகும். இந்நால்வகை மணங்களிலும், மணமகனும், மணமகளும், மணம் நடப்பதற்கு முன்னர் ஒருவரை யொருவர் அறியார். ஆதலின் அவ்விருவருள் ஒருவரிடை ஒருவர்க்கு அன்பு இருத் தலும், இல்லாமலிருத்தலும் இயல்பேயாகும். ஆதலின் அவ்விருவரிடையே ஒத்த அன்பு இருக்கும் என நாம் திண்ண மாகக் கூறுதலியலாது. மணமுடிந்து இல்லறம் நடத்துங் கால் அவ்விருவர்க்கும் மனவொற்றுமை இருப்பினும் இருக் கலாம். அன்றி மனவேற்றுமை யிருப்பினும் இருக்கலாம். இத்தகையனவாய காரணங்கள் உண்மைபற்றியே இந்நான்கு மணங்களையும் பொருந்தாக்காமமெனக் கூறுதல் வேண்டிப் பெருந்திணையென்று அடக்கினர் போலும்! எண் வகை மணங்களுள், ஏனைய திணைகளின் மணங்களிலும் அதிகமான மணங்கள் பொருந்தாக்காமத்தின் கண்ணே அடங்குதலால் பெருந்திணையென்று காரணப்பெயர் கொடுக்கப்பட்டது.

காந்தருவம் என்பது : தலைவியுந்தலைவனும் ஊழ் வினைப் பயத்தால்தாமே எதிர்ப்பட்டு, கொடுப்போரும், கேட்போரு

மில்லாமல் தத்தமுடைய அன்பை இருவரும் ஒருவர்க்கொருவர் வெளிப்படுத்திக்கொண்டபின்னர் மணம் நடைபெறுவது. இது தேவர்களுள் ஒரு சாராராகிய கந்தருவருடைய ஒழுக்கத்தை ஒத்ததாம். இக் கந்தருவ மணத்தையே பண்டைக்காலத்தில் தமிழர் சிறந்ததாகக் கருதினர். அவருட் பெரும்பாலோரிடை இக்கந்தருவமணமாகிய காதல் மணமே நடைபெற்றது. இம் மணத்தினை ஐந்திணையின் பாற் படுத்தினர். ஐந்திணையென்பது அன்புடைக்காமமாம். மணமகனும், மணமகளும் ஒத்த அன்பினராயிருந்த பின்னர் மணம் நடைபெறுவது ஆதலால் இஃதன்புடைக்காமம் எனப்பட்டது.

ஆசுரம் என்பது: உருவுந் திருவு மறிவு மொருங்கு பெற்ற ஓர் பெண்ணைப் பலர் மணஞ் செய்துகொள்ள விரும்புவது இயற்கையே. இவ்வாறு பலரால் மணஞ்செய்துகோடற்கு விரும்பப்பட்ட ஓர் பெண்ணையுடைய ஒருவற்கு அப் பெண்ணை மணமுடித்துக்கொடுப்பதில் பலவித இன்னல்கள் நேரிடும். பலருடைய பகை உண்டாகும். ஆதலால் அவன் ஒரு நிபந்தனை ஏற்படுத்துவான். அஃதாவது கொல்லேறு கோடல், திரிபன்றி யெய்தல், வில்லேற்றுதல் போன்றவற்றில் ஒன்றோ, பலவோ செய்தாரே, இப் பெண்ணைக் கோடற்குரியார் என்பது. அவ்வீரச்செய்கையைச் செய்த ஒருவனே அம் மகளை மணமுடிப்பான். அன்றி, அம் மணமகள் கையில் மாலையைக்கொடுத்து, பலர் நிறைந்த அவையிடையே அவளைச் செலுத்தி, அவள் விரும்பிய ஒருவற்கு மாலை சூட்டுமாறும் செய்வது. இவையே ஆசுரமணமன மெனப்பெறும். அருச்சுனன் பாஞ்சாலியை மணந்தது போன்றவை இவ்வாசுர மணத்தின் பாற்படும். இனி,

தலைமகட்குவேண்டும் அணிகளை அணிவித்து, அவடன் சுற்றத்தார்க்கும் வேண்டுவன அளித்து மணந்து கொள்ளுதலையும் இவ்வாசுரத்தின் பாலடக்குவர்.

இராக்கதம் என்பது : தலைமகள், அவளுடைய சுற்றத்தார் முதலியோரின் உடன்பாடு அறியாமலும், தலைமகட்கு விருப்பமில்லாமலிருப்பினும், வலிதில் மணந்து கொள்வது.

பைசாசம் என்பது : தன்னிலும் முதிர்ந்த ஒருத்தியை மணத்தலும், கள்ளுண்டு களித்தும், துயின்று கொண்டும் இருக்கின்ற சமயத்தில், அப் பெண்ணின் விருப்பத்தை வினவாமலேயே மணத்தலும், இழிந்தோரை மணத்தலும் முதலியனவாம்.

இம்மூன்றனையும் கைக்கிளையின் பாற்படுத்தினர். கைக்கிளை யென்பது ஒரு தலைக்காமமாம். இம்மூவகையில், இராக்கதம், பைசாசம் ஆகிய இரண்டு மணங்களிலும் மணமகன் ஒருவனுக்கே மணமகள் மாட்டு அன்பு நிகழ்ந்ததாம். மணமகட்கு மணமகனிடம் வெறுப்புத்தோன்றுமேயன்றி அன்பு தோன்றாது. ஆசுரமணத்தில் மணமகன் மணமகளை விரும்புதல் திண்ணம். ஏனெனில், மணமகளை விரும்பியே அவ் வீரச்செய்கையைச் செய்யத்துணிந்தானாதலின். ஆயின் மணமகள், அவ்வீரச்செய்கை செய்த மணமகனை விரும்புதல் ஒருதலையன்று.

மணமகளால் விரும்பப்பட்ட ஒருவன் அவ் வீரச்செய்கையைச் செய்தல் சிறு பான்மையேயாகும். மணமகன், மணமகள் ஆகிய இருவருள் ஒருவருக்கே அன்பு உள்ளதாத

லின், இஃது ஒருதலைக்காமம் எனப்பட்டது.

மேற் கூறப்பட்ட எண் வகை மணங்களும் அந்தணர் அருமறையில் ஓரிடத்தே கூறப்பட்டது என்பது முன்னரே கூறினும். அன்றியும் அவ்வெண்வகையுள் தமிழ்நாட்டிற் பெரும்பாலோரிடை அக்கந்தருவமணம் போன்ற காதல் மணமே நடைபெற்று வந்தது என்பதும் கூறப்பட்டது. அத்தகைய மணத்தையே ஈண்டு நாம் விரித்துக்கூறப்புகுந் தாம்.

மணமக்கள் இருவரும் பிணி மூப்பு இல்லாதவர்களாய், ஒத்த பிறப்பும், ஒத்த குணமும், ஒத்த அன்பும் வாய்ந்தவர் களாய் இருப்பர். தலைமகன் பதினைந்தியாண்டும் பத்துத் திங்களும் நிரம்பப் பெற்று, தலைமகள் பதினொரு யாண்டும் பத்துத் திங்களும் நிரம்பப் பெற்று இருக்கும் காலையிலே தான் இருவரிடையும் அன்பு நிகழும் எனக் கூறப்பட்டுளது. இங்ஙனம் யாண்டு கூறியது பெரும்பான்மைபற்றியேயாம்.

தலைவி தன் பாங்கிமாருடன் பூங்காவில் விளையாடுவாள். அப்பொழுது பாங்கியர் பலரும் பற்பல விளையாட்டு விருப்பி னல் தலைவியை விட்டுப் பிரிவர். ஒருத்தி தழைகளைத் தொடு தற் பொருட்டு அப்பாற் செல்வாள். ஒருத்தி எழிலுடைப் பூக்களைப்பறித்து வருவேன் என்று கூறி அகல்வாள். இவ் வாறே, மயிலொடு மாறுடுதும் என்றும், குயிலொடு மாறு கூவுதும் என்றும், அருவியாடி அஞ்சுனை குடைதும் என்றும், வாச மலர்க்கொடியில் ஊசலாடுதும் என்றும் பலகூறிப்பிரி வர். தலைவியினது உயிர்த்தோழி தலைவியைவிட்டு அதிக நேரம் பிரிந்திராள். சிலசமயங்களில் உயிர்த்தோழி யாதேனு

மோர் இன்றியமையாத காரியத்தினிமித்தம் பிரிவாள். அப் பொழுது தலைவி அப்பொழிலின் ஓரிடத்தே தனித்துநிற்பாள்.

அக்காலையிலே, பலராற் சூழப்பட்ட தலைவனும் வேட் டையாடி இளைப்புற்று, ஏனையோரினின்றும் பிரிந்து, தன் களைப்பை அகற்றுவான் வேண்டித் தமியனாய் அச்சோலையிற் புகுவான். அங்ஙனம் புகுந்த தலைமகன் தலைமகளைக் கண்ணு றுவான். தலைவன் அக் காவின் கண்ணே அப்பெண் நிற் பதை அறிந்துவந்தானில்லை. தலைவியும் தலைவன் ஆண்டு வருவானென்றெண்ணி ஆண்டுத் தனித்து நின்றாளில்லை. ஊழ்வினையினாலேயே இவ்வாறு தமியராய் அவ்விருவரும் எதிர்ப்படுவர். இதுவே காட்சி எனப்பெறும்.

தலைமகளைக் கண்ட தலைமகனுக்குப் பற்பல ஐயங்கள் எழும். ஒருகால் அவளை வரையா மகளென்றெண்ணுவான். ஒருகால் நீரரமகளென்றெண்ணுவான். ஒருகால் வானர மகளென்றெண்ணுவான். இவ்வாறு அவள் மானிட மக ளோ அன்றித்தெய்வ மகளோ என்ற ஐயமே அவன் பால் நிகழும். தலைமகன் சிறந்த அறிவும். கல்வியும் உடையவ னாதலின் இவ்வையம் அவனை விட்டு எளிதினகலும். தெய்வப் பெண்டிர்க்கும், மானிடப் பெண்டிர்க்கும் வேறுபாடுகள் பலவுள. தெய்வமகளிர் சூடிய மாலைகளில் தேனுண்ணும் பொருட்டு வண்டுகள் செல்லா. அம்மாலைகள்வாடா. அவ ரணிந்த அணிகலன்கள் ஒருவரால் புனையப் பெற்றனவல்ல. அவர்கள் கண்கள் ஊன்கணல்லா வான்கண்கள். கண் கள் இமையார். அவர்கள் கால் நிலந்தோய்தலில்லை. ஆட

வர்களைக்கண்டால் அச்சந்தோன்றப்பெறார். வியர்வை அரும்பப் பெறார். மானிடப் பெண்டிர் இவற்றிற்கு மாறான தன்மை வாய்ந்தோராதலின், தலைவன் மிக எளிதில் அவள் மானுடமகளே யென்று துணிவான். தலைவற்கு ஐயநிகழுமாறு போலத் தலைவிக்கு ஐயம் நிகழுமென்று தொல்காப்பிய முதலானவற்றிற் கூறப்படவில்லை. அங்ஙனம் கூறப்படாததற்கு உரையாசிரியர்கள் கூறும் காரணமென்னவெனில்: தலைவற்கு ஐயந்தோன்றினால் அவன் தன்னுடைய கல்வியறிவால் அவ்வையந்தீரப்பெறுவான். தலைவிக்கு ஐயந்தோன்றப்பெறின், இவன் கந்தருவனோ! முருகவேளோ! இயக்கனோ! என்றே தோன்றும். அவ்வாறு ஐய நிகழ்ந்தால் அதனை நீக்கி உண்மையுணர்தற்கேற்ற நூலறிவு அவட்கின்மையால், ஐயநீங்கப் பெறாள். ஐயநீங்கப்பெறாவிடின் அவளுக்கு அச்சமே நிகழுமன்றிக் காமக்குறிப்பு நிகழாது என்பதாம்.

ஆனால் தலைவிக்கும் தலைவனைக் கண்டவிடத்து முதலில் ஐய நிகழும் என்று இறையனாரகப்பொருட் குறைகண்ட நக்கீரனார் கூறுவர். அஃதுண்மையேயாகும். திருத்தொண்டர் புராணத்தைப்பாடிய சேக்கிழார் பெருமான், சுந்தரமூர்த்தி நாயனாரைக் கோயிலகத்தே முதலிற் கண்ட பரவை நாச்சியாருக்கு,

“ முன்னேவந் தெதிர்தோன்று முருகனோ பெரு
கோளியால்
தன்னேரில் மாறனோ தார்மார்பின் விஞ்சையனோ

மின்னேர்சேஞ் சடையண்ணல் மெய்யருள்பெற்
றுடையவனே
என்னையேன் மனந்திரித்த இவன் யாரோ ”

என்று ஐய நிகழ்ந்ததாகக் கூறுகின்றார். இஃதே போன்று இராமனைக்கண்ட சீதைக்கும், சீவகனைக்கண்ட பதுமையார்க்கும் ஐய நிகழ்ந்ததாக அவ்வந்நூலாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இவ்வாறு பல்லாற்றானும் எழுந்த ஐயநீங்கி, அவளை மானுட மகளே யென்று துணிந்த தலைவன் பின்னர், தன் பாலவட்கு விருப்பு உளதோ என்று அவளுடைய நோக்கினின்றும் அறிய முயல்வான். தலைவி பெரு நாணினளாகலின் அத்துணைவிரைவில் தன்னுடைய வேட்கையை வெளிப்படுத்தாள். ஆயின் அவள், தலைவன் தன்னை நோக்கிய நோக்கிற்கு எதிர்நோக்கு நோக்குவாள். அப்பார்வை பொதுப்பார்வையேயாகும். அஃதாவது அவள் பார்த்த பார்வை நன்றெனக் கோடற்கும் அன்றெனக் கோடற்கும் பொதுவாம். ஆனல் தலைவன், அந்நோக்குதன்னை விரும்பி நோக்கிய நோக்கேயென்று எண்ணுவான். அங்ஙனம் தலைவன் எண்ணுதல் இயற்கையேயாகும். ஒருவன் பசித்து வந்து ஒருவனைக்கண்டான். அவனும் பசியோடிளைத்து வந்தவன் முகத்தைப் பார்த்தான். அப்பார்வை, அவனது பசிதீர்த்தற்கும், அன்றி அப்பாற் செல்லும்படி சொல்லுதற்கும், பொதுவானதேயாகும். பசித்து வந்தான் இவன் சோறு கொடுப்பான் என்றெண்ணுவதல்லது கொடான் என்று எண்ணுவதில்லை. ஏனெனில் அவன் தன் அவாவயத்தனாய்

நின்றாளாதலின். அது போலவே தலைமகனும் தன்னவா வயத்தனாய் அவ்வாறு எண்ணினான்.

தலைவன் தனது வேட்கையைப் பல்லாற்றானும் வெளிப் படுத்துவான். அவளைப் பலவாறு புகழ்வான். அவளும் சிறிது முறுவல் பூப்பாள். அம்முறுவற் குறிப்பைத் தலைவ னறிவான். இவ்வாறே இருவர்க்கும் கூட்டம் நிகழும். இஃதியற்கைப் புணர்ச்சி யெனப்படும்.

பின்னர் தலைவன் அவளைப்பலவாறு புகழவெண்ணி அவளை முன்னிலையாக்கிப் புகழாமல், வண்டினை வினவுவான் போன்று 'வண்டே! இவள் கையினைச் செங்காந்தளென வும், கண்ணினைக் கருங்குவளையெனவும், வாயினை அரக்காம் பல் எனவும் எண்ணி, அருகிற் சென்று தடுமாறி, குழலினும், கோதையினுஞ்சென்று சுழலாநின்றாய்! உன்னுடைய வாழ்க் கை கொங்கு தேர் வாழ்க்கையாகும். நீகாமஞ் செப்பாது கண்டது மொழிதல் வேண்டும். நீயறிந்த பூக்களில், இவ ளது கூந்தலினும், செவ்வாயினும் நறுநாற்றமுள்ள பூக்கள் உளவோ?' என்பான். தம் இருவருக்கும் நட்பினை உண் டாக்கிய தெய்வத்தின் திறத்தைப் பலபடப்புகழ்ந்து கூறு வான். அவளை நோக்கி 'பெண்ணே! நின்னிற்பிரியேன். அங்ஙனம் பிரியினும் ஆற்றி உயிர் தரியேன்' என்பான். பின்னும், 'உன்னுடைய தாயும், என்னுடைய தாயும் ஒரு வரை யொருவர் அறியார். எந்தையும், நுந்தையும் எம்முறை யினும் கேளிரல்லர். யானும், நீயும் எவ்வழியறிதும்? ஆயின், செம்புலப் பெய்நீர் போல நம் நெஞ்சம் தம்மிற் கலந்தன' என்று கூறுவான். இவ்வாறு கூறிய பிறகு

'நீ இவ்விடஞ் சிறிது விளையாடுவாயாக. யான் சில்பொழுது இச்சோலையினூடே யொளித்து நின்று வருவேன்' என்று தன்னுடைய பிரிவை உணர்த்துவான். அவ்வளவில் தலைவி, தன்னுடைய பிரிவினால் வருந்துங்கொல் எனவும், தன்னிடம் சேய்மைத்தென்று எண்ணுங்கொல் எனவும் நினைத்து தன்னுடைய ஊர் அணிமையின் உள்ளது என்றும் உணர்த்துவான். தன்னிடமணித்து என்பதைப்பல எடுத்துக்காட்டுகளால் விளக்குவான். உதாரணமாக, மணிவாசகப்பெருமானார் தமது திருச்சிற்றம்பலக் கோவையாரில், தலைவன் தன்னிடமணித்து என்பதை,

" வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல
வன்மலயத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்த
லெம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி
பாய நும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங்
கனங்குழையே "

என்று கூறியதாகச் செய்யுள் செய்துளார். அன்றியும், எனது மலையின் பூஞ்சாரலினின்றெழுந்த மணம் நும் குன்றில் வந்து நாறும் என்றும், எம்மூர் மாடங்களில் உயர்த்திய நெடுங்கொடிகளால் நும்மூர் ஆவணவீதி யெல்லாம் நிழலாயிருக்கும் என்றும் பலவிதமாகத் தன்னிடம் அணித்து என்பதை விளக்கிப்பிரிவான்.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் உடனே அவ்

விடத்தை விட்டு நீங்கான். பிரிந்து செல்வது போலவச்சிறிது அப்பாற் சென்று அவள் தன்னைக் காணுமைத் தானவளைக் காண்பதோர் அண்மைக்கண் மறைந்து, தலைவியை நோக்கிய வண்ணம் நிற்பான். தலைவியும், தலைவன் தன்னைவிட்டுப் பிரிந்து செல்லான் என்று துணிந்து, அப்பாற் செல்வாள். பல விளையாட்டுகளினிமித்தம் பிரிந்து சென்ற அவளது ஆயத்தார் யாவரும் மீண்டு அவளைச்சூழ்ந்து நின்று, போற்றும், பல்லாண்டும் கூறுவர். அவ்வாறு தலைவியை ஆய வெள்ளம் வழிபடுதலைக் கண்ட தலைவன், தலைவியது உயர்வையும், அருமையையும் எண்ணி, பின்னும் அவளைக்காண்டல் நமக்குக் கூடுவதொன்றோவென்றெண்ணிக் கலங்குவான். பின்னர் ஒருவாறு தானுகவே தெளிவான். அப் பெண்ணைப்பயந்தோரைப் பலவாறு பழிச்சி ஆண்டு நின்றகல்வான்.

இதைப்போலவே தலைவன் எஞ்ஞான்றும் தலைவியைத் தனிமையில் எவருமறியாவண்ணங் காணுதல் எளிதன்று. முதல் நாள் ஊழின்வயத்தினல் தலைவியைச்சேர்ந்த தலைவன், மறுநாள், முன்னுள் தலைவியைத்தந்த தெய்வம் இன்றுந்தரும் என்றெண்ணி முன்னுட் சேர்ந்தவிடத்தையே அடைந்து தலைவியைச் சார்வான். இஃதிடந்தலைப்பாடு எனப்படும். ஆனல் இதன் பிறகு தலைவன் தனித்துச் செல்லவியலாது. ஏனெனில் அவனது உயிர்ப்பாங்கன் அவனை விட்டுப் பிரிந்திருத்தல் ஒருதலையன்று. அதனல் தலைவன் தன் தோழனிடம், தான் தலைவியைக்கண்டவாற்றைக் கூறி, தனக்குதவி புரியுமாறு வேண்டுவான். அப்பாங்கன் முதலில்

தலைவனை அவனது செய்கைக்காகக் கழறினும் பின்னர், அவனைத் தேற்றி, தலைவியிருப்பிடத்தை அடைந்து, அவள் தனித்து நிற்குங்காலத்தை யுணர்ந்து தலைவனிடம் உரைப்பான். தலைவனும் பாங்கன் கூறிய அந்நேரத்திற்சென்று தலைவியைச் சேர்வான். தலைவியைச்சேர்ந்த தலைவன், மறு நாள் தனித்து வாராமல், பாங்கியுடன் வருகவென்று அவளைப் பணித்து மீள்வான். இது பாங்கனாற் கூடுங் கூட்டமாகையால் பாங்கற் கூட்டம் எனப்படும்.

தலைவனை அவனது உயிர்ப்பாங்கன் நீங்காதிருத்தல் போலத் தலைவியையும் அவளது உயிர்ப்பாங்கி பெரும்பாலும் நீங்கியிராள். ஆகவே தலைவன், தோழியறியாதவாறு தலைவியைச் சேர்தல் இயலாது. அதனால் தலைவன் அவ்வுயிர்த் தோழியை யறிந்து அவளுடைய உதவியைப்பெற எண்ணுவான்.

அது காலையில் தோழியும் தலைவியது ஒழுக்கம், உண்டி, செலவு, பயில்வு, முதலியவற்றின் மாறுபாட்டாலும், செய்வினை மறைப்பினாலும் ஐயமுற்று, அவளைப்பலபடி வினவி, அவள் தலைவனைச்சேர்ந்தவாற்றை அறிவாள். தலைவனும், தோழியின் மதியுடம்படுத்தற்பொருட்டு அவர்கள் காவல் புரியும் தினைப்புனத்திற்கு வருவான். அவ்வாறு வருபவன் கையில் தழையுங் கண்ணியும் ஏந்தி வந்து பாங்கியை யடைவான். தலைவன் தான் ஆண்டுவந்ததற்குப் பல காரணங்களைக் கற்பித்துக் கூறுவான். நான் இவ்விடத்திற்குப் புதியவன். நும்முடைய ஊர் யாது? நும்முடைய பேர் யாது? என்று இவ்வாறெல்லாம் வினவி, பின்னர் தான் ஓர் யானை

யைத் தூக்கி ஓடி வந்ததாகவும், அவ்யானை அப்புனத்தி லே நுழைந்ததாயும் கூறி, தாங்கள் அதனைக்கண்டதுண்டோ வென்று வினவுவான். இவ்வாறே, பன்றி வினுதல், நாய் வினுதல் போன்றனவும் நிகழும். கையில் தழையுங் கண்ணி யுங் கொண்டு, பலவாறு வினவும் இவர் யார்? இவரது எண் ணம் என்ன? என்று தோழி ஆராய்ந்து அவனெண்ணத் தை யறிவாள். சில சமயங்களில் தலைவன், தோழியும், தலை வியும் ஒருங்கிருக்கும்பொழுது, ஆண்டு வந்து, முன்பு வினவி யது போன்று பேர், ஊர், கெடுதி முதலியன வினவுவான். அதற்குப் பாங்கி தாம் ஒன்றும் பார்க்கவில்லையென்று கூறி, அவன் கையில் தழையுங் கண்ணியுங்கொண்டு 'யானை போந் ததோ! மான் போந்ததோ' என்று வினவுதலால் அவனை கருவாள். தலைவன் இவ்வாறு தோழியிடம் பேசினும், அவ னது கண்கள் தலைவியை நோக்கியவாறே யிருக்கும். அது போலவே தலைவியும் கடைக்கண்களால் நோக்கியவாறு நிற் பாள். இவ்விருவர் கண்களையும் கண்ட தோழி 'ஏனல் காவ லிவளுமல்லள், மான் வழி வருகுவனிவனுமல்லன்' என் பதை யுணர்ந்து, இருவருடைய நட்பையும் அறிவாள்.

தோழி, தலைவன் தன்னிடம் குறையுறும்பொழுது எளிதில் அவற்குடன்படாள். தான் ஒன்றும் அறியாள் போன்று அவனைப்பலபடவினுய், தலைவியது உயர்வையும், இளமையையும், அவளைச் சேர்தலருமையையும் கூறி, அவ னது உட்கோளையும் மனவுறுதியையும் அறிந்த பின்னரே, அவற்குதவிசெய்ய வுடன்படுவாள்.

சில சமயங்களில், குறையுற்றுத் தோழி உடன்

படாயனி நீங்குங்கால் தலைவன் ஆற்றாமல் தான் மடலேறு வதாகக் கூறுவான். மடலேறுதல் என்பது: பனங் கருக்கால் குதிரையும், மட்டை முதலியவற்றால் வண்டில் முதலாயினவுஞ் செய்து, அக்குதிரையின் மேலேறுவது. அப்படியேறுபவன், தலைவியின் உருவத்தைத்தானே தீட்டி, அதன் தலைப்புறத்தில் அவள் பெயரையும் எழுதி, அக்கிழியைக் கையிற் கொள்வான். அவன் ஆடையற்றிருப்பான். உடல் முழுதும் நீறு பூசியிருப்பான். வெண்பூளை, மூகிழ், எருக்கு என்பு முதலியன அணிந்திருப்பான். இத்தகைய கோலத்துடன், உணவும் துயிலுமின்றி ஊர்நடுவிலுள்ள நாற்சந்தியிடத்தே தங்குவான். அக்கிழிமேற்பார்வையுஞ் சிந்தையுமிருத்தி வேட்கைவயத்தனாய் வேறுணர்வின்றி யிருப்பான். ஆலூரினும், அழல்மேற்படினும், மழை பெய்யினும், வெயில் காயினும், காற்றடிப்பினும் சிறிதும் மயங்கான். அதனைக்கண்ட ஊரிலுள்ளோர், நீ அவளை விரும்புவது உண்மையாயின் மடலேறுதியோ என்று வினவி, அவன் இயைந்த வழி அரசனுக்கறிவித்து மடலேறச்சொல்ல, அவனும் வீரத்துடன் சிறிது மஞ்சாது மடலேறுதல்.

ஆயின் இவ்வாறு மடலேறுவேன் என்று தலைவன் கூறுவனேயன்றி மடலேறப்பெறான். ஏனெனில் தலைவன் மடலேறுவேன் என்று கூறியவளவில் தோழி யுடன்படுவளாதலான். அன்றியும் தலைவன், பாங்கியை யுடன்படுத்த வேண்டிக் குறித்துச்சொல்லியதல்லது, மடலேறுங் கருத்தாய்க் கூறினனல்லன். மடலேறுதல் பெருந்திணைப்பாற்

படும். இனி, தலைவியின் மேலுள்ள வேட்கையால் தலைவன் மடலேறுவேன் என்று கூறியது போல, தலைவியும் மடலேற வும் கூறவும் பெறுவளோவெனில், தலைவி அங்ஙனம் ஏறவும், கூறவும் பெறாள். ஆனால், கடவுள், அரசன் முதலியோருள் ஒருவரைத் தலைவராகவும், ஓர் பெண் அவர் மேற் காதல் கொண்டதாகவும் கூறி, அத்தலைவரைச் சிறப்பிக்கவேண்டி, சில புலவர்கள், தலைவி மடலேறுவேன் என்று கூறியதாகச் செய்யுள் செய்வர்.

தலைவன் தோழியைக்காணச் செல்லுங்கால் தழையுங் கண்ணியுங் கொண்டு செல்வான் என்று முன்னரே கூறப்பட் டது. அதற்குக் கையுறை யென்று பெயர். கையிலுறைத லின் கையுறையாயிற்று. தழையென்பது மாந்தழையாகும். அக் கையுறையைப் பாங்கி ஏற்றால் தான் அவள் உடன்பட் டாள் என்பதாம். அவ்வாறு தலைவனிடமிருந்து கையுறை யை ஏற்ற பாங்கி, தலைவியிடம் கொடுப்பாள். தலைவி ஒன் றும் அறியாள் போன்று அதைப்பற்றி வினவுவாள். தோழி என்னைமறைப்பது என்னென்றுரைத்து, தலைவனைத்தானறிந்த மை கூறி, அக்கையுறையைத் தலைவி ஏற்குமாறு செய்து, அதனைத் தலைவனிடம் கூறிப்பின்னர் இருவரும் ஓரிடத்தே கூடும்படியாகச் செய்வாள். இது பாங்கியாற் கூடும் கூட்ட மாகையால் பாங்கிற் கூட்டம் எனப்படும்.

பின்னர்ப்பாங்கியானவள் தலைவனைப் பகற் காலத்தில் வருமாறு கூறி, ஓரிடத்தையும் குறிப்பிடுவாள். அவ்வாறே பின்னர் தலைவன் ஆண்டு வந்து தலைவியைச் சேர்வான்.

தலைமகன் பகலில் வந்தால் பலருமறிவர் என்றெண்ணிய தோழி இனிப்பகலில் வாலொண்ணுதென்று கூறி, இரவில் வந்து கூடுமாறு செய்வாள். பின்னர் இரவில் வந்தாலும் பலவித இடையூறுகள் உண்டாகும் என்று கூறு வாள். சில நாட்கள் செவிலித்தாய் இரவில் துயிலாமல் விழித் திருப்பாள். அவ்வாறு விழித்திருந்தால், தலைவி குறியிடத் தை யடைய முடியாது. தலைவன் இருளில் வருங்கால் அவ னைக்கண்ட ஞமலி ஞரேலெனக் குரைக்கும். தலைவன் அவ் விரவில் ஊர்க்காவலர் கண்ணிற்படின் அவர்கள் அவனைப் பல விதமாக வினவுவர். யாரென்றும் அவ்விரவில் வரும் கார ணம் என்னவென்றும் வினவி உண்மையறிந்தால் களவு வெளிப்பட்டு விடும். இவன் வருவதை யாரேனும் பார்த்து விடுவர். இவன் இரவில் மரங்கள் நிறைந்த இடத்தே வரும் பொழுது, கோழி கூகை முதலியன தம் குரலைக்காட்டும். இருளில் காட்டு வழியாக வருங்கால் அக் காட்டில் வாழும் கொடிய விலங்குகளால் தலைவனுக்கு ஏதேனும் துன்பம் நேரி டினும் நேரிடும். இக் காரணங்களை எடுத்துக் கூறியே தலை வனை இரவு வாராதிருக்குமாறு கூறுவாள். பின்பு இரவு வரு வானை நோக்கி, நீ ஒரு நாள் விழுமமுற்றினும் வழிநாள் வாழ் குவளல்லளென்றோழி ; யாவதும் ஊறில் வழிகளும் பயில வழங்குநர் நீடின்றாக விழுக்குவர் ; அதனால் இரவு வாரற்க ; பகலிலேயே வருவாயாக என்று கூறி, இறுதியில் பகலிலும், இரவிலும் வாரற்க என்றும் கூறுவாள். இவற்றால் தலைவன் சின்னாட்கள் தலைவியைக் கூடப்பெறான்.

மேற்கூறிய இடையூறுகளால் தலைவன் வருவது தடைப்

பட்டதைக்கண்ட தலைவிக்கு வருத்தமிகும். உணவுந் துயி லுங் கொள்ளாள். உடல் மெலிந்து உடல் நிலை வேறுபடும். இவ்வாறு தலைவியினிடத்திற் காணப்பெறும் வேறுபாடு களைக்கண்ட செவிலித்தாய், அவற்றின் காரணத்தையறிய முயல்வாள். இவ்வேறுபாடு தெய்வத்தால் நேர்ந்தது கொல் என்னையுறுவாள். அதுபோது முதுவாய்ப்பெண்டிர் ' இவ ட்கு இந்நோய் வந்தது முருகனலாம். ஆதலின் அம்முரு கற்கு நாம் வேலனைக்கொண்டு வெறியாட்டயரும்படி செ ய்ய வேண்டும் ' என்று கூறுவர். அஃதுண்மையென்றெண் ணிய செவிலித்தாய் வேலனை யழைத்து வெறியயர்வாள்.

வெறியாட்டயரு முறை :— முதலில் வெறியாட்டாள னாகிய வேலனையழைப்பர். வெறியாட்டயருங் களத்தினை நன்றாயிருக்கும்படியாகச் செய்வர். நெய்யோடு வெண் சிறுகடுகையப்புவர். மலர்களைத்தூவி வழிபடுவர். உடை களை உடுத்துவர். சிவந்த நூலை அவ்வேலன்கையில் காப்பா கக் கட்டுவர். வெண்பொரியைத் தூவுவர். ஆட்டுக்கிடா யினது குருதியில் தூய அரிசியைக்கலந்து சிறு பலியாக இடு வர். தினையரிசியைப் பூக்களோடு கலந்து பிரப்பரிசியாக வைப்பர். மஞ்சள், சந்தனம் முதலியனவற்றைத் தெளிப் பர். நறிய தூபங்களை யெடுப்பர். குறிஞ்சிப்பண்ணைப் பாடு வர். பிறகு ஆட்டைப்பலியாகக் கொடுத்து முருகன் வரும் படி வேண்டுவர். அன்றியும் கள்ளிறைத்தல், இறைச்சி தூவல், கருஞ் சோறு செஞ் சோறு வைத்தல் முதலியவற் றை யிடைவிடாது செய்வர். வேலன் முருகனை மனையிற் கொண்டு புகுவான்.

மேற்கூறியவாறு வேலனைக்கூவி, வெறியாட்டயருங்கால், தோழியானவள், வேலனை நோக்கி, இங்ஙனம் வெறியாடுவதனால் பயனொன்றுமில்லையென்று கூறி வெறி விலக்குவாள். வெறியாடுவதைக்கண்ட தலைவியும் மிக வருந்துவாள். இங்ஙனம் வெறியாடுவதனால் தலைவிக்கு வருத்தமிகுமேயன்றி நோய் சிறிதுந்தணியாது. நோயொன்றிருக்க மருந்தொன்று கொடுத்தால் அந்நோய் எங்ஙனந்தீரும்! பாங்கி வெறி விலக்கியதையும், வெறியாடுவதனால் தலைவிக்கு வருத்தமிகுந்து மேலும் உடல் மெலிவதையுங் கண்ட செவிலித்தாய் தலைவியை அயிர்ப்பாள். சில சமயங்களில் தலைவனைத் தன் மனையின் படப்பையினகத்தே கண்டு அவன் யாரொன்றும் அயிர்ப்பாள். இவற்றால் செவிலியானவள் தலைவியின் களவுப்புணர்ச்சியை ஒருவாறு ஊகித்து, அவள் உடல் மெலிதலும் அது பற்றியே யென்பதையும் உணர்ந்து, தலைவியானவள் ஓரிடமுஞ் செல்லலாகாது என்று கூறி அவளை இற்செறித்து விடுவாள். தலைவிக்குக்காவல் மிகும்.

தலைவியின் பொருட்டு வெறியாட்டயர்ந்ததையும், தோழி வெறி விலக்கியவாற்றையும், செவிலி தலைவியை இற்செறித்ததையும் கேட்ட ஊரார் தலைவியைச் சுட்டிப் பலவிதமாகப் பேசுவர். குறிப்பாற் பேசிக்கொள்ளுதல் அம்பல் என்றும், சிறிது வெளிப்படையாகப் பேசுதல் அலர் என்றும் கூறப்படும். இவற்றையெல்லாம் அறிந்த தலைவி மிக வருந்தி மேலும் உடல் மெலியப் பெறுவாள்.

வெறியாட்டயர்ந்தது, இற்செறித்தது, ஊரார் தலைவியைப்பற்றி அலர் கூறுவது, இவற்றால் தலைவியின் உடல்

மெலிந்தது முதலியனவற்றைத் தோழியானவள் தலைவனுக்கு எடுத்துக்கூறி, விரைவில் அவன் தலைவியை யாவருமறிய மண முடித்துக் கொள்ளானாயின் தலைவி யிறந்து படுவாள் என்றும் கூறி, மணமுடிக்குமாறு அவனை வற்புறுத்துவாள். இது வரைவு கடாதல் எனப்பெறும். இவற்றையுணர்ந்த தலைவன் தலைவியைப் பலருமறிய மணமுடித்தற் பொருட்டுப் பொரு ளீட்டப் பிரிவான். இது வரைவிடைவைத்துப் பொருள் வயிற் பிரிதல் எனப்படும்.

இங்ஙனம் தலைவன் மணமுடித்தற் பொருட்டுப் பொரு ளீட்டச் சென்றான் என்றால் தலைவன் பொருளற்றவன் என்று கொள்ளுதல் கூடாது. பழங் கிடையாய்க் கிடைக்குஞ் செம்பொருள் பலவுளவேனும் அதனையடுத்து நுகர்வோன், சிறியன், ஆள்வினையுடையவனல்லன் என்று அக் காலத்திற் கருதினர். தன் ஊக்கத்தால் ஈட்டிய பொரு ளைப் பல்வாற்றானும் நுகர்தலே ஒருவற்கு உத்தம இலக்க ணமாகவும் கருதி வந்தனர். இக்காரணம் பற்றியே தலை வன் பொருள்வயிற் பிரிவான்.

தலைவனது பொருள் வயிற் பிரிவைத் தோழி தலைவிக் குரைப்பாள். தலைவி மேலும் வருந்துவாள். தோழி பல வாறு அவளைத்தேற்றி, அவர் விரைவில் பொருளீட்டி மீள் வார் என்றும் கூறுவாள். தலைவன் பிரிந்து செல்லுங்கானை யில், தான் கார்காலத் தொடக்கத்திற்கு முன்னதாகவே திரும்புவதாகக் கூறிச்செல்வான். அதனால் தலைவி கார்ப்பரு வத்தையே எதிர்நோக்கியிருப்பாள். எத்தகைய வேலையா யிருப்பினும் முடித்து விரைவிற் பொருளீட்டித் தலைவன் கார்

காலத்திற்கு முன்னதாகவே வருவான். சில சமயங்களில் தலைவன் இன்றியமையாத சில காரணங்களால், குறித்துச் சென்ற காலத்திற்குள் பொருளீட்டித் திரும்ப வியலாமல், காலந்தாழ்த்து வருதலும் நிகழும். குறித்த காலத்தில் தலைமகன் வாராததைக்கண்ட தலைவி வருத்த மிகுதியால் அழுவாள். அது கண்ட தோழி அவள் அழுவதன் காரணத்தை வினவ, அவள் 'கார்ப்பருவம் வந்து விட்டது. ஆயின் தலைவன் திரும்பவில்லை' என்பாள். தோழி அவளை எவ்வகையேனும் தேற்றவேண்டு மென்றெண்ணி, 'பேதாய்! இது தலைவர் கூறிச்சென்ற கார்ப்பருவமன்று. இம்மேகம் கார் காலத்து மேகமன்று. இடையே வம்பாகத்தோன்றியது. ஆதலின் கவலையொழி' என்பாள். வம்பு என்பது காலமல்லாத காலத்திற்றோன்றும் பொருளாகும்.

பொருளீட்டி வந்த தலைவன் தலைவியை மணமுடித்தற் பொருட்டு இத்துணைப் பொருள் தருவல் என்று சில பெரியோர்களைக்கொண்டு தலைவியின் பெற்றோரிடத்திற் கூறச் செய்வான். தலைமகள் இருமுதுகுரவரும் அதற்குடன் பட்டுத் தலைவற்குத் தலைவியை மணமுடித்து விடுதலும் நிகழும். அன்றியும், இயற்கைப்புணர்ச்சி, பாங்கற் கூட்டம் முதலியன நிகழ்ந்தவுடனே தலைவன் தெருண்டு வரைதலும் உண்டு. களவு வெளிப்படா முன்னுறவரைதல், களவு வெளிப்பட்ட பின்றை வரைதல் ஆகிய இருவகை மணமுறைகளில் மேற்கூறியவாறு மண முடித்தல் களவு வெளிப்படா முன்னுற வரைதலாகும். களவு வெளிப்பட்ட பின்றைவரைதல் என்பது அறத்தொடு நிலையால் களவு வெளிப்பட்ட பின்னர் மணந்து கொள்ளுதல். அறத்தொடு நிற்றல் என்றால் முறையே வெளிப்படுத்தி நிற்றல் என்பது பொருள். அஃதாவது

களவை முறையே வெளிப்படுத்தி நிற்றல். தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை, தன்னையர்க்கும் அறத்தொடு நிற்றல் முறையாகும்.

தலைமகனது பொருள்வயிற் பிரிவினாலும், செவிலி தலைமகனைக் குறிவயிற் காண்டலானும், தன்னை இற்செறித்ததானும் வருத்த மிகுந்து அழுங்கால், தோழி அவள் அழுவதன் காரணத்தை வினவியவிடத்தும், அங்ஙனம் வினவாதவிடத்தும் தலைவியானவள் தோழிக்கு அறத்தொடு நிற்பாள். அவ்வாறு அறத்தொடு நிற்குங்கால் குறிப்பாகவே தன்னுடைய களவை வெளிப்படுத்துவாள். அஃதாவது : 'தோழீ ! நாம் ஆயத்தாருடன் தினைப்புனத்தே யிருக்குங்கால், தன்னால் போர் செய்யப்பட்ட யானை சென்ற நெறியை வினவி ஒருவன் வந்து நிற்க, அவனை நாம் அனைவரும் பார்த்தோம். அங்ஙனம் பார்த்த பலருள்ளும் யானொருத்தி மட்டில் நீர் வார் கண்ணொடு நெகிழ்தோளினை யுடையேனாய், இரவெல்லாம் உறக்கமின்றியிருக்கின்றேன். அதற்குக் காரணம் என்னோ ?' என்று வினவுதல் போன்றது.

தலைமகளது உடல் வேற்றுமைக்குக் காரணங்கேட்குங்காலும், தான் வெறி விலக்கிய விடத்து அதற்குக் ...... கேட்குங்காலும் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பாள். முன்னிலை மொழி, முன்னிலைப்புறமொழியாகிய இருவகையினும் அறத்தொடு நிற்பாள். தலைவியின் உடல் வேறுபாடடைந்தது முருகனாலன்றென்றும், அஃது ஒரு தலைவனாலேயே உண்டாயிருக்கவேண்டுமென்றும் கூறுவாள். அதற்குத்தானுகச் சிலவற்றைப் புனைந்துரைப்பாள். அவை, பூத்

தரு புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி முதலியன கூறி அறத்தொடு நிற்றலாம்.

பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடு நிற்றலாவது :— தலைவியானவள் ஆயத்தாருடன் சோலையில் விளையாடுங்கால் உயர்ந்த வொரு கொம்பரின் கண்ணே மலர்ந்திருந்த ஓர் பூவினைக்கண்டு, அதனையடைய விரும்பினாள். பெண்டிர் எட்டிப்பறித்தற்கியலாத விடத்தில் அப்பூவிருந்ததாகலின் தலைவி அப்பூவினைப் பெறாமல், அதனை அண்ணாந்து பார்த்த படியே நின்றாள். அங்கே ஒரு தோன்றல் வந்தான். தலைவி பூவினை வேட்கையோடு நோக்கி நிற்றலைக்கண்டு, அப்பூவினை உடனே பறித்து அவள் கூந்தலிற் சூட்டிச்சென்றான். தான் விரும்பிய மலரினைப்பறித்துத் தன்கூந்தலிற் சூட்டிச்சென்ற அவ்வாண்மகனையே நினைத்துக்கொண்டிருந்து, இவள் இவ்வாறு உடல் மெலிவடைந்திருக்கலாம் என்று கூறுவது.

புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் : யானும் தலைவியும் ஆயத்தாரும் ஒருங்கு கூடி ஓர் நாள் மலையருவியில் நீராடாநின்றோம். அதுபொழுது அவ்வருவியின் வெள்ளப்பெருக்கில் தலைவியகப்பட்டு, கால் தளர்ந்து, அஞ்சி கண்களை மூடி அந்நீரோடே சென்றாள். யாங்கள் செய்வகை யறியாமல் கதறினோம். அவ்வமயம் ஒரு குரிசில் ஆண்டுத்தோன்றி, தலைவியின் நிலையைக்கண்டு, தன் உயிரைச் சிறிதுமதியாமல், அப்புனலிடைப் பாய்ந்து, தலைவியை மார்போடு தழீஇப்போந்து கரைசேர்த்து அவ்விடம்விட்டகன்

ருன். தனக்கு ஓர் இடையூறு நேர்ந்தகாலையில், தன்னுயிரையு மதியாமல், உதவி செய்து, கைம்மாறு கருதாமல் பொருக் கென வகன்ற அவ்வாடவனையே இவள் எண்ணியவளாய் இவ்வாறு உடல் மெலிவடையப் பெற்றிருக்கலாம் என்று கூறுவது.

களிறுதருபுணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் : ஓர் நாள் தலைவி விளையாடாயத்தொடு காவின் கண் விளையாடினாள். ஆண்டு ஒருகளிறு மதங்கொண்டு எதிர்ப்பட்ட பொருள்களை யழித்துக்கொண்டு ஓடிவந்தது. யாவரும் அக்களிற்றிற் கஞ்சி ஓடி மறைந்தனர். யானும் அஞ்சிப் பாதுகாவலுள்ள ஓர் இடத்திற்கு ஓடினேன். தலைவியோ களிற்றைக்கண்ட விதிர்ப்பினால் ஓடி வர வியலாமல் அலறிக்கூவினாள். அப் பொழுது அவ்வழியே வருகின்றானொருவிடலை விரைந்து வந்து, அஞ்சலையென்று நின்மகளை இடப்பக்கத்தில் அணைத் துக்கொண்டு, வலக்கையிற்றிகழ்ந்த வேலைக் கடுவிசையுடன் எறிந்து, அப்புகர்முக வேழத்தின் அணி முகத்தில் அழுத்தித் தலைவியைக்காப்பாற்றினான். யானையின் முகத்திலிருந்து அலைபோல் வரும் குருதிநீர் அவன் உடம்பை நனைத்தலால் வலப்பால் சிவந்தும், அவள் அழுதபோது கண் மையினைக் கரைத்துக்கொண்டு வருகின்ற கருநீர் அவள் உடம்பினை நனைத்ததாதலால் இடப்பாகம் கருநிறங்கொண்டும் அவ்விரு டம்புருவிலங்கியது. வலப்பால் ஆணுருவும், இடப்பால் பெண்ணுருவும் தோற்றிய அவ்வுருவினைக்கண்டோம். அவனை அம்மையபாகனென்றே கருதினோம். தன்னைத் தழுவி, களிறு கடிந்து, இடரைத்தீர்த்த அவனையே தலைவியானவள்

இரவும் பகலும் எண்ணி இவ்வாறு உடல் மெலியப்பெற்ற னள் போலும்! என்று கூறுவது. இவ்வாறே நாய், புலி முதலியன காத்தவாறு கூறி அறத்தொடு நிற்றலும் உண்டு.

தோழி, செவிலிக்கு அறத்தொடு நிற்றற்குதாரணமா கக் காணப்படும் அகநானூற்றுச் செய்யுளொன்று, மேற் கூறியவாற்றினும் வேறுபட்டதாக விருத்தலின், அச்செய்யு ளின் கருத்தினைக்கீழே தருதும் :

' தாயே! நான் சொல்வதனை விரும்பிக் கேட்பாயாக. என் மகள் பாலுமுண்ணாள் பழங்கண் கொண்டு கனிபசந்த னள், அதற்குக்காரணம் என்னவென்று என்னை வினவுகின் றாய். அதற்குக்காரணம் யானுங்கெற்றெனவறியேன். ஆனால் முன்னொரு நாள் தலைவி, தோழிமார் முதலிய யாவரும் வேங் கைப்பூவைக் கொய்யச்சென்றேம். புலி புலி என்று வேங் கையை நோக்கிக் கூவினேம். அப்பொழுது கழுநீர் மாலையை யணிந்தவனும், மார்பிற் சந்தனம் பூசியிருந்தவனுமாகிய ஓர் குரிசில் வில்லினைக் கையிற்கொண்டவனாய், ஒரு கணையைத் தெரிந்துகொண்டு அங்கே விரைவில் வந்தான். எம்மை நோ க்கி, ' அம்மா எவ்வழிச் சென்றது ' என்று வினவினான். அவனைக்கண்ட நாங்கள் எம்முள் எம்முள் மெய்ம்மறைந்து ஒடுங்கி நாணி நின்றேம். உடனே அவன், மடவீர்! நீங் கள் பொய்கூறுவதும் உண்டோவென்று கூறியவனாய் மெது வாகத் தன்தேர்க் குதிரைகளைச் செலுத்தி, நின்மகளாகிய தலைவியின் அழகைச்சிறிது நேரம் உற்றுப்பார்த்து, திரும்பி, மறுமுறையும் பார்த்துப் பின்பு சென்றான். அந்த மாலை

நோத்தில் அவன் மறைந்த திசையையே நோக்கிய தலைவி யானவள், 'தோழி ! இவன் மானிட மகன் தானே ! ' என்று கூறினள். அப்படி அவள் கூறிய சொற்களில் ஓர் உள்ளுறை யிருக்குமென்றெண்ணுகிறேன். மதிவல்லோர்கள் அதனை நன்கு அறிந்து கொள்வர்.'

பேதை மகளிர் வேங்கைப்பூவைக் கொய்வதற்கு வேங்கையின் அடியை அடைவர். வேங்கை என்றால் புலி என்னும் ஒரு பொருள். அம்மகளிர் வேங்கையை அச்சுறுத்துவதாக எண்ணிப் புலி புலி என்பர். காற்றினால் வேங்கை வளைந்து தாழ்ந்து பெண்டிர்க்குப் பூவினைக் கொடுக்கும். அம்மகளிர் தாம் அச்சுறுத்தியதனால் அஞ்சியே அவ் வேங்கை தாழ்ந்து பூவினைக்கொடுத்தது என்று எண்ணுவர். இது மலையில் வாழும் பேதைப் பெண்டிர்க்குள்ளதோர் பண்பாகும். அதனாலேயே புலி புலி என்ற பூசல் அப்பெண்டிரிடையே எழுந்தது.

மேற்கூறியவாறு தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்க, செவிலி நற்றாய்க்குரைக்க, நற்றாய் தந்தை தன்னையர்க்குரைப்பாள். அதனைக்கேட்ட அவர்கள் முதலில் சினமிகக்கொள்வர் ; இவ்வாறு ஒரு பகல் முழுவதும் உருத்திருந்து பின்னர் ஆறி, இருவரிடத்தும் குற்றமில்லையென்று தலை சாய்த்திருப்பர். அதுகாலையில் தலைவன் சான்றோரை முன்னிட்டு அருங்கலங்களோடு வரைவு வேண்டி வருவான். நற்றாயால் உண்மையுணர்ந்த அவரும் மறுது மண முடிப்பர். இவ்வாறு மண முடிதலும் உண்டு.

சிலசமயங்களில், தோழி அறத்தொடு நின்ற பிறகு, நற்றாய், தன்னை முதலியோர் தலைமகற்குத் தலைவியை யளிக்க வுடன்படார். அன்றியும் தலைமகளின் காவல் மிகும். இவற்றையறிந்த தலைவன், தலைவியாகிய விருவரும் ஒருங்கே வருத்தமிகப் பெறுவர். இவ்விருவர் வருத்தமிகுதியைக்கண்ட தோழி எங்ஙனுமேனும் அவர் தம் துன்பொழித்து இன்பத்திலாழ்த்தவெண்ணிச் சூழ்வாள். தலைவனிடஞ்சென்று, எவருமறியாதவாறு தலைவியை உடன் கொண்டு அவனதூர்க்குச் செல்லுமாறு கூறுவாள். தலைவன், நிழலும் நீரும் இல்லாத அழல் வெங்கானத்தின் வெம்மையைத் தலைவியாற்றாள் என்றெண்ணி முதலில் தலைவியை யுடன்கொண்டுபோக மறுப்பான். உடனே தோழி, பலர் தலைவியை மணக்கும்பொருட்டுப் பொன்னுடன் வருவதை அவனுக்கு எடுத்துக்கூறி, என்னவெங்கானமெனினும், தலைவி நும்மொடுவரப் பெரிது இனியவாம் என்று உடன்போக்கு வலிப்பாள். உடனே தலைவியிடத்திற்குச் சென்று, தலைவன் அவளை உடன் கொண்டு போகக்கருதுதலைக் கூறுவாள். தலைவி தன் நாண் அழியுமென்று கூறிமறுக்க, தோழி கற்பின் மேம்பாட்டைத் தலைவிக்கு எடுத்துக்கூறி, தலைவனுடன் செல்லுதலே சிறந்தது என்பாள். தலைவி உடன்போதற்குடன்பட்டால் நாணில்லாதவளாவாள். உடன்படாவிடல் கற்பில்லாதவளாவாள். இந்நிலையில் தலைவி ஆராய்வாள். இறுதியில் "உயிரினுஞ்சிறந்தன்று நாணே, நாணினுஞ், செயிர்தீர்காட்சிக் கற்புச்சிறந்தன்று" என்றமுடிபு கொண்டவளாய் உடன்போக்கிற்கு உடன்பட்டு தலைசாய்த்து நிலங்கிளையாநிற்பாள். அவர் மிகுந்த அவ்வூரிலிருப்பதிலும் அழல் வெங்கானம் இனியதாம்

என்ற நினைவினளாதலின் சுரத்திற் செல்வதற்கு அவள் அஞ் சாதிசைந்தாள். உடன்பட்ட தலைவியைத்தோழி தலைவனிடஞ் சேர்ப்பாள். இருவரையும் வலஞ்செய்து நிற்பாள். தலைவனை நோக்கி, 'பெரும! இவள் தன் நன்னெடுங் கூந்தல் நரை யொடு முடித்து முதுமையடையினும் இவளைக் கைவிடாது பாதுகாப்பாயாக. தாயினால் அடியுண்ட குழவி, வாய் விட்டு அம்மா! அம்மா! என்றே கதறுவதுபோல, நீ இவ ளுக்கு இன்பஞ் செய்யினும் துன்பஞ் செய்யினும் இவள் நின் வரைப்பினளேயாவள். இவளுடைய விழுமம் களைபவர் நின்னையன்றி வேறு எவருமில்லை' என்று கூறிப்பின்னும்,

> " இவளே நின்னல திலளே யாயுங்
> குவளை யுண்க ணிவளல திலளே
> யானு மாயிடை யேனே
> மாமலை நாட மறவா தீமே "

என்றுங் கூறுவாள். இங்ஙனம் கூறுதற்கு 'ஓம்படை சாற் றல்' என்று பெயர். பின்னர் அவ்விருவரையும் இருள் செறிந்த விடையாமத்திற் செல்லுமாறு செய்து தான் அப் பாற் செல்வாள்.

தலைவன் தலைவியைச் சுரத்தில் அழைத்தேகுவான். ஏகுங்கால் தலைவன், 'இவள் பஞ்சினுமெல்லிய அடியினை யுடையாள். இவள் மணைப்படப்பையையன்றி வேறு எவ்வி டத்திலும் இவள் கால்கள் நடந்தறியா. அனிச்சமும் அன் னத்தின் றூவியுமே மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழமன்றோ! அவ்விதமிருப்ப, வாளினும் வேலினு மிகுந்த துன்பத்தைத்

தரும்படியான கற்களும், முட்களும் நிறைந்த இவ்வழியில் இவள் எவ்வாறு நடந்து வருகின்றாள் !' என்றெண்ணி, அவளை நோக்கி, இனி நாம் செல்லும் வழி இளமரக்காவும், வெண்மணல் யாறும் உடைத்தாயிருக்கும்; நீ கவலுறாது மெல்ல மெல்ல நடந்து வா என்பான். தலைவி தன் கால்கள் நோவுறினும் அதனை வெளிப்படுத்தாது மெல்ல நடப்பாள். அவளுடைய வருத்தத்தைக் குறிப்பாலுணர்ந்த தலைவன் அவளுடன் ஓர் சோலையிற்சிறிது பொழுது தங்கி, அவள் இளைப் பாற்றிச் செல்வான்.

இடைச்சுர மருங்கில் இவர்களைக் கண்டோர் 'வானவரோ அன்றி மானுடரேயோ இவ்விருவரும்' என்று ஐயுறுவர். பின்னர் இவர்களை நெருங்கி, எவ்வூர்க்குச் செல்கின்றார்கள் என்பதை வினவி அறிவர். அங்ஙனம் கண்டு கேட்டோரிற் சிலர் தலைவனை நோக்கி, 'ஐய ! நீ செல்லும் வழி பெரிய மலை வழியாகும்; உன்னுடைய ஊர் சேய்மையில் உள்ளதாகும்; எல்லும் எல்லின்று; எம்முடைய ஊரைத் தவிர்த்து வேறு ஊர்கள் நணித்தில்லை; இவளோ இளையவள்; மெல்லியள்; வழி நடையால் மிகத்துன்புற்றிருக்கின்றாள்; ஆதலின் எம்முடன் எம்மில்லிற்குவந்து விருந்துண்டு, இளைப்பாறி, காலையில் நீ அவளுடன் உன் ஊர்க்குச் செல்லலாம் என்பர். இவ்வாறு கூறுபவர் பெரும்பாலும் மகட் புயந்து வாழ்வோரேயாவர். அன்றியும் அவர்கள் 'இது நம் ஊரே; இங்குள்ளயாவரும் நமக்குக் கேளிரேயாவர். இவ்விடத்தின் கண்ணே நம்முடைய மணவினையை முடித்துக் கொண்டு செல்லுங்கள்' என்றும் கூறுவர். அங்கு மணமுடித்துக் கொள்வதற்குத் தலைவன் பெரும்பாலும் ஒருப்படான். ஆயின் அவர்களு

டைய அன்பையும், தலைவியின் மெலிவையுங் கண்டு, அவர் தம் வேண்டுகோட்கிணங்கி, இரவை அங்கே கழித்துக் காலையில் மேற் செல்லுதலும் உண்டு.

தலைவி காலில் சிலம்பணிந்திருப்பாள். சிலம் பணிந்த ஒரு பெண்ணும், கழலணிந்த ஓர் காளையும் வேறொருவரோடும் பாய் வருவதைக்கண்ட சிலர், அலங்கல் அவிர்சடை யண்ணலே இவ்வாறு வந்து விளையாடுகின்றாரோ வென்றெண்ணி இவர்களை அணுகாமல் அகல்வர். மணமாகும் வரையிற் சிலம் பணிந்திருத்தல் மரபு. மணம் நடைபெறுவதற்கு முன்னர் தலைவியின் சிலம்புகளை அகற்றுவர். இதற்குச் சிலம்புகழி நோன்பு என்று பெயர். சுரத்திற் செல்லுங்கால் சில சமயங் களில், ஒன்றாய் வந்த இருவரும் முன்னும் பின்னுமாக நடப் பர். தலைவன் தலைவியை முன்னே செல்லவிட்டுப் பின்னே செல்வான். அஃது அவளுடைய பின்னழகைக் காண்பா னவாவினாலேயாம். இவ்வாறு சிறிது நடக்க, தலைவி, தலைவன் பின்னே வரத் தான் முன்னே செல்லுதல் தகாது என்று எண்ணி நாண்பாலளாதலால் அவன் பின்னே நடப்பாள். இவ்விதமே தலைவன் தன் நடையைத் தளர்த்தித் தலைவியின் பின்னே வர, தலைவி மேலும் பைய நடந்து தலைவன் பின்னே ஏக, இருவரும் நடந்து சென்று ஒருவாறாகத் தலைவனது ஊரைச் சேர்வர்.

மற்றுநாள் இல்லில் மகளைக்காணாது செவிலி மிக வருந்து வாள். உடனே தன்மகளாகிய பாங்கியை யழைத்து, நாம எல்லோரும் தனிமையுறத் தலைவி யாண்டுச்சென்றனள் ? என வினவுவள். பாங்கி முதலில் ஒன்றும் அறியாதாள்

போன்று, அவர்களுடன் சேர்ந்து தானும் வருந்திப் பின்னர் செவிலியைப்பார்த்து, 'தலைவர்க்குத் தலைவியை மணமுடிக்கப் பெற்றோர் ஒருப்படவில்லை. அன்றியும் அவளையாவரும் வெறுத்தனர். ஆதலால் உன் மகள் தன் கற்பிற்கு இழிவு தோன்றாதிருக்குமாறு தலைவனுடன் சுரத்திடையே சென்றனள்' என்பாள். இதனைக் கேட்ட செவிலி, 'ஐயோ! அவளுடைய நடையுடை பாவனைகள் சென்ற சிலநாட்களாக வேறுபட்டிருந்ததையும், உணவு கொள்ளாமல் துயில் மறந்திருந்ததையும் கண்டு நான் அப்பொழுது தெளிந்தேனில்லையே! இளமைத்தன்மையை யுடைய என்மகள் எவ்வாறு பாலையைக் கடந்து செல்வாள்; நம் சோலையிற் சிறிது விளையாடினும், கால்கள் நோவடைந்தனவென்று கூறும் என்மகள் எவ்விதம் சேணிடை நடந்து செல்வாள்; சுரத்திடையே விலங்கும் புள்ளுங்கண்டு அஞ்சுவளோ? ஆறலைப்போர் துடியெறிதலாலெழும் ஓசையைக்கேட்டு அஞ்சுவாளோ?' என்று இன்னன கூறிவருந்துவாள். தலைவியைத்தலைவன் அழைத்து ஏகினான் என்பதனைக் கேட்ட தன்னையர், சுற்றத்தார் முதலியோர் அவர்களைத் தேடிச்செல்வர். இது தெரிந்த செவிலி தேடிச்சென்ற இவர்கள் தலைவற்கு ஏதேனும் தீங்கிழைப்பரோ? தலைவனே துணையென்று உடன்சென்ற என் மகட்கு அதனால் தீங்கு ஏற்படுமோ? என்று கூறி வருந்துவாள். தலைவி சென்ற சுரம் தண்ணென்றிருக்க வேண்டுமென்றும், விரைவில் தன்பால் திரும்பிவரவேண்டுமென்றும் கூறித் தெய்வத்தை வணங்கி வாழ்த்துவாள்.

பின்னர் செவிலி, நற்றாயிடம் தலைவி தலைவனுடன்

சென்றறைதக்கூறுவாள். நற்றாய் பாங்கியுடனும், ஏனையோருடனும் தனித்தனி புலம்புவாள். தன்மகள் பயிலிடங்களையும், அவள் விளையாடுதற்குகந்தனவாகிய பூவை முதலியனவற்றையுங்காணுந்தோறும், காணுந்தோறும், புலம்பி, அவளுடைய இளமைத்தன்மை, மென்மைத்தன்மை, அச்சத்தன்மை, சுரத்தின் வெம்மை முதலியன நினைந்து இரங்குவாள். அயலோரும் வருந்துவர். செவிலி, தலைவியைத்தேடிச் சுரத்திற் செல்வாள். ஆனால், நற்றாய் தன்னில்லின் அண்மையிலிருக்கும் சேரிமுதலிய விடங்களில்தான்சென்று தேடுவாள். சுரத்திற்குச்செல்லுதலில்லை.

செவிலி பின்தேடிச்செல்லுங்கால், எதிர்வருவாரை வினவுவாள். சிலர் செவிலியைநோக்கி, 'நீ தேடிச்செல்வதால் பயனொன்றுமில்லை. இதுபொழுது தலைவன் அவளுடன் தன்னூரையடைந்திருப்பான்' என்பர். சிலர், 'அவர்களைக்கண்டோம். தெய்வமென்றெண்ணி அருகிற் செல்லாது வந்துவிட்டோம்' என்பர். செவிலி இவ்வாறே முக்கோலைக் கையிற்கொண்ட அந்தணரை வினவுவாள். அதுகேட்ட அவ்வந்தணர், 'நன்றுநன்று! அவ்விருவரையுமோ தேடிப்போந்தனை! அவர்கள் இவ்வாறு செல்வது உலகியல்பன்றோ! நீ வருந்துதலொழி. சந்தனம் மலையிற் பிறந்திருப்பினும், அஃதின்பங்கொடுப்பது அதனைப்பூசுபவர்கட்கன்றோ! வெண்முத்தம் கடலிற் பிறப்பினும், அஃதுரிமையாவது அதனை அணிபவர்கட்கன்றோ! ஆகவே உன்மகள் இன்பமளிப்பதும், உரிமையாவதும் தலைவற்கேயன்றோ! ஆதலின் நீ வருத்த நீங்கி உன்னூர்க்குத் திரும்புவாயாக' என்பர். செவிலி தன் மகளின் காற்சுவட்டைக்கண்டு இரங்கியவாறே, கவலை கூர்ந்தவளாய்த் தன்னூர் சேர்வாள்.

சில சமயங்களில் தம்மகளைத் தேடி விரைந்து பின் சென்ற தன்னையர், சுற்றத்தார் முதலியோர் தலைவனை நெருங்குவர். தலைவன் தலைவியை நோக்கி, 'பின்னேவருபவர் அறலைக் கள்வரேயாகில் ஒருகணத்தில் யாவரையுங் கொன்று குவிப்பேன். நமரேயாகில் அவர்முன் செல்லுதற்கு அஞ்சுவேன்' என்பான். நமரேல் அஞ்சுவேன் என்றது அவருடன் பொர ஆற்றலைமைபற்றியன்று. எதிர்ப்பின் அவர்களைக் கொலை செய்ய நேரிடும். சுற்றத்தார் இறப்பின் தலைவி ஆற்றாது வருந்துவாள் என்பதுபற்றியேயாகும். இங்ஙனங்கூறிய தலைமகன், தலைவியைச்சேர்ந்தோரே வருகின்றனர் என்பதை யுணர்ந்து பக்கத்தேயிருக்கும் குன்றின் புறத்திலேனும், வேங்கையின் புறத்திலேனும் மறைவான். தமர்வரின் தன் தலைவற்கு ஏதேனும் தீங்கியற்றுவரோ வென்று தலைவி மிக வேங்கி, அவ்வேக்கத்தினால் இறந்துபடினும் படும் என்பது கருதியே தலைவன் தலைவியை விட்டுநீங்கி மறைவான். சுற்றத்தார் தலைவியுடன் தம் நகர்க்குச்செல்வர். இவ்வாறு இடைச்சுரத்தில் தலைவியைத் தமர் மீட்டு அழைத்துச் செல்ல, தலைவன் தன்னூரடைந்து, வேண்டும் பொருள்களுடன் வந்து மணமுடித்துக்கொள்ளுதலும் உண்டு. இடைச்சுரத்தில் தமர் கண்களிற்படாது தலைவன், தலைவியுடன் தன் நாட்டையடைந்தால் அவ்விடத்திலேயே தங்கள் மணத்தை முடித்துக் கொள்வான். பின்னர் தலைவியுடன் அவள் நாட்டிற்குத்திரும்புவான். இவ்வாறு இருவரும் மணமுடித்துக்கொண்டு திரும்பினும், தலைவியின் தாய் தமர் அறிய மணமுடியாமையின், யாவரும் ஒருங்கு கூடி மீண்டும் தலைவியின் இல்லில் மணச்சடங்குகளுடன் மணமுடிப்பர்.

களவொழுக்கம் நிகழ்தற்குரிய காலவரையறை இரண்டு திங்களேயாகும். அவ் விருதிங்களுள், நான்குநாட்கள் இருக்க மணமுடிப்பபதியல்பு என்பர். இருதிங்கள் களவொழுக்கம் நிகழத் தலைவன் பதினாறாண்டும், தலைவி பன்னீராண்டும் நிரம்பப் பெறுவர்.

நெடுங்காலத்திற்குமுன் எல்லா வருணத்தார்க்கும் மணத்தின்பொழுது வேள்விச்சடங்குகள் ஒன்றாயிருந்தன. களவு நிகழ்ந்தபின்னரே மணமுடிந்து கற்பு நிகழ்தல் வழக்கமாக விருந்தது. இவ்வாறு நடந்ததனால் கீழோர் பலரிடை பொய்யும் வழுவும் தோன்ற ஆரம்பித்தன. பொய், வழுஎன்பன செய்த ஒன்றினைச் செய்யவில்லை யென்பதும், அங்ஙனம் சொல்லுதலேயன்றி ஒழுக்கத்திலும் இழுக்கி நடத்தலுமாம். இவற்றைக்கண்ட இருடிகள், மேலோர் கரணம், கீழோர் கரணம் எனவேறுபடுத்தி, கீழோர்க்குக் களவில்லாமலும் கற்பு நிகழலாம் என்று விதித்தனர்.

ஆனால் பண்டைத்தமிழரிடை, களவொழுக்கத்தின் பின்னர் நிகழும் மணமாகிய கந்தருவமணமே நடைபெற்று வந்தது என்றுகூறுதல் எங்ஙனம் பொருந்தும் என்ற கேள்வி எழலாம். அதற்குத் தகுந்தவிடையளித்தல் எளிதேயாம். இருமுதுகுரவர் தம்மக்கட்கு மணஞ்செய்யுங்கால், மணம்படுக்கக் கருதிய ஒரு ஆடவனையும், மகளையும் எதிராகநிறுத்தி, ' இத் தன்மையானை நினக்கு மணஞ்செய்ய நினைத்தோம், இது நினக்கிசையுமோ ' என்று மணமகனை வினவியும், அவ்வாறே அவ்வாடவனைமணக்க இசைகின்றனளா என்று மணமகளை

வினையும், இருவருடைய உடன்பாடு பெற்ற பின்னரே மணமுடிப்பர். அவர்கூறுக்கால் குறிப்பானுணர்ந்து செய்வர். இவ்வாறு இருவர் உள்ளமும் ஒத்தபின்னரே மணஞ்செய்தமையின் உள்ளப்புணர்ச்சி நிகழ்ந்ததாயிற்று. நினைத்தலும் செய்தலோடு ஒக்கும் என்று பரிமேலழகர் முதலியோர் கூறியிருத்தலின், இருவர்மனமும் ஒத்தகைக் களவொழுக்கம் நிகழ்ந்ததாகவே எண்ணவேண்டும். ஆதலால் பொதுவாகப் பண்டைத்தமிழர் மணம் களவொழுக்கத்திற்குப் பின்னரே நிகழ்ந்தது என்று கூறுதல் பொருத்தமுடைத்து.

மணஞ்செய்து கோடற்குரிய விருவரும் ஒத்தகுலத்தவராய் இருத்தலோடன்றி தலைவன் தலைவியினும் உயர்ந்தகுலத்தோனாய் இருப்பினும் இவ்வாறு களவுநிகழ்ந்தபின்னர் மணம் நிகழும். ஆனால் தலைவிகுலம் உயர்ந்திருந்து, தலைவன் தாழ்ந்தகுலத்தவனாய் இருப்பின் இருவரும் கணவன், மனைவியாதற்கு உரியரல்லர் என்பது நச்சினார்க்கினியர் முதலியோர் கருத்தாகும்.

திருமணம் நிகழுங்காலையில் மணமகளைக் கொடுத்தற்குரிய மரபினையுடையோர் அவளுடைய இருமுதுகுரவரும் தாயொடுபிறந்தார், தன்னையர், தாயத்தார், ஆசான் முதலியோரும் ஆவர். ஆனால் தலைவன் தலைவியை உடனழைத்துச் சென்றகாலத்தில் இவ்விதமானகொடைக்குரி மரபினோர் இன்றியே, வேள்வியாசிரியன்காட்டிய சடங்கின் வழியால் மணம் நிகழ்வதும் உண்டு.

நம்முடைய தற்கால வழக்கப்படியே முதலில் திருமணத்திற்கு நாட்கொள்வர். பண்டைத் தமிழர் சிறந்த ஒரு காரி

யம் செய்யத்தொடங்குங்கால் அதற்கு நாட்கொள்ளுதல் மரபு. போர் செய்யக் கருதியவரசர் அதற்கு நாட்கொள்வர் என்பது முன்னரே போர்முறையிற் குறிப்பிடப்பட்டது. திருமணத்திற்கென்று குறிக்கப்படும்நாள் வளர்பிறைக்காலமாகவே இருத்தல்வேண்டும். திங்கள் தன்கலைகள் பெருகப்பெற்று வளர்வதுபோல மணமக்கள் பெருகவாழவேண்டும் என்பது அவர்கள்உட்கிடை. திங்களை உரோகணிவந்து கூடுகின்ற நன்னாளையே திருமணத்திற்கு ஏற்றநாளாகக் கொண்டனர். இதனை,

> " அங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட்
> சகட மண்டிய துகடீர் கூட்டத்து "
> " திங்கட் சகடணைய வானத்துச்
> சாலி யொருமீன் தகையாளை "

என்ற அடிகளால் அறியலாகும். உரோகணியோடு கூடிய வளர்பிறைச்சந்திரன் உச்சனாதலால் அந்நாள் எல்லாக்குற்றமும் நீங்கிய நன்னாள்என்பர். சிலமரபினர், இவ்வாறு மணஞ்செய்தற்கு நாட்கொண்டதை, நகரத்துமக்கள் உணர்வதற்காக யானையின் எருத்தத்தே சிலமகளிரை ஏற்றியனுப்பி, நகர் முழுவதும் அறிவிக்கச் செய்வர்.

திருமணத்தன்று காலையில் நெய்யினிடத்துக் கனிந்த இறைச்சியோடு கூடிய வெண்சோற்றால் உயர்ந்தோரைப் பேணுவர். விருந்தினர் முதலிய யாவரும் இடையறாதுஉண்பர் உழுந்தினால் செய்யப்பட்ட களியை அவர்கள் உண்டதாகத் தெரிகின்றது இக்களிக்கு 'கும்மாயம்' என்று பெயர். கூறப்பட்டிருக்கிறது. தற்காலத்தில் வைஷ்ணவர் கோயில்கள்

சிலவற்றில், புழுக்கிய பச்சைப்பயற்ருேடு சருக்கரை முதலி யன கூட்டி ஆக்கப்படுவதொருசிற்றுண்டி இப்பெயருடன் வழங்கிவருகிறது. அக்காலத்தில் இத்தகைய வுண்டியே உழுந் திறைலும் செய்வது வழக்கம்போலும்! பின்னர் புள்நிமித்தம் சுபமாகக் கூடப் பெறுவர். பலகால்கள் நிறுவியமைக்கப்பட் டிருக்கும் பெரிய பந்தரில் பழமணலகற்றிப்புதுமணல்பரப்பி யிருப்பர். அம் மனை மாலைகளாலும், விளக்குகளாலும் பொலிவு பெறும்படி செய்வர். தோரணங்களைப் பந்தரின் நாற்புறங்களி லும் கட்டி, கமுகு, வாழை முதலியனவற்றை யழகுபெற நாற்றி அலங்கரிப்பர். மணமகட்குத் தூயவாடைகளையுடுத் தியும், அணிகளை அணிந்தும் அழகுசெய்வர். கடவுளைப்பேணு வர். எங்கும் மணமுழவொடு முரசு ஒலிக்கும். எல்லாக்குற்ற மும் நீங்கிய நன்முகூர்த்தமாகிய உரோகணி திங்களை வந்து அடையுங்காலம் நெருங்கியவுடன், உச்சியிற்குடத்தினராய், புத்தகன் மண்டையராய், கணவனுடன் இல்லறம் நடாத்தும் முதுமைப்பருவமடைந்த பெண்டிர் சிலர் சென்று தண்ணீர் கொணர்வர். அக்காலத்திய திருமணங்களில் யாவரும் வந்து புகுதற்குத் தகுதியுடையவர்களாதலால் பலர்வந்து ஆண்டுக்குழுமியிருப்பர். அவ்வமயம் பெண்டிர் குழுவில் பெருத்த ஆரவாரம் உண்டாகும். பெண்டிர் கொண்டுவந்த நீரில் பூவும், நெல்லும் சொரிந்திருப்பர் அப்பொழுது புதல் வர்ப்பயந்த நால்வர் மகளிர் ஆண்டுத் தோன்றுவர். முது செம் பெண்டிர் தாம்கொண்டுவந்த நீர்க்குடங்களை முன்ன தாகவும் பின்னதாகவும் முறையேகொடுப்பர். அம்மகளிர் நால்வரும் அந்நீர்க்குடங்களை வாங்கி, மணமகளுடைக் குளிப்பாட்டுவர். இங்ஙனம் தலைவியை நீராட்டுவதற்கு ‘வதுவைக்கல்யாணம்’ என்றுபெயர். இதுவும் ஒரு கல்

யாணமாகவே கருதப்பட்டது. அம்மகளிர் நால்வரும் அலரியும், நெல்லும் தலைவியின் 'கதுப்பிற்பொலியுமாறு நீராட்டுங்கால், 'கற்பினின்றும் சிறிதும் வழுவாமல் பல நன்மைகளைக் கணவற்குச் செய்து, உன்னை உரிமையாகப் பெற்றவக் கணவன் விரும்பும்படி வாழக்கடவாயாக' என்று வாழ்த்துவர். பின்னர் அப்பெண்டிர் தம் கண்களையிமையாராய்த் தலைவியின் அழகினை நோக்கிவிட்டு விரைவில் மறைவர்.

அந்தணர் வேதங்களிற் கூறிய சடங்குகள் நடக்க இருவரும் தீவலஞ் செய்வர். அதன் பின்பு சில மகளிர் சாந்தினராயும், புகையினராயும், விளக்கினராயும், இடித்த சுண்ணத்தினராயும், முளைப்பாலிகையினராயும் ஆண்டு வந்து, 'இவள் தன் காதலனைத் தன் கண்ணினும் நெஞ்சினும் பிரியாமல் சேர்ந்திருப்பாளாக; இவனும் இவளையகலாமல் கூடியிருப்பானாக' என்று கூறி வாழ்த்தி, தாம் வழிபடு தெய்வத்தைச் சின்மலர் தூஉய்க் கைதொழுது அப்பாற் செல்வர். தாய் தந்தையர் ஆண்டு வந்து, தலைவிக்கு 'நீ இவனை இன்னவாறு வழிபடுவாய். இவனினும் சிறந்த தெய்வம் வேறு நினக்கில்லை. இவற்கு இன்னவாறு குற்றேவல் செய்வாய்' என்று கூறியும், தலைவற்கு, 'நீ இவளை இன்னவிதமாகப் பாதுகாப்பாய்' என்றும் மந்திரவகையால் அங்கியங் கடவுள் அறிகரியாகக் கற்பிப்பார். இங்ஙனம் நிகழ்ந்தவன்று இரவில் மெல்லிய பூக்களையுடைய வாகையின் இலையை அறுகின் குளிர்ந்த முகையுடன் சேர்க்கட்டிய வெண்ணூலை மணமகட்குச் சூட்டி, தமர் தலைவியைத் தலைமகனுக்கு இற்கிழத்தியாகத் தருவர். திருமணத்தின் நாலாம் நாளையிரவில் இருவரையும் ஓரிற் கூட்டுவர். திருமணம் நான்கு நாட்கள் நடை

பெற்றதாகத் தெரிகிறது. இவ்விதம் பண்டைத் தமிழரிடை நடைபெற்றுவந்த திருமணம், தற்காலத்திய சில மரபினரின் திருமண முறையோடு பெரும் பான்மை ஒற்றுமையுடையதா யிருக்கின்றது.

மணமுடியப்பெற்ற பின்னர் தலைவனும் தலைவியும் தனி மனை யிருந்து இல்லறம் நடத்துவர். தலைவன் பாங்கியைப் பலவாறு புகழ்வான். அவள் களவுக்காலத்தில் தமக்குச் செய்த நன்றியைப் பலபடக் கூறுவான். அவற்றைக் கேட்ட பாங்கி, ' உமையும் சிவனும் பிரியாது ஒன்று கூடி வாழ் வது போல் நீங்கள் பன்னெடுங்காலம் பிரியாது வாழ்வீர் களாக ' என்று வாழ்த்துவாள். தலைவன் தலைவியினுடைய அன்பு, நாண், கற்பு முதலியன கண்டும், இல்லறம் நிகழ்த் துங்கால் அவள் கல்லாமற் பாகம்படவொழுகும் இயல் பினைக் கண்டும் மிகமகிழ்ந்து பாராட்டிப் புகழ்வான். மாசறு பொன்னே ! வலம்புரி முத்தே ! காசறு விரையே ! கரும் பே ! தேனே ! அரும்பெறற் பாவாய் ! ஆருயிர் மருந்தே ! நின்னைமலையிடைப்பிறவா மணியே என்பேனோ ; அலையி டைப்பிறவா அமிழ்தே என்பேனோ ; அன்றி யாழிடைப் பிறவா இசையே என்று தான் கூறுவேனோ என்றின்னன கூறுவான். களவுக்காலத்தில் தமக்கு ஒரு துன்பமும் இன் றுகக்காத்த தெய்வம் எப்பொழுதும் நம்மைக்காக்கும் என்று அத்தெய்வத்தை வணங்குவான். களவுக்காலத்தே அறிந் தும், அறியாமலும் செய்த பாவங்கள் நீங்குமாறு அவை கட்கான கழுவாய்களைச்செய்து முடிப்பான். தலைவி கற்பு

டையவள் ஆதலால் தெய்வங்களையும், தொழத்தகுதியுடை யோரையும் தொழுது அறிந்திராள். ஆதலால் தலைவனை வன், வேட்பித்த ஆசிரியனிடத்தும், கற்பித்த ஆசிரியனிடத் தும், ஆன்றவிந்தடங்கிய கொள்கையையுடைய சான்றோர் களிடத்தும், தேவர்களிடத்தும் ஒழுகும் ஒழுக்கத்தினைத் தலைவிக்குக் கற்பிப்பான். பின்னர் இருவரும் கருத்து ஒரு மித்துச் சுற்றந்தழாலும், அறவோர்க்களித்தலும், அந்தண ரோம்பலும், துறவோர்க்கெதிர்தலும், விருந்தெதிர் கோடலு மாகிய இல்லறத்தோர்க் கெடுத்தோதப்பட்ட அறங்களைச் செய்வர்.

இவ்வாறு இவர்கள் இல்லறம் நடாத்துங்கால், தலைவி யைக் குழவிப்பருவமுதல் உடனிருந்து வளர்த்த செவிலித் தாய், தான் எடுத்து வளர்த்த மகளின் இல்லறவாழ்க்கை யைக் கண்டு களிக்க வருவாள். வந்து சின்னாள் தங்கியிருந்து, பின் தலைவியைப்பெற்ற நற்றாயிடஞ்சென்று தலைவியின் கற் பின் நிலையையும், மனைவாழ்க்கையின் தன்மையையும், இருவர் காதலையும் எடுத்துரைப்பாள். இதனை,

" முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவ னுண்டலின்
உண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதல் முகனே "

என்ற குறுந்தொகைச் செய்யுளால் நாம் தெற்றென வுணா

லாம். தலைவியின் இல்லிற்குச்சென்று மீண்ட செவிலி நற்றாய்க்குத் தலைவியின் மனைவாழ்க்கைத் தன்மையை எடுத்துரைக்கின்றாள். அதனைப்பலபடப்புனைந்து கூறாமல் ஓர் நாள் நடந்த நிகழ்ச்சியை மட்டும் கூறுபவளாய், 'உறைந்த தயிரைப்பிசைந்த செங்காந்தள் போன்ற மெல்லிய விரல்களால், இடையிற்கட்டிய ஆடை சமைக்கும் விரைவினால் கழன்று விழ, அதனைக்கழலாமல் உடுத்திக்கொண்டு தாளித்தலால் உண்டாகிய புகை தன் கண்களினிடத்தே கமழும்படி, தான் சமைத்த புளிப்பாகரைக்கணவன், மிகவினிது என்று உண்ணுதலைப்பார்த்த தலைவி, தான் அதனைச் செய்யுங்காலடைந்த வருத்தங்களை மறந்து மனமகிழ்ந்தாள்.' என்கின்றாள்.

இல்லறம் நடத்துங்கால் தலைவன் தலைவியைப்பல காரணங்களால் பிரிவான். அப்பிரிவு அறுவகைப்படும். அவை ஓதற்பொருட்டும், காவற்பொருட்டும், தூதின்பொருட்டும், துணையின் பொருட்டும், பொருளின் பொருட்டும், பரத்தையின் பொருட்டும் பிரிதலாம்.

ஓதற்பிரிவு: தலைவன் கல்விகாரணமாகப்பிரிந்து அயல் நாடு செல்லுதல். இல்லறத்தின் பொழுது இவன் ஓதுதற்குப் பிரிந்தானென்றால் இதுவரை கல்வியறிவில்லாதவன் என்பதல்ல. முன்பே குரவர்களால் கற்பிக்கப்பட்டு, அவன் வதிந்த நாட்டிலுள்ளோர் அறிந்தன கற்றிருப்பான். ஆனால் ஓதற்குப்பிரிந்தது எதற்காகவென்றால், அறம், பொருள், இன்பம், வீடுபேறுகள் முதலிய நூல்களெல்லாங்கற்றவர் அயல் நாடுகளிலிருப்பின், அவர்களைக்கண்டு தன் கல்வியை

அதிகப்படுத்துவதற்கேயாம். அன்றியும் தன் கல்வியறிவை மேம்படுத்தி, ஏனையோரைக் கீழ்ப்படுத்தற்கும் ஆகும். ஓதற்குப்பிரிந்து மீளுதற்கு எல்லை மூன்றியாண்டாகும். ஓதல் என்பதனுள், வேதம் ஓதுதல், வேதம் அல்லாத கல்விகற்றல், படைக்கலம் பயிறல், யானை தேர் குதிரை முதலியன ஊர்தல் என்பனவெல்லாம் அடங்கும்.

காவற்பிரிவு : தன் நாட்டைக் காத்தற்பொருட்டுப் பிரிதல். இவன் நாட்டைப்பகைவர் வருத்த, அதனை விலக்குதற்பொருட்டுப் பிரிந்தான் என்பதல்ல. நாட்டகத்தினின்று நகரத்திற்கு வந்து முறை செய்யமாட்டாத மூத்தோர், பெண்டிர், மூடவர், கூனர், குருடர், பிணியுடையோர், முதலியோர்க்கு வேண்டுவனவற்றை நேரிற் கேட்டு, அவற்றைச் செய்யும் பொருட்டும், வளனில் வழி வளம் தோற்றுவித்தற்கும், தேவர்மனை, சாலை, அம்பலம் முதலியன நன்னிலையில் இருக்கின்றனவா, ஆங்காங்கு நடக்கவேண்டுவன செவ்வனே நடைபெறுகின்றனவா என்று தானே நேரில் உணர்தற்பொருட்டும் பிரிவான். இக் காவல் அறப்புறங்காவலும், நாடுகாவலும் என இருவகைப்படும். அறப்புறங்காவற்கு எல்லா வருணத்தாரும் பிரிவர். நாடு காத்தற்குப் பிரிபவர்கள் அரசர்களேயாவர். அரசன் உலகத்துயிர்கட்குத்தாய்போல் இருக்கவேண்டும். உயிர்களும் செங்கோலரசனொருவனைத் தாயாகக்கருதும். பிறந்த உயிர் தாயைக் கண்டு இன்புறுவதுபோலத் தன்னாற் காக்கப்படும் உயிர்கள் தன்னைக்கண்டு இன்புறுதலின், அவர்கட்குத் தன் உருவு காட்டுதற் பொருட்டும் பிரிவது. இப்பிரிவிற்குக்காலவரையறை

யில்லை. ஏனெனில் காடிடையிட்டும், நாடிடையிட்டும் செல்ல வேண்டுவதின்மையான்.

தூதிற்பிரிவு : இது பகைதணிவினைப்பிரிவு எனவும் படும். போரக்கருதி நிற்கும் இரு அரசர்களைச் சந்து செய்யும் பொருட்டுப்பிரிதல். அவ்விருவரும் போர் செய்தால் உலகத்துயிர்கள் வீணே அழிந்து, அவர்கட்கும் தீங்கு ஏற்படும். தலைவன் அருளுள்ளவன் ஆதலின் அப்போரை நிறுத்தும் பொருட்டுப்பிரிவான். இப்பிரிவிற்கு உரியவர்கள் அந்தணரும், அரசரும் ஆவர். அந்தணர் தூது செல்லின் அவ்விருவரையும் இரந்து சந்து செய்விப்பர். அரசர் தூது செல்லின் அவர்களையச்சுறுத்திச் சந்துசெய்விப்பர். இப்பிரிவிற்குக்காலவரையறை ஓர் யாண்டாகும்.

துணைவயிற்பிரிவு : தன் நண்பனாகிய ஒரு வேந்தனை அவன் பகையரசர் யாரேனும் எதிர்த்தால், தன் நண்பனுக்கு உதவி செய்யும் பொருட்டுப்பிரிதல். இப்பிரிவு அந்தணர் ஒழிந்த யாவர்க்கும் உரியதாகும். இதற்கும் எல்லை ஓர் யாண்டாகும்.

பொருள் வயிற் பிரிவு : பொருளீட்டும் பொருட்டுப் பிரிதல். தலைவன் வறியனாய் இருந்து பின்னர்ப்பொருள் ஈட்டப் பிரிந்தான் என்பதன்று. இருமுதுகுரவரால் சேர்த்து வைக்கப்பட்ட பொருள் பலவுளவேனும், அவற்றைத்தான் துய்ப்பது ஆண்மையல்லவென்றெண்ணி, தன்னுடைய முயற்சியால் பொருள் சேர்த்து, அதனையே துய்க்கவிரும்பி, அதன் காரணமாகப் பிரிவது. அன்றியும் தாயப் பொரு

ளாற் செய்யும் சிறப்புகளால் தேவரும், பிதிரரும் இன்ப மடையமாட்டார்களாதலால், தானாக முயன்று பொருளீட்டி அவர்கட்குச் சிறப்புச்செய்யவெண்ணியும் ஆகும். இப்பிரிவு யாவர்க்கும் உரியது. இதற்கும் எல்லை ஓர் யாண்டாகும்.

பரத்தையிற் பிரிவு : பொது மகளிர் பொருட்டுப்பிரிதல். பொதுமகளிர் பொருட்டுப்பிரிந்தானென்றால், தலைவியினி டத்து அன்பில்லாதவன் என்றும், இழுக்கியவொழுக்கம் உடையவன் என்றும் கூறுதல் தகாது. தலைவன் தலைவியி னிடத்தில் மாறாத அன்பினை உடையவனாவான். பரத்தையர் காமக்கிழத்தியர், காதற்பரத்தையர் என்று பிரிக்கப்படுவர். காமக்கிழத்தியர் என்பார் ஒருவன் தனக்கே யுரிமை பூண்ட குலப்பரத்தையர் மகளிராய்க்காமங்காரணமாகத் தலைவனால் மணந்து கொள்ளப்பட்டவராவர். காதற் பரத்தையர் என் பார் யாரையும் விரும்பாத சேரிப்பரத்தையர் மகளிராய்த் தலைமகனிடத்தில் அன்பு பூண்டவர்கள். ஆகவே இப்பரத் தையரும் தலைவனால் மணந்துகொள்ளுதற்கு உரியவராவர். இப்பிரிவு தீதன்று என்பதற்குப் பலர் பலவிதமான அமைதி கள் கூறுவர். அவற்றுள் அறிஞர்களால் ஏற்புடைத்து என்று கொள்ளத்தகுந்தது ஒன்றேயாகும். அஃதென்னவெனில் : தலைவனுடைய இளமைப்பருவத்தில், அவன் இருமுதுகுர வர், இவற்குரிய பெண் இவள் என்றும், இவற்குரிய யானை, குதிரை இவையெனவும் வகுத்திருப்பர். அம்மகளிரும் தலை வனுரிமையென்றே வளர்க்கப்படுவர். தலைவன், தலைவியை மணந்து இல்லறம் நடத்துங்கால், தலைவனால் ஒழுகப்படுவன அறம், பொருள், இன்பம் என்பன. பகலின் முப்பது நாழி

கையுள் முதல் பத்து நாழிகை அறத்தின் வழிநின்றும், இடையன பத்து நாழிகையும் பொருளின் வழிநின்றும், கடையன பத்து நாழிகையும் இன்பத்தொடுபட்டும் ஒழுகுவான். இவ்வாறு முதல் இருபது நாழிகையும் அறம், பொருள் இவற்றின் வழிநின்ற பின்னர், இன்பத்தின் பொருட்டுத் தலைவியிடஞ் செல்வான். செல்லும் பொழுது, இவனுக்குரிமையென்று வளர்க்கப்பட்ட அம்மகளிர், குழல், யாழ், தண்ணுமை இவற்றினின்றும் ஒலியெழுப்புவர். அவ்வொலியைச் செவியேற்ற தலைவன், பக்கலில் உள்ளவர்களால் அவர்கள் தனக்குரிமை யென்பதை யறிந்து, அவர்களிடைச் செல்வான். இதுவே பரத்தையிற்பிரிவு நிகழும் விதம்.

தவிரவும், காலைக்கடன் கழித்தலும், உலகத்திலிருந்து நாடுகாவற்றொழில் செய்தலும், விருந்துடன் உண்ணுதலும், நாவலரொடு கல்வி பயிற்றலும், ஆடல் பாடல்களிற் களித்தலும், மடவாரொடு கூடலும், துயிறலும், துயிலுணர்ந்து தேவர்ப்பராவலுமாகிய காலவரையறை எட்டினுள் ஆடல் பாடலும் ஒன்றுதலானும், அவற்றிற்குரியார் பரத்தையர் ஆதலானும், அதற்குரிய காலத்தில் அவரிடை மனஞ் செல்லுதல் இயல்பாதலானும், பரத்தையிற் பிரிதலிற் குற்றமின்றென்க. இப்பிரிவு எல்லோர்க்கும் உரியது. இதற்குக் காலவரையறையில்லை.

மேற்கூறியவாறு பிரியுங்கால், அண்மையிலுள்ள இடங்களுக்கு நடந்தும், சேய்மையான இடங்களுக்கு ஊர்தியிலும், கடல் கடத்தற்குக் கலத்திலும் செல்லுதல் இயல்பாகும். அந்தணரும், மகளிரும் கலத்திற் செல்லுதல் முறை

யன்று என்று கொண்டனர். ஓதல், தூது, பொருள் இம் மூன்றன் காரணமாகப்பிரிபவர் தலைவியொடு செல்லுதல் இல்லை. தலைவன் பிரியும் பொழுது தலைவிக்குச்சொல்லியும், சொல்லாமலும் பிரிதற்கு உரியன். ஆனால் தோழியினிடஞ் சொல்லியே பிரிவான்.

தலைவன் பொருள்வயிற் பிரியுங்காலையில், அதனைக் குறிப்பால் உணர்ந்த தலைவி வருந்துவாள். அதனால் அவள் இறந்துபடினும்படும் என்று கருதிய தோழி, தலைவன் பொருட்பிரிவை நிறுத்த முயல்வாள். பெரும்பாலும் தலைவன் அவர்களைத் தேற்றிப்பிரிந்து செல்வான். கார்காலத்தொடக்கத்திற்குள் மீள்வதாகக்கூறி, அவ்விதமே வர முயல்வான். அவ்வாறு திரும்புங்கால் அவன் மனம் ஒரு நிலையிலிராது. மிகவிரைவில் தேரைச் செலுத்துமாறு பாகனைத்தூண்டுவான். பாலை நிலத்தில் தலைவியின் உருவெளித்தோற்றத்தைக்கண்டு வருந்துவான். தேர் எத்துணை விரைவாகச் செலினும், மேலும் விரைந்து செலுத்துமாறு பாகனைத்தூண்டுவான். அவனதுயிர் அவனினீங்கி தலைவியினிடத்திலிருக்கும். மேகங்கள் விரைந்து செல்வதைப்பார்த்து, இம் மேகங்களைக் கண்ட தலைவி வருந்துங்கொல் என்றெண்ணி யேங்குவான்.

பரத்தையிற் பிரிந்த தலைவற்கு, தலைவி பூப்பெய்தி நீராடியதைக் குறிப்பினுணர்த்த, தோழியானவள் செம்பூச்சூடி,செஞ்சாந்து பூசி, செவ்வுடையுடுத்து பரத்தையர் தெருவிற் சென்று உலாவுவாள். இதற்குச் செவ்வணியணிதல் என்று பெயர். அதுகண்ட தலைவன், தலைவி நீராடியதையுணர்ந்து, இல்விற்

குச்செல்வான். வெள்ளணியணிதல் என்றுமொன்றுண்டு. சேடியானவள் வெண்பூச்சூடி, வெள்ளுடையுடுத்துப் பரத்தையர் தெருவில் உலாவுதல். தலைவி புதல்வற் பயந்ததையறிவிப்பதற்கு இவ்வெள்ளணியணிதல் மரபு. புதல்வன் தனக்குப் பிறந்திருப்பதை யுணர்ந்த தலைவன் விரைவில் தன்னில்லிற்கு வருவான்.

பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைவனுடன் தலைவி ஊடுவாள். தலைவியின் ஊடலைத்தீர்ப்பதற்குப் பாணன், பாடினி, கூத்தர், இளையர், கண்டோர், பாங்கர், பாகன், பாங்கி, செவிலி, அறிவர், காமக்கிழத்தி, விருந்து, காதற்புதல்வர் முதலியோர் வாயில்களாவர். இவர்களுள் விருந்து, காதற் புதல்வன் ஒழிந்த ஏனையோர் தலைவியின் ஊடல்தணிக்க முயலுங்கால், அவற்றால் அவள் ஊடல் தணிதல் ஒருதலையன்று. தலைவன் சில விருந்தினருடன் மனைக்குட் புகுந்தால் தலைவி ஊடல் தணிதல் திண்ணம். ஏனெனில், வந்த விருந்தினரை முகமன்கூறி உபசரிக்க வேண்டும். கணவன், மனைவி இருவரும் சேர்ந்து உபசரித்தலே முறை. ஆதலால் அவள் ஊடல் ஒருவாறு தணியப்பெறுவாள். இவ்வாறே காதற் புதல்வனாலும் ஊடல் தணியப்பெறுவாள். பரத்தையிற் பிரிந்த தலைவன், இல்லில் நுழைந்து, தலைவி ஊடியிருப்பதை யுணர்ந்து, அவளூடலைத் தணிப்பதற்கு, அவள் மருங்கிலிருக்கும் புதல்வனை நோக்கி ஆசைமொழிகள் கூறி, மெல்ல அவளிடமிருந்து அவனை எடுப்பான். புதல்வனிடத்துக்காட்டும் அன்பினைக் கண்ட தலைவி சிறிது சிறிதாக ஊடல் தணிவாள். சிலசமயங்களில் தலைவன் தன்னுற்றமையையே வாயிலாகக்கொண்டு

தலைவியை யடைவான்.

மேற்கூறிப் போந்தவாறு இல்லறம் நிகழ்த்திய தலைவனுந் தலைவியும் மக்களைப்பெற்று, துய்க்க வேண்டிய இன்பங்களை யெல்லாம் துய்த்தபின், அவ்வேட்கை தீரப்பெற்று, வானப்பிரத்தமும், சன்னியாசமுமாகிய நிலையில் நின்று பின்னர் வீடுபெறுவர் என்பதும், அதுவே இல்லறத்தின் பயனென்று கொண்டிருந்தனர் என்பதும், ஆன்றோர் பலரின் கருத்தாகும்.



## 5. கற்பு நிலை.

பண்டைப்பெண்டிரின் கற்பு நிலையை யறிவதன்முன் கற்பு என்பதன் இலக்கணத்தையும், பெயர்க் காரணத்தையும் அறிதல் இன்றியமையாதது. குரவர்கள் தம் பெண்ணை மணஞ் செய்து கொடுக்குங்கால், கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும், அவனை இன்னவாறு வழிபடுக எனவும், அவற்கு இன்னவாறு குற்றேவல் செய்தொழுகெனவும் தம் பெண்ணிற்குக் கற்பிப்பர் என்பது முன்னரே கூறப்பட்டது. இல்லறம் நடத்துங்காலையில், ஆசிரியர், ஐம்பொறி அடக்கி யோர், தேவர் முதலியோரை வழிபடும் ஒழுக்கத்தையும், தலைவி புதல்வற் பயந்த காலத்து முனிவர், தேவர், அந்தணர் போன்றார் மாட்டுச் செய்யுஞ் சிறப்பையும் தலைவன் தலைவிக் குக் கற்பிப்பான் என்பதும் முன்னர்க் குறிப்பிடப்பட்டது. இவ்வாறு இருமுதுகுரவராலும், கணவனாலும் செவிலியா லும், அந்தணர் முதலியோராலும் கற்பிக்கப்பட்ட ஒழுக்கங் களே கற்பின் இலக்கணமாகும். அவை கற்பிக்கப்படுதலின் கற்பெனப்பட்டது.

ஓர் குலமகட்குத் தெய்வம் அவள் கொழுநனே என்று கொண்டிருந்தனர். மணிமேகலை யாசிரியராகிய சாத்தனாரும்,

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
> பொய்யில் புலவன் பொருளுரை தேராய்"

என்று வள்ளுவர் சொற்களைத்தாமும் கொண்டு கூறினார்.

ஆயின் கற்புடைப்பெண்டிர், தம்கணவர் தெய்வத்தை வணங்குங்கால், தாமும் உடனிருந்து வணங்குவர். கணவனின் மனைவி வேறல்லளாக மந்திரவிதியாற் கூட்டினமையின், அக் கணவனால் அஞ்சப்படும் தெய்வத்திற்கு மனைவியும் அஞ்சுவள். ஆனால் ஒருத்தி தன்னுடைய கணவற்கு ஏதேனும் தீங்கு வருமென்றஞ்சிய காலையில், குலதெய்வத்தை வணங்குதல் இழுக்காகாது. சீவக சிந்தாமணியில், சச்சந்தனுக்குத் தீங்கு நேரிடுவதாகக் கனாக்கண்ட விசயை, வண்புகழ்மாலடி வந்தனை செய்ததாகக் கூறப்பட்டுளது.

ஆனால் கற்புடைப் பெண்ணாகிய கண்ணகியோ அத் துணையுஞ் செய்தாளில்லை. கோவலன் மாதவிபாற் சென்றனன். கணவனைப்பிரிந்த அவள் தன் சிவந்த அடிகளில் சிலம்பணியாள்; மேகலை புனையாள்; அயில்பொரு கண்களில் அஞ்சனம் எழுதாள்; அவள் பவளவாணுதல் திலகமிழந்தது; கூந்தல் புழுகு நெய்யை மறந்தது; இவ்வாறு அவள் இயற்கையழகிலங்க, கையற்ற நெஞ்சினளாய்க் காதலன் வரவை எதிர் நோக்கிக் காலங்கழித்தாள். இங்ஙனம் வாழுநாளில் ஓர் நாள் கண்ணகி முதனாளிரவு கண்ட ஓர் தீக்கனவை எண்ணி ஏங்கியிருந்தாள். அப்பொழுது அவள் உயிர்த்தோழியாகிய தேவந்தி ஆண்டு வந்து அவளை வாழ்த்தி நின்றாள். கண்ணகி அவளை நோக்கி, 'தோழி! நேற்றிரவு ஓர் தீக்கனாக் கண்டேன். அஃதென்னவெனில், என் கணவன் என் கையைப்பற்றிச் செல்ல இருவரும் ஓர் பெரிய பதிக்குட்புகுந்தோம். அப்பதியார் எம்மேல் ஓர் பொய்யுரை ஏற்றினார். அதனால் என் கணவற்கொரு தீங்குற்றது என்று பலர் கூறக்

கேட்டயான், அவ்வூர் அரசன்முன்சென்று வழக்குரைத்தேன். என்றால் அவ்வூர்க்கும் ஓர் தீங்கு ஏற்பட்டது. அக்கனவினால் என் மனம் துணுக்குறுகிறது' என்று கூறினாள். அதுகேட்ட தேவந்தி, 'மதிநுதால்! அக்கனவை எண்ணி வருந்துதலொழி. நீ நின் கணவனால் வெறுக்கப்பட்டவளல்ல. அவற்கு ஒரு தீங்கும் நேரிடாது. நீ முற்பிறப்பில் உன் கணவன் பொருட்டுச்செய்ய வேண்டியதொரு நோன்பைச்செய்யத் தவறினையேயன்றி வேறல்ல. காவிரி கடலொடு கலக்குமிடத்தில், சோமகுண்டம், சூரிய குண்டமென்று இரு தடாகங்கள் உள. அவற்றில் மூழ்கி, அருகேயுள்ள காமவேள் கோட்டத்துட்புகுந்து காமவேளை வணங்கியோர், இம்மையில் தம் கணவரோடு கூடப்பெற்றுப் பிரிதலின்றி இன்பமடைவர். மறுமையிலும் பிரியப்பெறார். ஆதலால் நாம் இருவரும் ஓர் நாள் ஆண்டுச்சென்று அவற்றில் ஆடி, காமனையும் வணங்கி அவனருள்பெற்று வருவோம்' என்றாள். கண்ணகி அவ்வாறு பிறதெய்வத்தை வணங்குதல் கற்புடைப் பெண்டிர்க்கிழுக்கந் தருவதொன்றாகுமென்றெண்ணி, 'அஃதென்போன்றார்க்கியல்பன்று' என்று கூறி வாளாவிருந்தாள்.

முற்காலத்துப் பெண்டிரிற்சிலர், மணம் நடைபெறுவதற்குமுன்னர், தம்பெற்றோர் யாரையேனும், 'கணவர்' என்று முடிவு செய்து விட்டால், அக்கணமுதலே அவ்வாறு நிச்சயஞ் செய்யப்பட்ட ஆடவனைத் தெய்வமாக எண்ணுவர். அவர் சொற்படி கேட்கச் சிறிதுந்தயங்கார். அவனையன்றி வேறெவனையும் மணக்கத்துணியார். கீழே கூறப்படுஞ் சில வரலாறுகளால் நாம் அவற்றைத் தெற்றெனவுணரலாம்.

தனது விளைபுலங்களில் விதைத்த விதைகள் முளைத்துத் தழைத்துக் கருக்கொள்காலையில், அவைகருகி விளைவின்றிக் கொன்னே அழிவதைக்கண்ட மார்க்கசகாயர், வள்ளுவரி டைச்சென்று வேண்டி, அவர் அருளினால் புலங்கள் நன்கு விளையப்பெற்றார். இத்தகைய உதவி செய்தோர்க்குத் தன் மக ளாகிய வாசுகியம்மையாரை யளிப்பதாக முன்னரே மார்க்க சகாயர் பலருமறியச் சாற்றியிருந்தமையின், மார்க்கசகாயர் வள்ளுவரையடைந்து, தன் மகளை மணக்குமாறு வேண்டினார். வள்ளுவனார் அவரை நோக்கி, 'ஐய! நும்மகள் யாம்தரும் மணலைச் சோறாகச் சமைத்தளிப்பின், நும்மெண்ணப் படியே அவளை மணப்போம்' என்றனர். மார்க்கசகாயர் செய்வதறியாமல், மணலைப்பெற்றுவந்து, வள்ளுவர்க்கு அவ ளைக் கொடுக்கத் தாம்இசைந்ததையும், அதன் பொருட்டு வள் ளுவர் அவட்குப் பணித்தபணியையும் கூறி, மணலைக்கொடுத் தார். தம் தந்தை தமக்குக்கணவராக வள்ளுவரை வரித்த மையின், அவரே தமக்குக் கணவராவார் என்றெண்ணிய அம் மையார், அவர் தமக்கிட்ட கட்டளைப்படியே நடக்கவெண்ணி அம்மணலை உலையிற் பெய்து அட்டாள். அவ்வளவில் அம்மண லும்சோறாகியது. வள்ளுவரும் அம்மையாரை மணந்தார்.

திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியாராவர். அவ ரைக் கலிப்பகையார்க்கு மணமுடிப்பதென்று தந்தை புகழனா ரும், தாய் மாதினியாரும் முடிவுசெய்து திருமணத்திற்கு நாட்கொண்டனர். மணமுடிவதற்குள், அரசனதேவலால் கலிப்பகையார் வடபுலத்து வந்த பகைவர்மேற்சென்றனர். சென்ற கலிப்பகையார் போர்க்களத்தில் தன்னுயிர் கொடுத்

துப் புகழ்கொண்டார். இடையில் புகழனுமிறக்க, மாதினி யாரும் உடனுயிர் நீத்தார். கலிப்பகையார் இறந்ததைக் கேள்வியுற்ற திலகவதியார், 'எந்தையும் எம்மன்னையும் அவர்க்கு எனைக்கொடுக்க இசைந்தார்கள். அந்த முறையால் யான் அவர்க்கே உரியள். ஆதலினால் யானும் என்னுயிரை அவருயிரோடு போக்குவேன்' என்றார். ஆயின் நாவுக்கரசர்க்குத் துணையாக எவருமில்லையென்றெண்ணி இறவாமல், அனைத்துயிர்க்கும் அருள் தாங்கிக் கடவுளை வழிபட்டுவந்தார். ஆனால் வேறெவரையும் மணக்கவில்லை.

புகாரின் காவிரி மணலில் வண்டலயர்ந்த பேதைப் பருவப் பெண்டிரில் ஒருத்தி, மற்றொருத்தியை நோக்கி, அடீ! எனக்கொரு பெண்ணும், நினக்கொரு ஆணும் பிறந்தால் இருவரையும் மணமுடித்தற்கு நீ ஒருப்படுதியோ? என்றாள். மற்றவளும் அதற்கு இசைந்தாள். பிற்காலத்தில் அவர்கள் விளையாட்டாகப் பேசியபடியே முன்னவளுக்குப் பெண்ணும், பின்னவளுக்கு ஆணும் பிறந்து, அவ்விருவரும் மணப்பருவமடைந்தனர். ஆயின் ஆணோ முடமாயிருந்தது. பெண்ணின் தாய், தன் கணவனை நோக்கி, 'அன்ப! இளமையில் யான் என் தோழிக்குப் பிறக்கும் ஆணுக்கு, என் மகளை மணமுடிக்க இசைந்தேன். ஆனால் அவன் முடவனாயிற்றே. அம்முடவனுக்கு எவ்வாறு நம் மகளையளிப்பது' என்றாள். இதனை மறையிலிருந்து கேட்ட அச்சிறுபெண், 'நம் தாய் இன்னானுக்கு யான் உரியவள்' என்று முன்பே முடிவு செய்தமையின், நாம் அவர்க்கே உரியவள். அவரே நம் கணவர் என்று துணிந்து, அம்முடவனையே மணந்து வாழ்ந்தாள்.

புகாரின் காவிரி மணலில் விளையாடிய ஒரு சிறுமிக்கு ஆண்டிழைத்திருந்த ஓர் மணற்பாவையைக்காட்டி ‘ இதுவே நின்கணவன் ’ என்று ஏனைய நங்கையர் விளையாட்டாகக் கூறினர். அச்சிறுமி, ‘ கல்லென்ருலுங் கணவன் ’ என்ற முறையில் அதனை மெய்யென்றேயெண்ணி, காவிரியின் அலைகளால் அப்பாவை கரையாதவாறு பாதுகாத்து நின்ருள். இதனல் கற்பு என்பது அவர்கட்கியற்கையிலேயே அமைந்த தொன்ருகும் என்பது தெளியலாம்.

மணம் நடைபெறுவதற்கு முன்னரே கணவர் என்று குறிக்கப்பட்டவர் பணித்தனவற்றைப் பணிவுடன் செய்த அம்மடவார், மணமுடிந்து இல்லறம் நடத்துங்கால் கணவர் சொற்படியே ஒழுகினர் என்று கூறுதல் மிகையாகும். உலக இயற்கைக்கு மாருகக் கணவர் ஏதேனுஞ் செய்யுமாறு கூறினும் அவ்வாறே செய்வர். இல்லறம் நன்ருே துறவறம் நன்ருே என்று ஒருவர் வள்ளுவரைக்கேட்க வள்ளுவர் பதிலொன்றுமளியாது தம்மில்லிலேயே சின்ஞள் அவரையிருக்கப்பணித்தார். வாசுகியம்மையார் ஓர் நாள் வள்ளுவர்க்குப் பழஞ்சோறு படைத்துவிட்டுக் கிணற்றில் நீர் மூகந்தார். வள்ளுவர், ‘ பெண்ணே ! சோறு சுடுகிறது ! விரைவில் வந்து விசிறி எடுத்து இதன் சூடு தணிப்பாயாக ’ என்ருர். அம்மையார் நீர்க்குடத்தை அந்நிலையிலேயே நிறுத்தி விரைந்து வந்து விசிறியெடுத்து வீச, அப்பழஞ் சோற்றினின்றும் ஆவி எழுந்தது. மீண்டு சென்று கிணற்றையடைய நீர்க்குடமும் யாதொரு பற்றுக்கோடுமின்றி கிணற்றினடுவில் நின்றவாறிருந்தது. மற்ருேர் நாள் பகலில் திருவள்ளுவர் ஆடை நெய்

யுங்கால் நெய்யுங்கருவியாகிய குழல் கீழே விழுந்தது. உட னே அம்மையாரை விளித்து, விளக்கெடுத்துவந்து தேடிக் குழலை எடுத்தளிக்குமாறு கூறினார். அவ்வண்ணமே அம்மை யாரும் செய்தார். இவற்றைக்கண்ட அவ்வயலான், கணவர் சொற்கடவாத மனைவியர் வாய்க்கப்பெறின் இல்லறத்திலும் சிறந்தது வேறொன்றுமில்லை என்றுகூறி, அம்மையாரின் கற் பினை வியந்து சென்றான்.

அக்காலத்தில் கற்புடைப் பெண்டிரெனப்பட்டார், எப் பொழுதும் கணவரைப் பிரிந்திரார். கணவன் காடுசெல்லினும் உடன் செல்வர். தலைவன் சுரத்தின் வழியே உடன்கொண்டு போகத்துணிந்தபொழுது, தலைவி அதற்கொருப்பட்டது கற் பினாலேயாம். கோவலன் மதுரைக்குச் செல்லுங்கால் கண்ணகியும் உடன் சென்றதானும், இராமன் காட்டிற்குச் செல்லுங்கால் உடன் செல்லத்துணிந்தசீதை கூறுவதைச் சொல்லுமுகத்தான் கற்புடைப் பெண்டிரின் திறத்தைக் கம் பர் விளக்கிச் செல்லுதலானும், வெங்கானமெனினும் கண வனுடன் செல்லக்கற்புடைப்பெண்டிர் இசைவர் என்பதும், அதனால்நேரிடும் வருத்தத்தைப் பொருட்படுத்தமாட்டார்கள் என்பதும் அறியலாகும். கம்பர் வடமொழிநூலை முதனூ லாகக்கொண்டு இராமாயணத்தைப் பாடியிருப்பினும் பெரும் பாலும் பண்டைத்தமிழர் நாகரிகத்தையொட்டி, அதற்கேற் பக்கதையினைமாற்றியும், விரித்தும் சென்றனராதலின், அவர் தமது இராமாயணத்திற் கூறியிருப்பனவற்றை, நாம் பண் டைப்பெண்டிரின் கற்புநிலைக்கு எடுத்துக்காட்டாகக் காட்டு

தல் குற்றமன்று.

கணவரைப் பிரிந்திருந்த கற்புடைப்பெண்டிரின் நிலையினை இனி ஆராய்வோம். கோவலனைப்பிரிந்த கண்ணகி நிலையை முன்னரே குறிப்பிட்டாம். புகாரில், கணவர் பொருள்வயிற் பிரிய, தனித்திருந்த பெண்டிரில் ஒருத்தி, தான் கணவன் மீளும்வரையில் எழிலுருவுடனிருந்தால் பிறர் விரும்புதற்கேது வாகுமென்றெண்ணி, கணவன் வரும் வரையில், தன் கற்பின் வன்மையால் கல்லுருவம் பெற்றாள். வேறொருத்தி, கணவன் மீளும்வரையில் குரங்கு முகம் பெற்றாள். அவரவர் கணவர் மீண்டபின் பழைய வுருவத்தைப் பெற்றனர். கணவரைப் பிரிந்த மகளிர், கணவரை நினைந்து நினைந்து உருகுவர். இராம னைப்பிரிந்த சீதையின் அங்கங்கள் அவள் மென்மருங்குல் போல் மெலிந்தன ; கண்கள் துயிலொழிந்தன; விழுதல், விம் முதல், வெதும்புதல், வெருவல், எழுதல், ஏங்குதல், இரங்கு தல், இராமனைத்தொழுதல், சோருதல், துளங்குதல், துயருழந் துயிர்த்தல், அழுதல் ஆகிய இவையன்றி அவள் வேறு ஒன் றும் செய்தாளில்லை. கண்கள் இடைவிடாமல் நீரைச்சொரிந் தன. அவளுடைய கண்களை 'மழைக்கண்' என்று கூறுங் கால் அதனைக்காரணக்குறியாகவே கொள்ளல் வேண்டும். அசோக வனத்தில் இந்நிலையிலிருந்த சீதை, என் கணவர் உண்ணுதற்குரிய இலைக்கறிகளை யாரிட அருந்துவார் ? விரு ந்து கண்டபோது என் செய்வார் ? என்று கூறி இரங்குகின் றாள்.

கற்புடைப்பெண்டிரெனப்பட்டார் தம் கணவர் கூடா

வொழுக்கமுடையவராய் இருப்பினும், அதுபற்றி அவரை வெறுக்கமாட்டார்கள். அன்பு குறையப்பெறார். கண்ணகி யானவள், கோவலன் மாதவிபாற் சென்றதனால் அவனை வெறுத்தாளில்லை. அவனிடம் அவட்கிருந்த அன்பு குறைய வில்லை. கோவலன் மீண்டு இல்லிற்குவர ஊடவுமில்லை. 'பொய்யை மெய்யாகக்கொண்டொழுகும் பரத்தையொடு கூடிய ஒழுக்கத்தால் நம் முன்னோரீட்டிய பெருநிதியை இழந்தேன். அது எனக்கு மிகுந்த நாணத்தைத்தாராநின்றது' என்று அவன்கூற, 'மாதவிக்குக்கொடுக்க இவரிடம் வேறு பொருளின்மையால் இவ்வாறு கூறினர்போலும்!' என்றெண்ணி, முறுவல்பூத்து அவனை நோக்கி, 'அன்ப! அதுபற்றிக்கவலற்க. என்னிடம் இரண்டு சிலம்புகள் உள. அவற்றைக்கொண்மின்' என்றாள்.

சில கற்புடைக்காரிகையார், தம் உடலைப் பிற ஆடவர் தமது வலியினால் வலிதிற்றீண்டுதலும், அன்றி மகன் போன்ற நிலையிலுள்ள ஆடவர் தீண்டுதலும் தம்முடைய கற்பினுக் கிழுக்கென்று கருதினர். இத்தகைய தமிழ் மகளிரின் கற்பினைச் சீதைக்கும் கம்பர் ஏற்றிக் கூறுகின்றார். சீதையைக் கவர்ந்து சென்றவிராவணன் அவளைத்தீண்டினான் என்று முதனூலாகிய வடமொழி வால்மீகி ராமாயணத்தில் கூறப்பட்டுளது. ஆயின் கம்பர் அதனை மாற்றினார். இச்செய்தி சீதை அநுமனிடத்திற் கூறுவனவற்றால் அறியலாம். அநுமன் சீதையைத் தன்தோளிற்சுமந்துசென்று இராமனிடம்சேர்ப்பதாகக்கூறி வணங்கினான். சீதையைத் தாயாகவும், தன்னை மகனாகவும் எண்ணியே அவ்வாறு அநுமன் கூறினான். இக்

கருத்தை விளக்கவே கம்பர், 'ஏடகன்மொழி எய்த விளம்பிய, தாயின் முன்னிய கன்றனையான்' என்று அநுமனைக்குறிப் பாராயினர். சீதை அநுமனை நோக்கி, 'மெய்ம்மையோய்! கற்புடைப்பெண்ணாகிய யான் என் கணவன் மேனியையன்றி ஆடவனாகிய நின்னைத்தீண்டுதல் தகுமோ?' எனறுகூறி, அவனுடன் செல்ல இணங்கவில்லை. இராவணன் தன்னைத்தீண்டியே அங்குக்கொணர்ந்திருப்பனே என அநுமன் ஐயுறலாம் என்றெண்ணிய சீதை, அதனைத் தீர்த்தற்பொருட்டு, அவனிடம், 'என்னை இராவணன் ஈண்டுக்கொணருங்கால் என்னைத்தீண்டினனில்லை. தீண்டியிருப்பின் என்னுயிர் இவ்வளவு நாட்கள் இவ்வுடலில் இருக்குமோ? அக்கணமே உயிர் துறந்திருப்பேனன்றோ? யானிருந்தவிடத்தை அகழ்ந்துகொண்டே வந்தான்' என்று கூறிப்பின்னும், 'ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்துகொண்டு ஈண்டு வைத்தநிளவலியற்றிய நீண்ட சாலையொடு நிலை நின்றது. ஐய! நின் மெய்யுணர் கண்களால் காண்டி!' என்று அப்பர்ணசாலையிலேயே தானிருப்பதையும் அவனுக்குக் குறித்துக்காட்டுகின்றாள்.

முற்காலத்துப் பெண்டிரின் கற்பினை அறக்கற்பு, மறக்கற்பு என்று இருவகையாகப் பிரிக்கலாம். இவற்றிற்கு ஆறிய கற்பு, சீறியகற்பு என்றும் வேறு பெயரிடலாம். அறக்கற்பு அல்லது ஆறியகற்பு உடையவர், தாம் துன்பமடையினும் பிறவுயிர்க்குத் தீங்கொன்றையுஞ் செய்யாமலும், தமக்குத் தீங்கிழைத்தோரை வெகுளாமலும் இருந்து தம் கணவன் இறப்பின் உடனுயிர் நீக்குபவர் ஆவர். மறக்கற்பு அல்லது சீறிய கற்புடையார் எனப்படுபவரோ தமக்கும், தம் கணவர்க்

கும் தீங்கிழைத்தோரை வெகுண்டு, தம் கணவர் இறப்பதற்குக் காரணமாயிருந்தோருழைப் பழிக்குப்பழி வாங்கியபின் உயிர் நீப்பவர். பாண்டியன் நெடுஞ்செழியனின் மனைவியாகிய கோப்பெருந்தேவியானவள் அறக்கற்புடையாளாவள். உடைபட்ட சிலம்பினால் உண்மையறிந்த பாண்டியன், 'பொன்செய் கொல்லன் தன்சொற்கேட்ட யானோ அரசன்! யானே கள்வன்; மன்பதைகாக்கும் தென்புலங்காவல் என்முதற் பிழைத்தது; கெடுக என் ஆயுள்' என்று கூறிக் கீழே விழ்ந்திறந்தான். தன் கணவன் இறந்ததைக்கண்ட கோப்பெருந்தேவி நடுங்கி வீழ்ந்து, கண்ணகி மேற்கொண்டு கூறும் சொற்களைக் கேளாளாய், கலக்கங்கொள்ளாளாய், 'மன்னவன் செல்வழிச்செல்கயான்' என்று கூறித்தன்னுயிர் கொண்டு அவனுயிர் தேடினள்போல் இறந்தாள். இவள் தலையாய கற்புடையாளாதலால் நினைத்தவுடன் உயிர்போயிற்று. காதற் கணவனொடு கனையெரி மூழ்குதலையும், மன்னுயிர் நீத்தவேலின் மனையோள் இன்னுயிர் நீத்தலையும் ஆஞ்சிக்காஞ்சி என்ற ஒரு துறையாக வெண்பாமாலை யாசிரியர் அமைத்தலினானும், பூதப்பாண்டியன் இறந்துபட, அவனது மனையாளாகிய பெருங்கோப்பெண்டு, கைம்மை நோன்பால் வருந்தும் மகளிரின் நிலையை விளக்கி, யாம் அத்தகைய பெண்டிருள்ளேமல்லேம் என்று கூறித் தீப்பாய்ந்ததானும், "காதலரிறப்பிற் கனையெரிபொத்தி, யூதுலைக் குருகின் உயிர்த்தகத்தடங்காதின்னுயி ரீவ ரீயா ராயி, னன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்" என்று மணிமேகலை யாசிரியர் அக்காலத்துப் பத்தினிப்பெண்டிரின் திறத்தை விளக்கினமையானும் முற்காலத்தில் அறக்கற்பு வாய்ந்த மகளிர் உண்மை தெளியலாம். கம்ப

ரும் சீதையை அறக்கற்பு வாய்ந்தவளாகச் செய்யுள் செய்த னர். சீதை நினைத்திருந்தால், தன்னைத் தன் கணவனிட மிருந்து பிரித்து, தமக்கு இடுக்கண் விளைத்த இராவணனை அழித்திருக்கலாம். அதற்கேற்றவன்மை அவள்பாலிருந்தது. ஆயின் அவள் ஆறிய கற்புடையாளாதலின் அவ்வாறு செய்ய வில்லை. அதனை,

> " அல்லன் மாக்களி லங்கைய தாகுமோ
> எல்லை நீத்தவு லகங்கள் யாவுமேன்
> சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
> வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன் "

என்று சீதை கூற்றாக அமைத்துள்ள செய்யுளால் உணரலாம்.

கண்ணகி சீறிய கற்புடையாள். அஃதாவது மறக் கற்புடையாளாவள். ' ஆரஞருற்ற வீரபத்தினி முன், மதுரா மாதெய்வம் வந்து தோன்றி ' என்ற சிலப்பதிகாரப்பதிக அடிகளில், வீரபத்தினி என்ற சொற்றொடர்க்கு, சீறிய கற்பு டையாள் என்று அரும்பதவுரையாசிரியரும், மறக்கற்புடை யாள் என்று அடியார்க்கு நல்லாரும் பொருள் எழுதிச்சென் றனர். கோவலன் பொற்கொல்லனால் கள்வனெனச் சுட்டப் பட்டுக் கொலைக்களத்திற்பட்டான் என்பதைக் கேள்வியுற்ற கண்ணகி உடனுயிர் போக்கினளில்லை. பழிக்குப்பழிவாங்க எண்ணினள். சூரியனை நோக்கி, ' காய்கதிர்ச் செல்வனே ! என் கணவன் கள்வனோ ? ' என்று வினவினள். ஞாயி றும் கற்புடை மங்கையாகிய கண்ணகிக்கு உண்மையுணர்த்த வேண்டி, ' நின் கணவன் கள்வனல்லன் ; கள்வனெனும்

இவ்வூரை எரியுண்ணும்' என்று அசரீரியாகக் கூறினான். கண்ணகி கொலைக்களம் அடைந்தாள். இறந்த கோவலனை யுடம்போடுதழீஇயினாள். இவள் கற்பின்மாண்பால் கோவலன் உயிர்பெற்றெழுந்து, 'நின் மதிமுகம் வாடியதே' எனக் கண்ணீர்மாற்றி, 'நீ இரு' என்று சொல்லிச்சுவர்க்கம் புகுந்தான். கண்ணகி பாண்டியன் அவைக்களம் சென்று, தன் கணவன் கள்வனல்லன் என்பதைத் தன் சிலம்புகொடு விளக்கிக்காட்ட, அரசனும் இறந்தான். கோப்பெருந்தேவியும் இவள் இணையடிதொழுது வீழ்ந்தாள். கண்ணகி தன் கணவன் இறந்ததற்குக் காரணமாயிருந்த அரசன் இறந்தும், கோபம் தணியப்பெறாமல், கோப்பெருந்தேவியை நோக்கிப் புகார்ப்பெண்டிரின் கற்பின்றிறத்தினைவிளக்கிக்கூறி,'பட்டாங் கியானுமோர் பத்தினியேயாமாகில், ஒட்டேனரசோடொழிப்பேன் மதுரையுமென், பட்டிமையுங்காண்குறுவாய்' என்று வீரமொழி புகன்று மதுரையை எரியுண்ணும்படி செய்தாள். அங்கியங்கடவுளும் இவள் கற்பிற்கஞ்சி, இவள் ஏவற்படி தீத்திறத்தார்பக்கமே சென்றது. மதுரை எரிவது கண்ட மதுரையாதெய்வம் கண்ணகி முன்வந்து, ஊழ்வினை உருத்துவந்து இவ்வாறு விளைவித்தது என்பதை அவட்கு எடுத்துக்கூறி, அவளது எதிர்கால நிகழ்ச்சியையும் குறிப்பிட்டு அழல்வீடு கொண்டது. கண்ணகி ஆறுதலடையாமல், 'கருத்துறு கணவற் கண்டபின் அல்லது, இருத்தலுமில்லேன் நிற்றலுமிலன்' எனக்கூறி, நடந்து சென்று, திருச்செங்குன்று என்ற மலையில் ஏறி, ஓர் வேங்கையின் நிழலில் பதினான்கு நாட்கள் இருந்த பின், கோவலன் தேவர்களுடன் வானவூர்தியில் ஆண்டுத்தோன்ற, அதனுள் ஏறி

அவனுடன் வானகம் புகுந்தாள். இதனின்றும் கண்ணகி சிறந்த கற்புடையாள் என்பதும், கற்புடைப்பெண்டிரைத் தெய்வமும் தொழும் என்பதும் நன்கு உணரலாகும். கற்புடைப் பெண்டிரைத்தெய்வமாகக்கொண்டு கோயிலமைத்து வழிபடும் வழக்கமும் உண்டு என்பது, செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயிலமைத்து வழிபட்ட செய்தியினின்றும் அறியலாகும்.

கற்பின் முன் தவமும் நிற்கவல்லதல்ல. ஒருநாளிரவு வாசுகியம்மையார் தம் கணவற்குச் சோறிடுங்கால், வாயிலில் 'அம்மே! சோறிடுக' என்றோர் ஒலி எழுந்தது. வாசுகியம்மையார் உடனே செல்லாது கணவற்குச் சோறிட்டு முடிந்த பின் சோறுடன் வாயிலிற்செல்ல, ஆண்டுநின்றிருந்த கொங்கணவர் என்ற முனிவர் அம்மையார் காலந்தாழ்த்துச் சோறிட வந்ததற்காகச் சினந்து விழித்து நோக்கினர். அம்மையார் அதற்கு எதிராக, 'கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா' என்றனர். அதுகேட்ட அம்முனிவர், தான் எவருமறியாவாறு தன்மேல் எச்சமிட்ட கொக்கினை விழித்து நோக்கி எரித்த செய்கையைக்குறித்துக்காட்டி, எவருமறியாத தன் பெயரினையுங் கூறிய அவராற்றலையுன்னி, அஃதவர் கற்பின் மாண்பினாலாம் என்பதையுணர்ந்து, அஞ்சி, பதிலுரையாது அவ்விடம் விட்டகன்றனர். ஆகவே தவத்தினும் கற்பு ஆற்றல் வாய்ந்தது என்பது ஒருதலையாம்.

அக்காலத்துக் கற்புடையார்மாட்டு இறந்த உயிர் பிழைத்தெழச்செய்யும் வன்மையும் அமைந்திருந்தது என்னலாம். புகாரில் ஒருவற்கு இருமனைவியர் இருந்தனர். அவ

ருள் ஒருத்தியின் மகவு கிணற்றில் வீழ்ந்திறந்தது. அது கண்ட மற்றவள், ‘ என் மாற்ருள் ஒரு குழவியை யிழந்து வருந்த யான் மட்டில் என் குழந்தையொடிருத்தல் முறை யன்று ’ என்றெண்ணித் தன் பிள்ளையையும் கிணற்றில் எறிந்தாள். அவள் வீரக்கற்பு வாய்ந்தவளாயிருந்தமையின், இரு குழந்தைகளும் உயிருடன் மிதந்தன. அவ்வளவில் அம்மக்களை மகிழ்வொடு எடுத்து வாழ்ந்து வந்தனர்.

கரிகால் வளவனுடைய மகள் ஆதிமந்தியார் தன் கணவனுகிய ஆட்டனத்தி என்பானுடன், கழார் என்ற ஊரின் காவிரித்துறையில் நீராடினள். அதுகாலையில் காவிரி வெள்ளம் ஆட்டனத்தியை ஈர்த்துச் சென்று விட்டது. ஆதிமந்தியானவள் அவனைத் தேடியவாறே கடற்கரையை யடைந்து, ‘ கண்ணவில் தோளாயோ ’ எனக்கூவி யாற்றினள். அவள் கற்பின் பெருமையையறிந்த கடலும் இரங்கி, ஆட்டனத்தியைக் கரையிற் சேர்த்தது. கணவனை உயிருடன் கண்ட ஆதிமந்தியும், அவனைத்தழீஇக்கொடு, பொன்னங் கொடிபோலப் போதந்தாள்.

ஆதிமந்தி போன்ருர் கணவனைத் தேடிச் சேறலும், கண்ணகி அரசவை யடைந்து வழக்குரைத்தலும் அவர்தம் நாணிற் கிழுக்கம் தருமன்ருே வெனின், நாணினும் கற்புச் சிறந்தமையின் அவை குற்றமல்ல.

முற்காலத்து வாழ்ந்த கற்புடைப்பெண்டிரின் மாண்பினை விளக்குவதற்கே,

" பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின் "

" பற்பல நெறிகளும் பயிலு நூல்களா
னற்பய னடைதலுந் தேச நாடோறும்
பொற்புடை வெற்றியும் புகழு மின்பமுங்
கற்புடை மனைவியாற் கணவற் கெய்துமே "

*என்பன போன்ற பாக்கள் எழுந்தன.*



## 6. அரசியல்.

பழந்தமிழரசர்களிற் பலர் தம் நாட்டைச் செவ்வனே ஆண்டு வந்தனர் என்பதை நாம் நூல்களினின்றும் நன்குணரலாம். வள்ளுவனார் படை, குடி, கூழ், அமைச்சு நட்பு, அரண் ஆகிய ஆறும் அரசற்கங்கமாகும் என்றும், இவை முற்றும் உடையவனே அரசருள் ஏறு என்றும் கூறி னார். தமிழரசர்களிற் பலர் அரசருள் ஏறாய் வாழ்ந்து வந்த னர் என்று கூறுதல் தகும்.

படையாளரைப் பெருக்குதலிலும், அவர்கட்கு வேண்டு வன அளித்து, மகிழ்வூட்டி, நன்கு போர்புரியுமாறு செய்த லிலும் அவர்கள் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். பெருஞ் சோற்று நிலை யென்ற துறையைப் புறப்பொருளில் தொல் காப்பியர் அமைத்திருப்பதினின்றும் அதனை அறியலாம். போர் முடிந்த பிறகு புண்பட்ட வீரர்க்கும், இறந்துபட்ட வீரரின் மக்கட்கும், வேண்டுவன வளித்து அவர்களைத்தழுவி உபசரித்தனர். இவை அவர்தம் போர் முறையிலும் குறிப் பிடப்பட்டன.

குடி என்பது குடிகளைத் தன்னிடத்தே கொண்ட நாட் டையும், கூழ் என்பது அந்நாடு வளப்பமுற் றிருப்பதற்கேது வாகிய பொருள்களையும் குறிக்கும். "போகம் வேண்டிப் பொதுச் சொற்பொறாஅது, இடஞ்சிறிதென்னும் ஊக்கம் துரப்ப," "கொடியும் முரசுங் கொற்றவெண்குடையும், பிறர் கொளப்பொறாஅன் றானே கொண்டு" என்பன போன்ற அடிகளால் முற்காலத்து அரசர்கள் நாட்டைப்பெருக்குதலில்

முனைந்து நின்றனர் என்பது தெளியலாம். தந்நாட்டில் வாழும் குடிகளுக்கு வேண்டுவன இயற்றுதலையும் நாட்டில் விளைபொருள்களை அதிகப் படுத்துதலையும், நாட்டின் செல்வ நிலையைப் பெருக்குதலையும் அவர்கள் தமக்குக்கடமையாகக் கொண்டனர். காவிரிப்பூம்பட்டினத்தின் வாணிகச்சிறப்பும், செல்வ நிலையும்,

> " நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
> காலின் வந்த கருங்கறி மூடையும்
> வடமலைப்பிறந்த மணியும் பொன்னும்
> குடமலைப் பிறந்த வாரமு மகிலும்
> தென்கடன் முத்துங் குண கடற்றுகிரும்
> கங்கை வாரியுங் காவிரிப்பயனும்
> ஈழத் துணவுங் காழகத் தாக்கமும்
> அரியவும் பெரியவு நெளிய வீண்டி
> வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு "

என்று கூறப்படுவதாலும்,

> " * * * சேரலர்
> சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியோடு பெயரும்
> வளங்கெழு முசிறி "

என்ற அகநானூற்று அடிகளாலும் அவ்வரசர்கள் நாட்டின் செல்வ நிலைக்குக் காரணம் வாணிபம் என்பதையுணர்ந்து,

அதனைப்பெருக்கி வந்தனர் என்பது அறியலாம். புகாரில் விளைபொருள்கள் மிகுதற்கு, மழைவேண்டுமளவிற் பெய்தல் வேண்டி, இந்திரனுக்கு விழாவெடுத்தலைச் சோழர்கள் ஆண்டு தோறும் சிறப்பாக நடத்தினர். இவ்வாறு பலவிதத்தாலும் சோழ அரசர்கள் காவிரிப்பூம்பட்டினத்தின் செல்வநிலையைப் பெருக்கியதனால், அப்பட்டினம் தன்னிடத்து வாழும் குடிகள் எப்பொருளையும் விரும்பி வேறு நாட்டிற் புகாதிருக்குமாறு விளங்கி, 'புகார்' என்ற பெயரைப் பெற்றது.

அவ்வரசர்கள் அறம், பொருள், இன்பம், உயிரச்சம் ஆகிய நான்கின் திறத்தினால் ஒருவரை ஆராய்ந்த பிறகே அவரை அமைச்சராகக் கொள்வர். அமைச்சரது குணத்தன்மைகளை வள்ளுவனார்,

"கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு"

"பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு"

"தெரிதலும் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு"

என்று கூறினர். அன்றியும் அவர்கள் செயல்களை, 'பழைய நீதி நூல்களில் கூறப்பட்டிருப்பினும் உலக நெறியோடு பொருந்துவனவற்றையே செயல் வேண்டும், பொருந்தாதன செய்யலாகாது என்றும், நீதிநூலுணர்ந்தார் கூறியன

வற்றைத் தவிர்த்துத் தானுகவொன்று மறியாது அரசன் இருப்பானாயின் அக்குற்றத்தை யெடுத்து விளக்கி, இடித்துக் கூறி, அவ்வரசனுக்கு உறுதிபயப்பன கூறுதல் வேண்டுமென்றும் கூறினர். தம் காலத்திருந்த முடிமன்னர், சிற்றரசர் முதலியோருடன் பழகி, அவர்களுடைய அமைச்சின் தன்மைகளை யுணர்ந்து, பண்டைத்தமிழரசர்களின் அமைச்சின் தன்மைகளை நூல்கள் வாயிலாக வறிந்த கம்பர், இராமாயணத்தில், அயோத்தியமைச்சிற்குத் தமிழ்நாட்டமைச்சின் தன்மைகளை யமைத்துக் கூறுகின்றார். திருவள்ளுவர் கூறும் அமைச்சின் தன்மைக்கு உதாரணமாயிருக்கும்படி யமைத்தார். அயோத்தியமைச்சின் சீரிய தன்மையை 'அவர்கள் கல்வி கேள்வியமைந்தவர்கள்; நடுவுநிலைமையையே நோக்குவார்; உற்றது கொண்டு மேல்வந்துறுபொருளுணருங்கோளார்; மானநோக்கிற் கவரிமாவனைய நீரார்; காலமும் இடனும் ஏற்ற கருவியும் அரச நீதிகளுக்கு ஏற்பக்கற்றவர்; தம்முயிர்க்கிறுதி யெண்ணுது, தலைமகன் வெகுண்ட போதினும், அதன் வெம்மையைத் தாங்கி, நீதியை விடாது நின்றுரைக்கும் வீரர்; அரசருக்கு மருத்துவனியல்பிலிருப்பவர்; ஒரு பிறப்பிற்செய்த நல்வினை மறுபிறப்பில் வந்து உதவுமாறுபோல அரசற்கு உதவுபவர்கள் என்று பலவாறு விரித்தார். இலங்கையமைச்சின் சீர்கேடான தன்மையை, சீதை இராவணனை நோக்கிக் கூறுமுகத்தான்,

" கடிக்கும்வல் லரவுங் கேட்கு மந்திரங் களிக்கின்
றோயை

அடுக்கும் தடாதேன் றென்ற வேதுவோ டறிவு
காட்டி
யிடிக்குந ரில்லை யுள்ளார் எண்ணிய தெண்ணி
யுன்னை
முடிக்குந ரென்றபோது முடிவன்றி முடிவ
துண்டோ ”

என்று வெளிப்படுத்தினர்.

சிந்தாமணியில் சச்சந்தன் தன்னரசை அமைச்சரு ளொருவனாகிய கட்டியங்காரனிடமளித்தான். அதுகாலையில், அமைச்சருள் வேறொருவனாகிய நிமித்திகன் என்பான் அதனைத்தடுத்து, நீ இவ்வாறு ஒருவன்மேற் கொற்றம் வைத் தால் நிலம் திரு நீங்கும் என்று கூறினான். சச்சந்தனே அந் நிமித்திகன் அழுக்காற்றினலிவ்வாறு கூறுகின்றனென்றெ ண்ணி, அவனை வேறு ஒன்றும் பேசவேண்டாவென்று அத்துடன் நிறுத்துமாறு கூறினன். ஆயினும் அவ்வமைச் சன், நாவலர் சொற்கொண்டார்க்கு நன்கலாற்றீங்குவாரா தெனப்புகன்று, பெண்கள் போகத்தை விரும்பிய பலர் பாவ மும் பழியுமடைந்ததை விளக்கிக்கூறினன். இங்ஙனம் கூறி யும், சச்சந்தன், தான் செய்தது தவறு என்று அதனை ஒழி யாமல் இருக்க, அந்நிமித்திகன் அவனை நோக்கி, “ மூரித் தேர்த்தானைப் நீ முனியினும் உறுதிநோக்கிப், பாரித்தேன் கருமநுண்ணூல் வழக்கதுவாதல் கண்டே ” என்று கூறிப் பிரிந்து சென்று துறவுபூண்டான். இவ்வாறு அமைச்சர் சொல்லைக் கொள்ளுமரசற்கு நன்மையேயல்லது தீமைவாராது என்பதையும், அரசன் ஓர் குற்றஞ்செய்தவிடத்து இடித்துக் கூறுதல் அமைச்சர்க்கியல்பு என்பதையும் திருத்தக்கதேவர்

நன்கு விளக்கினர். இத்தகைய அமைச்சு தமிழரசர்களிடம் வாய்ந்திருந்தது என்பது சங்க விலக்கியங்களில் ஆங்காங்கே காணப்படும் சிறுகுறிப்புக்களால் அறியலாம்.

முற்காலத்து அரசர்கள் தம் நாடுகளுக்குப் பலவிதமாக அரண் அமைத்திருந்த விதத்தை நோக்கின், அவர்தம் ஆற்றின் மாட்சி நமக்கு நன்கு வெளிப்படும். எத்தகைய ஆற்றல் வாய்ந்தோரும் தம் நாட்டிற்கு அரண் அமைத்திருப்பர். நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என இயற்கையுஞ் செயற்கையுமாயவரண் நால்வகைப் படும். நீரரண் என்பது மதிற்புறத்திலேயிருக்கும் இடங்கர் முதலியன தன்னிடத்தே கொண்ட கிடங்குகளைக்குறிக்கும். அக்கிடங்குகளில் எஞ்ஞான்றும் வற்றாமல் நீர் நிரம்பியிருக்கும். நிலவரண் என்பது கிடங்குகளுக்கு அப்பால் நீரும் நிழலுமில்லாமல், பகைவர் வருதற்கியலாத ஆரதர் அமைந்த இடத்தைக்குறிக்கும். இவ்வாறே மலையரணும், செறிந்த காட்டரணும் பகைவர் உட்புகவியலாத வண்ணம் அமைக்கப்பெற்றிருக்கும். இவ்வாறு நால்வகை யரண்களை யமைத்துக்கொள்ளுதலோடமையாது, அகநாட்டினுள் அருமதிலும் அமைத்திருப்பர். அம்மதில்கள் பகைவர்களுடைய ஏணியெய்தாத உயர்வும், மிகுந்த அகலமும், கல்லிட்டிகைகளாற் செய்யப்பெற்றதனால் மிகுந்த திண்மையும், பகைவர்கள் நெருங்குதற்கலாத அருமையும் அமைந்தனவாகும். பகைவர் நெருங்கவியலா அருமைக்குக்காரணம்,

> " வளைவிற் பொறியு மயிற் செறி நிலையுங்
> கருவிரலூகமுங் கல்லுமிழ் கவணும்

பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்
காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந்
தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங்
கவையுங் கழுவும் புதையும் புழையு
மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையு
மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்
கோலுங் குந்தமும் வேலுஞ் சூலமும் "

*போன்றனவாய பொறிகள் அம்மதில்களில் அமைத்திருத்த லேயாகும். இன்னனசெய்திகளால், அவ்வரசர்கள் வள்ளுவர் கூறிய அரசின் இலக்கணங்கள் அமையப்பெற்று, அரசர் களுள் ஏறுகளாய் விளங்கி வந்தனர் என்பது வெளிப்படை யாகும்.*

*அக்காலத்தில் அரசர்கள் ஒவ்வொருவரும் 'செங்கோல ரசர்' என்று பெயர் வாங்கப் பெரிதும் முயன்றனர். கொடுங் கோலன் என்று பெயர் வாங்கிய வொருவன் இழிந்தவனாகக் கருதப்பட்டான். அஃது,*

" அறனிலை திரியா வன்பி னவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
மெலி கோல் செய்தே னாகுக "

" என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக "

" செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்
குடிநடுக் குறாஉங் கோலே னாகுக "

என்பனபோன்ற அவ்வரசர்களின் வஞ்சினங்களால் அறிய லாகும்.

செங்கோலின் இலக்கணம், எத்தகைய வரசனைச் செங்கோலன் என்று கூறலாம் என்பன நாம் அறிதல் வேண்டும். ஓர் அரசன் தன்கீழ் வாழ்வார் குற்றஞ் செய்யின், அக் குற்றத்தை நன்கு ஆராய்ந்து, நடுவுநிலையுடன், ஒருபாற் கோடாமல், அக்குற்றஞ் செய்தார்க்கு நீதி நூல்களில் விதிக் கப்பட்ட தண்டத்தை விதிக்கவேண்டும். ஒருவன் மாட்டுக் குற்றம் நிகழின் அவனை யொறுக்கும்வகை மூன்றாகும். அவை துன்பஞ் செய்தல், பொருட் கோடல், கோறல் என் பனவாம். இம்மூவகை யொறுப்பினுள் குற்றத்திற்கேற்ற தண்டத்தை ஆராய்ந்து விதிப்பதே அரசனது தொழிலாகும். குற்றஞ் செய்தாரை யொறுக்குமரசன் கொடுங்கோலன் எனப் படான். செங்கோலனென்றே புகழப்படுவான்.

அநபாயன் என்ற சோழனின் வழிமுதலாகிய மனு வேந்தன் திருவாரூர்க்கரசனாக விளங்கினான். அவன் செங் கோலன். அவன் மைந்தன் வீதிவிடங்கன், அரசுலாந்தெரு வில் தேரிற்செல்லுங்கால், எவருமறியாவாறு ஓர் ஆவின் புனிற்றிளங்கன்று துள்ளிவந்து தேர்க்காலிலகப்பட்டு உயி ரிழந்தது. கன்றிழந்த துயர்பொறுத தாய்ப்பசு அரசன் கோயிலையடைந்து, அதன் வாயிலிற்றூங்கிய ஆராய்ச்சிமணி

யினைக் கோட்டினைற் புடைத்தது. குடிகட்குற்ற குறையை அக் குடிகளே அரசனிடம் அறிவிப்பதற்கே அம்மணி கட்டப்பட் டதாகும். ஆயின் மனுவேந்தன் அதுவரை அம்மணி யோசை கேட்டறியான். மணியோசை கேட்டவளவில் மன் னன் அலமந்துவெளியே வந்து, ஆவிற்குற்ற துயரைப்பக்கலில் உள்ளோரால் அறிந்தான். முறைசெயக் கருதினான். அமைச் சர் கூறியனவற்றை அவன் செவியேற்றானில்லை. அந்தணர் பலகழுவாய்கள் கூறினர். அரசன் எரியெனச்சீறி, அவர்கள் கூறியனவற்றைத் தவிர்த்து, மைந்தனைக் கீழேகிடத்தி, தேரில் ஏறி அவன்மேல் தேரைச் செலுத்தினான். சேக்கிழார் செங் கோலரசனின் திறத்தை இவ்வாலாற்றினுள் நன்கு விளக்கினார். அமைச்சர்களை நோக்கி அரசன் கூறுமுகத்தான்,

"மாநிலங்கா வலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ"

என்று கூறுகின்றார். பின்னர் அரசன் தன் மைந்தனைத் தேர்க் காலிலிட்டுத் தேரை யூர்ந்துசென்றான் என்று சொல்லு மிடத்தில் தன் கூற்றாக,

"ஒருமைந்தன் தன்குலத்திற் குள்ளானென் பதுமுணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்

அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான் "
என்று செய்யுள் செய்தார்.

மதுரையில் வாழ்ந்த கீரந்தை என்னும் அந்தணன் காசிக்குச் செல்லுங்கால், தன் மனைவியிடம் 'அரைசவேலியல்லதை யாவதும் புரைதீர் வேலியில்' என்று கூறிச்சென்று யாத்திரை முடித்து மீண்டுவந்து மனையாளுடன் பேசிக்கொண்டிருந்தான். அவ்வூர் அரசனாகிய குலசேகரபாண்டியன் அன்றிரவு நகர் சோதனை வருங்கால், அந்தணனில்லா வீட்டில் ஆளரவம் கேட்பதுபற்றி அவ்வீட்டின் கதவைத்தட்டினான். அந்தணன் ஐயமுற்று அஞ்ச, அவன் மனையாள் 'அரசன் யாவரையுங் காப்பான்' என்று அவன் முன்பு கூறிச்சென்றதை நினைவூட்டி, 'அஞ்சாதீர்' என்றாள். அதுகேட்ட அரசன், அந்தணன் வீணே ஐயமுற்று அஞ்சுமாறு செய்தோமே யென்று, அவன் ஐயந்தீர்த்தற் பொருட்டுப் பக்கலிலுள்ள வீட்டுக்கதவுகளை யெல்லாம் தட்டிக்கொண்டே தன் கோயில் சேர்ந்தான். மறுநாள் அந்தணர் ஒருங்குகுழீஇ அரசனிடம் வந்து, 'வேந்தே! நேற்றிரவு ஓர் கள்வன் எம்துயிலறிவதற்கு எம்முடைய வீட்டுக்கதவுகளைத் தட்டிச்சென்றான். அக்கள்வனைத் தேர்ந்து அவனை யொறுத்தல் நின்கடமையாகும்' என்றனர். அரசன் அவ்வாறு தட்டியது தன்கையே யாதலால் உடனே வாள்கொண்டு தன்கையை வெட்டி யுண்மையை யுரைத்தான். பின்னர்ப்பொன்னால் கைசெய்து தரித்துப் பொற்கைப்பாண்டியன் என்று பெயர் பெற்றான்.

ஆகவே மனுநீதி கண்ட சோழனையும், பொற்கைப்பாண்டியனையும்

" இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின் "

என்ற குறளில் முட்டாமற் செலுத்தியதற்கு உதாரணமாகக் காட்டலாம்.

மேற்காட்டியவாறு செங்கோல் செலுத்தினால் உலகத்தோர் யாவரும் தம் அடியையே பொருந்தி வாழ்வார் என்பதையும், மழைமிகப்பெய்து விளைவுமிகும் என்பதையும், எப்போரிலும் தமக்கே வெற்றி யுண்டாகும் என்பதையும், கொடுங்கோலராய் இருப்பின், வானம் பொய்த்து, விளைவு குன்றும் என்பதையும் அவ்வரசர்கள் நன்குணர்ந்திருந்தனர். இவற்றை யுணர்ந்தே செங்கோலரசனாகிய செங்குட்டுவன்,

" மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கோடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதகவுஇல் "

என்று கூறினான்.

சில அரசர்கள் தம்முடைய செங்கோல் தம் அறியாமையால் கோடின் தம்முயிரையிழப்பர். தேராமன்னவென்று தன்னை விளித்து வழக்குரைத்த கண்ணகியை நோக்கிப் பாண்டியன் நெடுஞ்செழியன், 'கள்வனைக்கோறல் கடுங்கோலன்று, வெள்வேற் கொற்றங்காண்' என்றான். கண்ணகி தன் கையிலிருந்த சிலம்பை யுடைக்க, உட்பாலாகிய மாணிக்கம் சிதறி

மன்னவன் வாய்முதற்றெறித்தது. அதுகண்டவரசன் நடு நடுங்கி, தாழ்ந்த குடையனாய்த் தளர்ந்த செங்கோலனாய், பொற்கொல்லன் சொற்கேட்ட யானே கள்வனென்று கூறி,

" மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகவென் னாயுள் "

என்றவாறு மயங்கிக்கீழே வீழ்ந்தான். அவ்வளவில் அவனுயிர் நீங்கியது. இதனைச் செங்குட்டுவன் கூற்றாக,

" வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது "

என்று இளங்கோவடிகள் அழகாகக்கூறினார்.

அக்காலத்தில், ஐம்பெருங்குழுவினர் எனப்பட்டார் அரசற்குச் சிறந்தவர்களாய் அரசவையில் இருந்தனர். அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர் ஆகிய ஐவருமே ஐம்பெருங்குழுவினராவர். அன்றியும், கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச்சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், களிபடைத்தலைவர், யானைவீரர், இவுளிமறவர் ஆகிய எண் பேராயத்தாரும் இருந்தனர். நாட்டின் அரசிறை வருவாய்களைக் கவனிப்பதற்கும், ஆங்காங்கே நடைபெறவேண்டிய அறங்கள் வழுவின்றி நடைபெறுகின்றனவா என்று மேற்பார்வை பார்ப்பதற்கும் அதிகாரிகள் நியமிக்கப்பெற்றிருந்தனர். அரசன் செய்யவேண்டிய காரியங்கட்கேற்ற நன்னாளும், நன்னிமித்தமும் கணித்துரைப்பதற்குப் பெருங்கணி என்பவன் அரசனண்மையில் இருப்பதுண்டு. அரசனெதிரில்

பன்முறை செல்வோர் சட்டையும், தலைப்பாகையும் அணிந்திருக்கும் வழக்கம் அந்நாளில் இருந்தது. அவர்கள் கஞ்சுக முதல்வர் என்றழைக்கப்பட்டனர்.

நீதிமன்றத்தில் தீர்க்கவியலா வருமைவாய்ந்த வழக்குகளை அரசனே தீர்த்தலும் உண்டு. கரிகாற்பெருவளத்தானும், தன்னை உரைமுடிவுதோரான் இளமையோனென்ற நரைமுது மக்கள் உவக்குமாறு, அவர்களறியா வண்ணம் நரைமுடித்து வந்து, அவர்தம் வழக்கினைத்தக்கவாறு தீர்த்துச் சொல்லால் முறை செய்தான்.

புகார் நகரிலிருந்த ஐம்பெருமன்றத்துள் ஒன்றாகிய பாவைமன்றத்தினியல்பு,

> "அரைசுகோல் கோடினு மறங்கூ றவையத்
> துரைநூல் கோடி யொருதிறம்பற்றினும்
> நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப்
> பாவை நின்றழூஉம் பாவைமன்றம்"

என்று கூறப்பட்டுளது. ஆகவே புகாரில் கொடுங்கோன்மை, வழக்குகளில் ஒருபாற்கோடுதல் முதலியன நிகழாதிருந்தன வென்பதும், அவ்வாறு நிகழினும் பாவைநாவாற்கூறாது, அழுமாகலின் உலகத்தார் அதனை அறிந்துவிடுவர் என்பதும் நாம் அறியலாம்.

பாண்டிய நாட்டில் திருத்தங்கால் என்ற ஊர்க்கு வந்திருந்த பாரசான் என்ற அந்தணனொருவன், தன்னிடம் வேதத்தைச் சந்தம் தவறாமற் சொல்லிய தட்சிணாமூர்த்தி என்ற

சிறுவனுக்குத் தான் சேரனிடமிருந்து பெற்றுவந்த பொருள களை யளித்தேகினன். அதுகண்ட ஏனையோர் பொருது, அச் சிறுவனின் தந்தையாகிய வார்த்திகன்மேற் களவுக்குற்றம் சாட்டி அரசனேவலர்களைக்கொண்டு சிறையிடுவித்தனர். இத் தகைய கொடுங்கோல் நடந்ததால், மதுரையில் கொற்றவை கோயிற்கதவு திறக்கவியலவில்லை. அஃதறிந்த பாண்டியன் தானறியாவாறு தன்னாட்டில் ஓர் கொடுங்கோல் நடந்திருக்க வேண்டுமென்றுன்னி, விசாரித்துண்மையறிந்து, அவ்வந்த ணனுக்கு வேண்டுவனவளித்து, பிழை பொறுக்குமாறு வேண்டியனுப்பினன். உடனே கொற்றவை கோயிலும் திறந்தது.

அரசர்கள் தம்நாடுகளை வளம்படுத்தினர். சோழன் கரி காலன், சோழமண்டலத்திற் காடாய்க்கிடநத இடங்களை யழித்து நாடாக்கி, பல குளங்களைத்தொட்டு, கரையில்லா திருந்தகாவிரிக்குக்கரையமைத்து. உறந்தையை விரிவுறசெய்து ஆண்டுக்கோயிலொடு குடிகளை நிலைநிறுத்தி, மதில்களமைத்து வாயில்கள் உண்டாக்கினன் என்று நாம் பட்டினப்பாலையால் அறிகின்றோம். குடிகள் அரசர்க்குச் சேரவேண்டிய இறையை அவரவர்க்குக்கிடைக்கும் பொருள்களாகவே செலுத்துவர். குறிஞ்சி நிலத்து வாழ்வோர் அகில், சந்தனம், யானைக்கோடு, மயிற்றோகை போன்றனவாகிய பொருள்களை இறையாகக் கொடுத்தனர். இவ்வாறே மருதநிலத்து மக்கள் நெல், கரும்பு முதலியனவற்றையும், முல்லை நிலத்தார் நெய், பால் முதலிய னவற்றையும், நெய்தல் நிலத்தார் முத்து, உப்பு முதலான பொருள்களையும் இறையாகச் செலுத்தி வந்தனர் என்று நாம் கோடலே பொருத்தமுடைத்தாகும்.

ஒவ்வோர் நகரத்திலும் பகையரசர்களின் ஒற்றர்கள் கரந்துறைவது வழக்கம். தன் வடநாட்டியாத்திரையை ஏனையரசர் கட்கறிவிக்க விரும்பிய செங்குட்டுவன், அச்செய்தியைத்தன் வஞ்சியிலேயே பறையறையச்செய்தான். அவன் அவ்வாறு செய்தது, 'எல்லா அரசர்களின் ஒற்றர்கள் தன் நாட்டில் கரந்துவாழ்வர். அவர்களே அதனையுணர்ந்து தத்தம் அரசர் கட்கறிவிப்பர்' என்றெண்ணியேயாம். இவ்வொற்றர்கள் அரசர்கட்குக் கண்போன்றிருந்தனர்.

அரசர்களிடம் தூதுவரும் இருந்தனர் என்பது முன்னர்க்குறிப்பிடப்பட்டது. தூதுபோதற்குரியார் கல்வியறிவு படைத்த சான்றோர்களேயாவர். அவ்வரசர்களிற் பலர் புலவர்களையே தூதாக ஏவுவாராயினர். வள்ளுவனார்,

> " இறுதிபயப்பினும் எஞ்சா திறைவற்கு
> உறுதிபயப்பதாந் தூது "

என்று தூதிற்கிலக்கணங் கூறினார். அவ்விலக்கணத்திற்கிலக்கியமாக ஒளவையாரின் செய்கையைக் காட்டுதல் தகும். அதியமான் ஒளவையாரைத் தொண்டைமானுழைத் தூதாகச் செலுத்தினான். தொண்டைமான் தூதாகவந்த ஒளவையார்க்குத் தன்படைக்கலக் கொட்டிலைக்காட்டினான். கண்ட ஒளவையார் அவனை நோக்கி 'நின்னுடைய வேல் முதலிய படைக்கலங்கள், பீலி அணிந்து, மாலைசூட்டி, நெய்யணிந்து அழகு பெற நிரைக்கப்பெற்றுக் காவலோடு விளங்குகின்றன. எம் அரசனாகிய அதியமானின் வேல்முதலிய படைகள் முனை

மழுங்கப்பெற்று, புலால்நாற்றம்வீச, செந்நிறந் தாங்கி, கொல்லனுடைய உலைக்களத்திற் கிடக்கின்றன. அன்றியும் அவன் வறியோர் சுற்றத்திற்குத் தலைவனாயிருக்கின்றான்' என்று அதியமானைப் பழித்ததுபோலப் புகழ்ந்து, அவனுடைய கொடைச்சிறப்பையும், வெற்றிச்சிறப்பையும் வெளிப்படுத்தினார். இதுகாறும் கூறிப் போந்தனவற்றினின்றும், பண்டைக்காலத்தில் தமிழ் நாட்டின் நிலையையும், தமிழரசர்கள் நாட்டை எவ்வாறு ஆண்டனர் என்பதையும் நாம் ஒருவாறு அறியலாம்.



## 7. கடவுள் வழிபாடு.

தமிழ் மக்கள் 'கடவுள் ஒருவர் உண்டு. அவரே இவ்வுலகத்தை ஆக்கி, அளித்து, அழிக்கின்றார்' என்பதை நன்குணர்ந்து, அக்கடவுளைப் பலவாறு வழிபட்டு வந்தனர். ஆசிரியர் தொல்காப்பியனார் நால்வகை நிலத்திற்கும் நான்கு தெய்வங்களைக்கூறுவான் றொடங்கி,

"மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமணல் லுலகமும்"

என்று சூத்திரஞ்செய்து முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலங்களுக்கும் முறையே திருமால், முருகன், இந்திரன், வருணன் எனத்தெய்வங்களைப் பாகுபாடு செய்தார். பாலைக்கு அவர் கடவுள் கூறவில்லை. அதற்குக்காரணம் பாலையைத் தனி நிலமாகக் கொள்ளாமையேயாம். பாலை என்பது ஏனைய நிலங்களைப்போன்று ஒரு நிலமன்று என்றும்,

"முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"

என்று இளங்கோவடிகள் கூறியதற்கிணங்க, முல்லையுங் குறிஞ்சியுமே ஞாயிற்றினது வெம்மையால் தீய்ந்து, காலையும் மாலையும் நண்பகல் போலக் கடுமையிருந்து, சோலைகளில் இலைகள் கரிந்து உதிர்ந்து நிழலின்றி, கூவலும் குளமும் தண்

ணீர்வற்றி, புள்ளும் மாவும் புலம்புற, அந்நிலத்து வாழ்வோர் இன்பமின்றித் துன்பமிகவடையுங் காலத்தில், அவ்விரு நிலங் களும் பாலையென்ற வேறு பெயரைக்கொள்ளும் என்றுங் கொண்டனர். இப்பாலைக்கு ஞாயிற்றைத்தெய்வமாகக் கலித் தொகை கூறுகிற்கும். அடியார்க்கு நல்லார், சிலப்பதிகார உரையில் பரிதியஞ்செல்வனும், திகிரியஞ்செல்வியுமே பாலைக் குத் தெய்வங்கள் என்று கூறினர். தொல்காப்பியர் வெளிப் படையாகப் பாலைக்குத் தெய்வம் கூறாத காரணத்தால் பாலைக்குக் கூறிய அத்தெய்வங்களை மறுப்பர் சிலர்.

ஒவ்வோர் நூலிற்கும் முதலில் கடவுள்வாழ்த்து அமைத்தல் வழக்கமாயிருந்தது. ஆயின் எக்காரணம் பற் றியோ தொல்காப்பியத்திற்குக் கடவுள் வாழ்த்துக் காணப் படவில்லை. சங்க விலக்கியங்கட்குக் கடவுள் வாழ்த்துகள் காணப்படுகின்றன. அந்நூல்கள் சிலவற்றில் சிவபெருமானை யும், சிலவற்றில் திருமாலையும் வாழ்த்தியுள்ளர். ஆனால் திரு மாலை ஒரு நிலத்திற்குத் தெய்வமாகக்கொண்டு வழிபட்ட தமிழர்கள், சிவபெருமானை ஒரு நிலத்திற்குத் தெய்வமாகக் கொள்ளவில்லை. அச்சிவனிற்றோன்றிய முருகனையே ஒரு நிலத்திற்குத் தெய்வமாகக்கொண்டனர். தொல்காப்பியர் காலத்தில், அவ்விருவரையும் வேறாகக்கருதாது ஒன்றாகவே கருதினர் என்பதையே நாம் ஏற்றகாரணமாகக் கோடல் சிறப்புடைத்து. பிற்பட்ட கடைச்சங்ககாலத்துத் தமிழர்கள் முருகனையும், சிவனையும் வேறுபடுத்தி வெவ்வேறாகத் தொழுதனர்.

ஒரு புலவர் ஒரு அரசனை வாழ்த்துங்கால் தெய்வம்

போல் வாழவேண்டுமென்று வாழ்த்துதல் வழக்கமாயிருந்தது. அமிழ்தனைய தீங்கனியாகிய நெல்லிக்கனியைத் தமக்கீந்த அதியமானை, ஔவையார் 'நீலமணிமிடற்றொருவன் போல, மன்னுக பெரும நீயே' என்று வாழ்த்தினார். இஃதன்றி, புறப்பொருளில் பூவை நிலை யென்ற ஒரு துறை யமைந்திருத்தலைக்கொண்டு மனிதனைத் தேவரோடு உவமித்துக்கூறும் வழக்கமுண்மை யறியலாம். நக்கீரனார், பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை, 'மாற்றருஞ் சீற்றத்தால் நீ மணிமிடற்றோனை யொப்பாய். வலிமையினால் வாலியோனை யொப்பாய். புகழால் மாயோனை யொப்பாய். முன்னியது முடித்தலால் முருகனை யொப்பாய்' என்று புகழ்ந்தார்.

பிற்காலத்தில் பௌத்தம், சமணம் முதலிய பல புது சமயங்கள் வந்து கலக்க, ஒவ்வொரு சமயத்தாரும் ஒவ்வோர் கடவுளை வழிபட ஆரம்பித்தனர். இப்புதுசமயங்கள் வருவதற்கு முன்னர் சிவனை வணங்கும் சைவரும், விஷ்ணுவை வணங்கும் வைஷ்ணவரும் நம் தமிழ் நாட்டில் இருந்தனர். பலசமயங்கள் தோன்ற அவர்களிடையே கருத்து வேற்றுமையுண்டாகி, வாய்ப்பூசல் நடத்தஆரம்பித்தனர். இவ்வாறு பூசல் தொடங்கியது கடைச்சங்க காலத்திற்குச் சிறிது பிற்காலத்திலேயாம்.

தத்தம் நிலங்களின் வளத்தைக்கருதியே தமிழர்கள் கடவுள் வழிபாடு செய்தனர். முல்லை நிலத்து வாழும் கோவலர் தம்முடைய பல்லா பயன்தருதற் பொருட்டு மாயோனை வழிபட்டனர். அந்நிலத்துமக்கள் ஒன்று கூடிக் குரவைக்கூத்து ஆடுதலும் ஓர் வழிபாட்டு முறையாகும்.

தமக்கு ஓர் இடுக்கண் வந்தகாலத்திலும் இக்குரவைக்கூத்தை ஆடுவார். குரவை யென்பது எழுவரேனும், எண்மரேனும், ஒன்பதின்மரேனும் ஒன்று கூடிக் கைகோத்தாடுதலாகும். இக்கூத்து ஆண், பெண் ஆகியஇருபாலரும் விரவி ஆடுதற் குரியதாகும்.

கோவலன் மதுரையிற் கொலையுண்டபின், கண்ணகி தங்கியிருந்த இடைச்சேரியிற் பலவித உற்பாதங்கள் உண்டாயின. பிரையிட்ட தாழிகளிற் பால் தோயவில்லை; விடையின் கண்கள் நீரையுகுத்தன; வெண்ணெய் உருகவில்லை; ஆட்டு மறிகள் துள்ளி விளையாடுதல் ஒழிந்தன; பசுத்திரள் மெய்ந் நடுங்கியரற்றின; அவற்றின் கழுத்திற் பெருமணிகளும் வீழா நின்றன. இவற்றைக்கண்ட மாதரி, தன்மகள் ஐயை முகம் நோக்கி, ‘இவ்வுற்பாதங்களைக் கண்டு நீ அஞ்சுதலொழி. இவற்றிற்குச் சாந்தியாக நாம் முன்னர் ஆயர்பாடியில், தாதெருமன்றத்தில் மாயவன் ஆடிய பாலசரித நாடகங்களுள், அம்மாயவன் பிஞ்ஞையொடாடிய குரவை நாடகத்தை இக்கண்ணகியுங் காண ஆடுவோம். அங்ஙனம் ஆடின், நம் கறவையுங் கன்றும் பிணி நீங்கி யின்பமடையும்’ என்று கூறினாள்.

அவ்வளவில் எழுவர் மங்கையர் ஆண்டுக் குழுமினர். அவ்வெழுவரையும் பழைய நரம்புகள் நிற்கு முறையிலே நிறுவி, அவர்கட்கு முறையே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என அக்கூத்துள் ஆளுதற் பொருட்டு இடுகுறிப்பெயர்களும் இடப்பட்டன. பின்னர் கைகோத்து ஆடத்தொடங்கினர். முதலில் நின்ற பெண்

மாயவனை முல்லைப்பண்ணாற்பாடி யாடக்கடவேமென்று கூறி அம்மாயவனைப் புகழ்ந்து,

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ!
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ!
கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமேல் அவன் வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ!"

என்று பாடினள். பின்னர் அப்பின்னையின் அழகினைப் புகழ்ந்து பாடினர். அவ்வாறு பாடுங்கால் மாயவன் உருவழகையுஞ்சேர்த்து 'மாயவனழகைப் புகழக் கடவேமோ அன்றி அப்பின்னையின் அழகைப் புகழக் கடவேமோ' என்றவாறெல்லாம் புகழ்ந்தனர். பிறகு அக் குரவையுள் உள்வரியாகிய ஓர் பாட்டினால் மாயவனைப் போற்றத் தொடங்கி, தமிழ்நாட்டு முடையுடை மன்னர் மூவரையுஞ் சேர்த்து, முதலிற் பாண்டியனையும், பின்னர்ச் சோழனையும், இறுதியிற் சேரனையுமாகப் புகழ்ந்தனர். அவர்கள் சிறப்பினை எடுத்துக் கூறி, அம்மூவரையுந் திருமாலாகவே கூறினர்.

இவ்வாறு புகழ்ந்து முடிந்தபின், கடல் வண்ணனை முன்னிலையாக்கி, அவன்செய்த மாயங்களைப் புகன்று 'அம் மாயங்கள் எமக்கு மருட்கையைத் தாராநின்றன' என்று

கூறிப்பாவினர். இத்தகைய முன்னிலைப்பாரவலின் பின், அத் திருமாலைப் படர்க்கையாக்கிப் போற்றத் தொடங்கி 'திரு மாலின் சீர்கேளாத செவியும் செவியாமோ? அக்கரி யோனைக் காணுத கண்களும் கண்களோ? அவனை ஏத்தாத நா என்ன நாவே! நாராயணு என்னு நா என்ன நாவே!' என்றெல்லாம் பற்பலகூறிப் பாவினர். இன்னவாறு பாடல் கள் முடிந்த பிறகு, அக்குரவையை முடிக்கக் கருதி, 'அத் தெய்வம் நம் நிரையிடத்து வந்த பிணிகளைத் தீர்ப்பதாக; தென்னவன் முரசம் எந்நாளும் மாற்ருரை வென்று முழங்கு வதாக' என்று வாழ்த்திக் குரவைக் கூத்தினை முடித்தனர்.

குறிஞ்சி நிலத்தாரும் முல்லை நிலத்துக் கோவலரைப் போலவே குரவையாடுதல் உண்டு. ஆயின் அக்குரவை இதனினும் வேறுபட்டது. குறிஞ்சி நிலத்துக் குறவர்கள் மூங்கிலில் இருந்து முற்றின தேறைற் செய்த கட்டெளிவைச் சுற்றத்தாரோடும் உண்டு மகிழ்ந்து, தொண்டகப்பறை முழங்க, மனைமுதிர் மகளிரொடு, வேங்கைமுன்றிலிலே, பறை யினது தாளத்திற்கேற்பக் குரவையாடுவர். அவ்வாறு ஆடுங்கால், குறிஞ்சிக்குத் தெய்வமாகிய முருகனைப்புகழ்ந்து பாடுவர். அன்றியும் அவர்கள் ஓர் புதுமையைக்கண்டு இறும்பூதெய்திய காலையிலும் குரவையாடுதலியல்பு. மதுரை யை எரியுண்ணுமாறு செய்து, திருச்செங்கோட்டில் ஏறி, பூத்தவேங்கை வியன்சினையின்கீழ்ப் பதினன்கு நாட்கள் நோற்றிருந்த கண்ணகியை, அமரர்க்கரசன் தமர்வந்து, வாடாமாமலர் மாரிபெய்து, வானவூர்தியில் அழைத்தேகினர். இவற்றை நேரிற்கண்ட அம்மலைவாழ்குறவர்கள் அக்கண்

ணகியை ஓர் தெய்வமாகக்கொண்டு குரவையாடத் தொடங்கினர். மலைவளந்துஞ்சாது சுரக்கும்பொருட்டு, ஆண்டு அக்குறவர்களிடையே,

"தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்
கோடுவாய் வைம்மின் கோடேணி யியக்குமின்
குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்
பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுமின்
பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமின்"

என்ற ஒலிகள் எழும்பின. குறவர் பெண்டிர் ஆங்கிழிந்த அருவியில் ஆடினர். நீராடியபின் ஒருத்தி, முருகனை ஏத்திக் குரவையாடுவோம் என்றாள். அவ்வாறே முருகனைப்பாராவத் தொடங்குவார் அவன் வேலையும் இடையே புகழ்வாராயினர்.

"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே"

என்று எல்லாவிடங்களிலும் நீங்காதுறைகின்ற அம்முருகன் தெய்வத்தன்மையையும்,

"அணிமுகங்கள் ஓராறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் ஏந்தியவே லன்றே"

என்று அவன் திருவுருவத் தன்மையையும்,

"சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா ரறுவர்
திருமுலைப்பா லுண்டான் திருக்கைவே லன்றே"

என்று அவன் குழவிப்பருவத்தையும் புகழ்ந்து, இன்ன தன்மை வாய்ந்த முருகன் ஏந்திய வேல்தான் சூர் முதலா கிய அவுணரை அழித்தது என்று பாடினர். மலைவாணர் குரவையாடுங்கால் அகப்பொருட்டுறையொன்றை யிடையிற் பெய்துபாடுதல் இயல்பு. மேற்கூறியவாறு முருகனைப் புகழ்ந்து பாடியபின், தலைவன் வரைவுமுடிவதாகத் தெய்வம் பரவினர். தலைவியுடல் மெலிவிற்குக்காரணமறியாத செவிலி வெறியாடியதாகவும், தோழி செவிலிக்கு அறத்தொடு நின்ற தாகவும்கூறி, வேலனுர் வந்து வெறியாடுங்களத்தில் நீலப் பறவைமேல் நேரிழை தன்னேடு முருகன் வந்தால், தலைவன் மணவணியையே நாம் வரமாகக்கேட்கவேண்டும் என்று பாடி னர். பின்னர் கண்ணகிக்கு வானோர் கோவலனைக்காட்டி அழைத்துச்சென்ற நிலையினைப்பாடினர். இறுதியில் அவ்வூ ரும், வில்லெழுதிய விமயத்தோடு கொல்லியாண்ட குடவர் கோவும் வைகலும் வாழியர் என்று கூறிக் குரவையைமுடித் தனர். வேலனைக்கொண்டு வெறியாட்டயருமாறு செய்தலும் குறிஞ்சி நிலத்தாரின் வழிபாட்டு முறையாகும். வெறியாட் டயருமுறையை முன்னரே பாக்கக்கூறினும்.

மருதநிலத்து வாழ்வார் இந்திரனைத் தெய்வமாக வழி பட்டனர். ஊடலும் கூடலுமாகிய காமச்சிறப்பு நிகழ்தலே மருதத்திற்கு உரித்தாதலால், அந்நிலத்து வாழ்வோர், ஆட லும்பாடலும் ஊடலும் உணர்தலு முதலாகிய இன்ப விளை யாட்டுகளை யினிது நுகரும் இமையோர்க்கும், எழிலிக்கும் இறைவனுகிய இந்திரனைத் தெய்வமாகக் கொண்டனர். மருத நிலத்தின் வளம் ஆண்டுப்பெய்யும் பெயலைப்பொறுத்தே யமையுமாதலால், மழை வேண்டுமளவிற் பெய்தலைக்கருதி இந்

திரனுக்கு விழாச்செய்து அவனை அழைப்பர்.

இவ்வாறு இந்திரனுக்கு விழா நடத்தும் வழக்கம் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்தது. அப்பட்டினத்தை யாண்ட தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியன் என்னும் சோழ அரசன், தன்னுடு செழித்தலைக்கருதி, இந்திரனை வணங்கி, அவனனுமதிபெற்று ஆண்டுதோறும் இருபத்தெட்டு நாட்கள் அவ்விழாவினை நடத்தி வந்தான். அவனுடைய வழித்தோன்றல்களும் அவ்வாறே விழாவினை விடாது செய்வாராயினர். அவ்விழா சித்திராபூரணையிலேயே கொண்டாடப்படும். விழாத்தொடங்குதற்குரிய நாள் வருவதற்கு முன்னதாக, அந்நாட்டிலுள்ள சான்றோர் ஒருங்குகுழீஇ, அவ்விழா நடத்தவேண்டும் முறையினை முடிவு செய்வர். பின்னர் அச்செய்தி நாட்டிலுள்ளார்க்கு முரசறைந்து அறிவிக்கப்படும். வீதிகளில் பூரணகும்பங்கள், பொற்பாலிகைகள், பாவை விளக்குகள் முதலியன நிரைப்பர். குலைக்கமுகு, குலைவாழை, கரும்பு, வஞ்சிக்கொடி முதலியன கட்டுவர். தூண்களில் முத்துமாலைகளை நாற்றுவர். வீதி, மன்றம் முதலிய இடங்களில் பழமணல் அகற்றிப்புதுமணல் பரப்புவர். மாடங்களிலும், வாயில்களிலும் துகிற்கொடிகளைக்கட்டி, இன்னவாறு ஊர்முழுவதும் அலங்கரிப்பர். குறித்த நாளில் ஐராவதம் எழுதிய கொடியேற்றப்படும். விழாவன்று மக்கள் யாவரும் கூடுவர். ஐவகை மன்றங்களிலும், கொற்றப்பந்தர் பட்டிமண்டபம், தோரணவாயில் இம்மூன்றுமிருக்கும் மண்டபத்திலும் பலியிடுவர். பலியிட்ட அப்பொழுதே ஐம்பெருங்குழுவினரும், எண்பேராயத்தாரும், அரசகுமாரும், பரதகுமாரும் ஒருங்குதிரண்டு, காவிரியின் குளிர்ந்த நீரைப்பொற்

குடத்திற் கொடுபோந்து, அந்நீரால் விண்ணவர் தலைவனை மஞ்சன மாட்டுவர். மஞ்சனமாட்டுங்கால் 'எம்மன்னன் கொற்றங்கொள்வானாக' என்று கூறுவர்.

விழா நடைபெறுங்கால், நுதல்விழிநாட்டத் திறையோன், செவ்வேள், நெடியோன், வாலியோன், வாசவன் ஆகிய இன்னோர் கோயில்களில் வேதங்களிற் கூறியவிதமே ஓமங்கள் நடைபெறும். நால்வகைப்பட்ட தேவர்கள், பதினெண்வகைக் கணங்கள் ஆகியோர்க்கு ஒருபுறத்தே சிலர் விழாக்கொண்டாடுவர். அறவோர்பள்ளி, அறனோம்படை, புறநிலைக்கோட்டம், புண்ணியத்தானம் போன்ற விடங்களில் தருமம் போதித்தல், புராணம் படித்தல் முதலியன நிகழும். ஒரு புறத்தில் பலவித இசைக்கருவிகளிலிருந்து எழுந்த ஒலி நிரம்பியிருக்கும். முழவு எந்நேரத்திலும் இடையறாது முழங்கும். பொன்னகர் வறிதாமாறு தேவர்கள் யாவரும் புகாரிற் புகுந்து விழாவினைக் காண்பார். மக்களும் தேவரும் ஒத்துடன் திரிவர். யாவரும் செற்றமும், கலாமும் நீங்கி ஒன்றுபட்டுவாழ்வர். இவ்வாறு விழா முடியும் நாளில் நகரத்து வாழும் மக்கள் காவிரி கடலொடு கலக்கும் சங்கமத்துறையில் நீராடுதல்மரபு. மக்கள் மகிழ்வுடன் சென்று கடலாடி, வேண்டுமின்பங்களைத்துய்த்து மீள்வர். இவ்விதம் விழாவெடுத்துக்கடவுளை வழிபடுதலே மருதநிலத்தோர்க்கியல்பாம்.

நெய்தல்நிலத்து வாழ்வோர் பரதவர். அவர்க்குத்தெய்வம் வருணன். மீன்பிடிப்பதே அவர்கட்கின்றியமையாததொரு தொழிலாகும். அத்தொழிலின்றேல் அவர்கள் வாழ்வதரிது. உப்புக்காய்ச்சி விற்றல், முத்தெடுத்து விற்றல் முத

விய தொழில்களினும்மீன்பிடித்தலையே அவர்கள் சிறந்ததாகக் கருதினர். ஆதலின் அவர்கள் வலைவளந்தப்பாமலிருக்கும் பொருட்டு, அப்பெருமணலுலகிற்குத் தெய்வமாகிய வருணனை வழிபடுவர். மகளிர் கிளையுடன் ஒன்று சேர்ந்து, சுறவுக்கோடுநட்டுப் பரவுக்கடன் கொடுப்பர். ஆண்டுக்கடலரசன் தோன்றி அவர்கட்கு வரங்கள் வேண்டுவனவளிப்பான்.

மேற்கூறியவாறு ஒவ்வோர் நிலத்திலும் வாழ்வோர் அவ்வந்நிலத்திற்குரிய தெய்வங்களை வழிபட்டனராயினும், சில பெரிய நகரங்களில் வாழ்ந்து வந்தோர், சிலகுறிப்பிட்ட கோயில்கட்குச்சென்று வழிபட்டுவந்தனர். கூடலில் வாழ்ந்த மக்கள், பரங்குன்றிற்குச்சென்று முருகனை வழிபட்டனர். மும்மூர்த்திகளும், தேவர்களும் முருகனைக்காணுதற்குப் பரங்குன்றிற்கு வந்திருந்தனர் என்றும், அக்காரணம்பற்றி யக்குன்று இமைய மலையையும், அதன்கண்ணுள்ள சுனை சரவணப்பொய்கையையும் ஒக்குமென்றுங் கருதினர். ஆதல்பற்றிக் கூடலில் உறைந்த ஆடவரும், மகளிரும் மகப்பேறு முதலியன கருதி ஆண்டுச்சென்று முருகனை வழிபட்டு அவனருள் பெற்றனர்.

கூடற்கும், பரங்குன்றிற்கும் இடைநின்ற நிலம் மிகக் குறைவுள்ளதே. ஆயினும் எண்ணிறந்த மக்கள் செல்வதும் வருவதுமாயிருப்பாராதலால், அவ்வழிச் செல்வார்க்கு அந்நிலம் சேய்மையுடையதாகக் காணப்படும். மக்களின் கூந்தலினின்றும் குஞ்சியினின்றும் வீழ்ந்த மலர்கள் வழியில் நிரம்பியிருத்தலால் வழிச்செல்வார்க்கு அவை சிறிது இடையூறு உண்டாக்கின. அம்மலர்களின் வரிசை, பூமகட்கணிந்த

மாலைபோற்றேன்றியது. கூடலில் வாழ்ந்தமக்கள், வைகறைக் கட்டுயிலொழிந்து, உயர்ந்த அணிகலன்களை யணிந்து, சிறந்த வாடைகளையுடுத்து, தேர்களிலும், குதிரைகளிலும் ஏறியவர் களாய்ப் பரங்குன்றைச்சேர்வர்.

கூடலையாளும் வழுதியும் மகளிரொடும், அமைச்ச ரொடும் அங்குச்சென்று குன்றின்மேலேறி வலம் வருவான். அரசனுடன் போந்த ஊர்திகள் மலையின்மேல் ஏறவியலாதா கையால், அவைகுன்றினடியிலேயே மரங்கள் முதலியவற்றிற் பிணிக்கப்பெற்றிருக்கும். அவ்வாறு தேரும், மாவும், களிறும் ஓரிடத்தே காணப்படுவது அரசனின் பாசறையை யொத்தி ருந்தது. ஆண்டுச்சென்ற மக்கள் மாலை நோத்தில் குன்றத் தின் அடியில் உறைதற்குச் செல்வர். அவர்கள் சுழற்றப் படும்எரி, இசைக்கருவிகள், சந்தன முதலிய வாசனைப் பொருள்கள், அகிற்புகை, கொடிகள் இவற்றையுடன் கொண்டு செல்வர். அன்றியும் மலர்களையும், தளிர்களையும், பூத்தொழில் களையுடைய துகில்களையும், மணியினையும், வேலினையுஞ் சுமந்தவர்களாய், கடிமரமாகிய கடம்பை ஏத்தியவர்களாய், இராகங்களை ஆலாபனம் செய்துகொண்டேசென்று மலையி னடியில் உறைவர்.

மலையில் ஏறிய மக்கள் முருகபூசை செய்யுங்கால் ஆவி யாக எழும் அகிற்புகையினால் வானகமறையும். அரசனுடன் மலைமீதேறியோரிற் சிலர், குரங்குகட்கு அவைதின்னக்கூடிய பண்டங்களை யளிப்பர். சிலர் முசுத்திரள்கட்குக் கரும்புகளை யளிப்பர். சிலர் பிரமவீணையை யெழுப்புவர். சிலர் குழலி லிருந்தும், கண்டத்திலிருந்தும் இசையினை யெழுப்புவர். அவ்

விசைக்கேற்ப முரசு ஒலிக்கும். காளைப்பருவத்தாரிற் சிலர், தத்தம் மனைவிமாருடன் சேர்ந்து, தனித்தனி பிரிந்துசென்று, ஆண்டு வரையப்பெற்றிருக்கும் சித்திரங்களைக்காண்பார். கணவன் தன் மனைவிக்கு அச்சித்திரங்களை ஒவ்வொன்ருகக்காட்டி, அவற்றிலமைந்த கதைகளை எடுத்துரைப்பான். அஃதாவது 'இவளகலிகை; இவ்வுருவமே அவ்விடத்திற் சென்ற கௌதமன்; ஈண்டு நிற்கும் இப்பூசையே இந்திரன்; கௌதமன் சீற்றத்தால் கல்லுருவெய்தியவாறு இது' என்பன போல் விளக்கிக்கூறுதல். பேதைப்பருவப் பெண்டிரிற் சிலர் தம் பெற்ருேர்களைப்பிரிந்து, அவர்களிருக்குமிடமறியாது, முன்னும் பின்னுமாகத்திரிந்து, ஆண்டுள்ள முழைகள்தோறும் சென்று, தத்தம் பெற்ருேர்களை விளிப்பர். அவ்விசையை ஏற்ற முழைகளினின்றும் எதிரொலியெழும். பேதையர், பெற்ருேர் ஆண்டிருக்கிருர்கள் என்றெண்ணி, உள்ளே நுழைந்து அவர்களைக்காணுது, மேலும் கூவிக்கூவிச் சுற்றி வருவர்.

பிரிந்த தலைவர் வினைமுடித்துத் தம்முடன் விரைவிற் கூடும் பொருட்டுப் பரங்குன்றில் அத்தலைவியர் முருகனுக்கு விழாவியற்றி, விரைவில் அவர்களைக்கூடப்பெறுவர். தலைவனைக் கூடிய அவர்கள் கூடலையடைந்து வையையில் புதுப்புனலாடுவர். பரங்குன்றில் முருகனுடைய கொடியை யானைமேலேற்றி, அவ்வியானையின் கும்பத்தைக் குங்குமத்தால் அலங்கரிப்பர். பூவொடுகூடிய நீரை இனிதாக ஊட்டுவர். செவிக் கவரிகளைச் சார்த்துவர். பவளத்தாற் செய்த காம்பினையுடைய குடையை மேலெடுப்பர். இவ்வாறு செய்த பூசைக்கண்,

அந்த யானை கவழங்கொண்ட மிச்சிலை மிகச்சிறப்பு வாய்ந்ததாகக்கருதினர். அம்மிச்சிலைப் பெண்டிர் உண்பது வழக்கம். அதனையுண்ணாத மணமுடிந்தமகளிர், தம் காதலருடைய அன்பைப்பெறார். மணமுடியாத கன்னியர் சிறந்த கணவரைப் பெறார்.

இன்னவாறு மதுரையில் வாழ்ந்தார் பரங்குன்றிற் பன்னிருகைக்கோமானை வழிபட்டு இன்பம் எய்தியதுபோலவே, திருமாலிருஞ்சோலை மலைக்குஞ் சென்று வழிபட்டனர் என்பன போன்ற செய்திகள் பழந்தமிழ் நூல்களினின்றும் அறியக்கிடக்கின்றன.



# 8. புலவர்களும் அரசர்களும்.

'மன்னற்குத் - தன்றேசமல்லாற் சிறப்பில்லை கற்றோர்க் குச்சென்றவிடமெல்லாஞ் சிறப்பு' என்றபடி நம் பண்டைத் தமிழ்ப்புலவர்கள், வறுமையிற் கிடந்துழன்றபோதிலும், அவர் கட்கு அரசர்களும், ஏனையோரும் அளித்துவந்த மதிப்பிற்கு அளவில்லை. பெருஞ்சேரலிரும்பொறை என்ற சேர அரசனை அரிசில்கிழார் பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்தாற்பாட, அவன் அவர்க்கு, தன் அரண்மனையில் உள்ளனவெல்லாம் கொடுத்து, அரசுகட்டிலையும், ஒன்பது நூறாயிரம் காணத்தை யும் கொடுத்தான். ஆயின் அப்புலவர் அவற்றை அவனுக்கே திரும்பவளித்து, அவ்வரசனுக்கு அமைச்சராக இருந்தார். ஔவையார் போன்றோர், அரசர்கட்குத் தூதுவர்களாகவும் இருந்தனர்.

அப்புலவர்கள் இருபெருவேந்தர் பொருவுழி, அவ்விரு வர் போரையும் விலக்கிச் சந்துசெய்வர். உள்ளிருந்த சோன் அஞ்சி, கதவினைத்திறந்து போர்க்கு வாராமலிருந்தும், அந் நாட்டை முற்றுகையிட்டிருந்த சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் முற்றுகையை யொழிக்கவில்லை. அவன் சேனைகள் பகைவர்தம் காவன் மரங்களைவெட்டின. அவ்வொலிகேட்டும் உள்ளிருந்த சோன் வாளாவிருந்தான். இந்நிலையில் ஆலத்தூர் கிழார் என்ற புலவர் கிள்ளிவளவனை யடைந்து, அடைத்திருந்த சோனின் வலியின்மையை எடுத் துக்கூறி, 'நீ அவனோடு போர்செய்தாயென்பதே நாணுந்தகுதி யையுடைத்து' என்றுரைத்துப் போர் ஒழியுமாறு செய்தார்.

சோழன் நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் போர் தொடங்கிய காலையில், கோவூர் கிழார் என்ற புலவர் அவ்விரு வரையும் நோக்கி, 'நீவிர் இருவரும் ஓர்குடிப் பிறந்தவர்களே; நம்முடன் போர் செய்பவன் சேரனுமல்லன்; பாண்டியனு மல்லன்; நம் இருவர் கண்ணியும் ஆத்தியேயாகும்; நம் இரு வரில் ஒருவர் தோற்பின் அத்தோல்வி நம்முடைய குடி யையே சேருமன்றோ! இருவரும் வெல்லுதல் இயற்கையு மல்லவே! ஆதலால் போரை ஒழுமின்; நீவிர் நம்முட் பொருவது ஏனையரசர்கட்கன்றோ மகிழ்ச்சியைத்தரும்' என்று நன்கு எடுத்துக்காட்டி அவ்விருவரையும் போரினின் றும் விலக்கினர்.

அப்புலவர்கள் அரசர்களிடையே குற்றங்காணின் அத னைச்சிறிதுமஞ்சாது புலப்படுத்தி, அவர்களை யிடித்துக்கூறுவர். நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருந்த காலத்து, அடைத்திருந்த நெடுங்கிள்ளியினிடம் கோவூர் கிழார், அவன் அடைத் திருப்பதன் இழிவை எடுத்துக்கூறினர். அவனைநோக்கி, 'நின் நாட்டின் யானைகள் பிடிகளொடு கயத்திற் படியாவாய், கவளம் பெறுவாய், நிலத்திற் கைகளைப்புரளவிட்டு உருமேறு போல முழங்குகின்றன; குழவிகள் பாலில்லாமல் அலறுகின் றன; மகளிர் பூவில் வறுந்தலை முடிக்கின்றனர்; மனையிலுள் ளார் நீரில்லாமல் கூப்பாடிடுகின்றனர். நீயோ ஈங்கினிதிருக் கின்றாய். இது தகாதகொன்றாகும். நீ அறத்தையுடையை யாயின், 'இது நினதன்றோ' என்று கதவினைத்திற. மறத்தை யுடையையாயின் போர் செய்வாயாக. இரண்டுமில்லாதிருத் தல் நாணுத்தகவுடைத்து' என்று இடித்துக்கூறி, அவனைத் தேற்றினர்.

சோழன் நலங்கிள்ளியின் பின்னோன் மாவளத்தானும், தாமப்பல்கண்ணனார் என்ற புலவரும் வட்டினையுருட்டிச் சூதுபொருதனர். அப்பொழுது புலவர் கையால் கவறு மறைத்தனர். அதைக்கண்ட மாவளத்தான் வெகுண்டு வட்டுக்கொண்டு எறிந்தான். அஃதவர் நெற்றியிற்பட்டது. புலவர் அவனை நோக்கி, 'நின் முன்னோரெவரும் இதுவரை பார்ப்பார் நோவன செய்தறியார். ஆயின் நீயோ என்மேல் வட்டினை எறிந்தாய். இவ்வாறு செய்தல் நின் பெருமைக்குப் பொருந்துமோ? அதனால் நின்பிறப்பில் ஐயமுடையேன்' என்றார். கேட்ட மாவளத்தான், தன் பிழைக்கு நாணியிருந்தான். அதுகண்ட புலவரும் 'தம்மைப்பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல் இக்குடிப் பிறந்தோர்க்கு எண்மை காணுமென நீ காட்டினை, என்றுகூறி, அவன் வாழ்நாள் காவிரி எக்கரிட்ட மணலினும் பலவாகஎன்று வாழ்த்தினார்.

புலவர்களின் சொற்களுக்கு அக்காலத்திய அரசர்கள் மிகுந்த மதிப்பு வைத்திருந்தனர். கிள்ளிவளவன், தன் பகை வணங்கிய மலையமானுடன் பொருது அவன் மக்களைச் சிறையாகக்கொண்டுவந்து, அவர்களை யானைக்கிட்டுக்கொல்ல எண்ணினான். அதனையுணர்ந்த கோவூர்கிழார் வளவனை அடைந்தார். அவனை நோக்கி 'வளவ! யான் கூறுவன கேட்டருள். நின்முன்னோர்கள் அஃறிணைப் பொருள்களிடத்திலும் அன்புவாய்ந்தவர்களாயிருந்தனர். சிபி என்பான் புறவின் அல்லல் போக்க வேண்டிச்சீரை புகுந்தான். இயற்கையிலேயே அருட்குணம் தோன்றுதலையுடைய குடியிற்பிறந்த நீ, இவர்களைக்கோறல் ஏற்றதன்று. இவர்களும் தமக்குள்ளனவற்

றைப் புலவர்கட்களித்துண்ணும் குடியிற் பிறந்தவர்கள். இம் மன்றினையும், யானையையும் கண்ட இப்பிள்ளைகள், இன்னதென் றறியாததொரு புது வருத்தத்தைக் கொண்டிருக்கின்றனர். யான் கூறுவன இவையே. நீ விரும்பியதைச் செய்வாயாக' என்றார். வளவனும் புலவர் சொற்களைக்கேட்டுத் தெளிந்து, அப்பிள்ளைகளைக் கொலை செய்யுமெண்ணம் தவிர்த்தான். புல வரும் அப்புன்றலைச்சிறாரை உய்யக்கொண்டார்.

சோழன் நலங்கிள்ளியிடமிருந்து, உறையூரையடைந்த இளந்தத்தன் என்ற புலவரை, நெடுங்கிள்ளியானவன், அவர் பகைவனிடமிருந்து ஒற்றாக வந்தார் என்றெண்ணி, கொல்லப் புகுந்தான். அப்பொழுது கோவூர்கிழார் நெடுங்கிள்ளியை யடைந்தார். புலவர்கள் தன்மையை, 'பழுமரந்தேரும் பறவைபோல அவர்கள் வள்ளியோரைப் படர்ந்து செல்வர். நெடிய என்னாது சுரம்பலகடப்பர். அவர்களை வல்லபடி பாடுவர். அவர்களளித்தபொருள்களை தம்போன்ற பல்லோர்க் கும் பகிர்ந்தளிப்பர். பிறர்க்குக்கெடுதி செய்வதை யறியார். கல்விமுகத்தால் தம்மோடு எதிர்த்தோரை அக்கல்வியாலேயே நாணும்படி செய்து வெல்வர்' என்று எடுத்துக்கூறி, அப்புல வர்க்கு வேண்டுவன அளிக்குமாறு செய்து, அவர் இறவாமற் காத்தார்.

புலவர்கள் அறியாமற்செய்த பிழைகளை அவ்வரசர்கள் பொறுப்பர். அப்பிழைகட்காக அவர்களை வெகுளார். பெருஞ் சேரலிரும்பொறை என்ற சேர அரசனிடம் மோசிகீரனார் என்ற புலவர் பரிசில் பெறச்சென்று அவன் அரண்மனையில் தங்கினார். ஓர் நாள் அரசனுடைய வீரமுரசத்தை மஞ்சன

யாட்டுதற்பொருட்டு, அது வைக்கப்பட்டிருக்கும் கட்டிலி லிருந்து அதனை எடுத்துச்சென்றனர். அக்கட்டிலில் எவரும் ஏறுதல் கூடாது. ஏறின் அவர்கள் கொலைத்தண்டனை யடை வர். வறிதாயிருந்த அம்முரசு கட்டிலில், மோசிகீரனர் ஏறிப் படுத்துத்துயின்ருர். அதையறிந்த அரசன் வெகுளாமல், புல வர் துயிலெழும்வரையில் பக்கலில் நின்று கவரிகைக்கொண்டு வீசினன்.

முற்காலத்தைப்போலவே பிற்காலத்திலும் பல வள்ளல் கள் புலவர்களிடைப் பெருமதிப்பு வைத்திருந்தனர். அவர் களறியாமற் செய்த பிழைகளைப் பொறுத்தனர். கண்டியூர் சிநக்கமுதலியார் என்ற வள்ளலின் உயிர் நண்பாயிருந்தவர் பொய்யாமொழிப்புலவர். ஓர் நாள் இரவில் புலவரானவர் முத லியார் மனையிலிருந்து மீள்வார், துயில் மிகுதியாகவந்து மயக் கிய காரணத்தால், அங்கேயே துயிலவெண்ணி, முதலியார் படுத்துறங்கும் கட்டிலை யடைந்து படுத்துத்துயின்ருர். சின் னேரம்கழித்து, முதலியாரின் மனைவியும் உறங்கும்பொருட்டு ஆண்டுவந்து, கட்டிலிற் றுயில்பவர் முதலியாரே என் றெண்ணி அக்கட்டிலிலேயே படுத்துத் துயின்று விட்டாள். வெளியில் உலாவி மீண்ட முதலியார் தன் கட்டிலையடைந்து அங்கே அவ்விருவரும் துயில்வதைக் கண்டார். மனதில் விகற்பவெண்ணம் ஒன்றும் கொள்ளவில்லை. மெதுவாகப் புலவரை எழுப்பி, ‘புலவரே! யானும் உறங்கச்சற்று விலகி யிடங்கொடும்’ என்ருர். விழித்தபுலவர் தாம், முதலியார் மனைவியுடன் படுத்துறங்கியதையறிந்து, விதிர்ப்புற்று, செய வகையறியாது, நாணித்தலையிறைஞ்சி நின்ருர். முதலியார்

'அன்பரே! தாங்கள் ஒரு தவறும் செய்யவில்லையே! இத் துணைநேரம் நம்மகளுடனன்றோ படுத்துறங்கினீர்! அஞ்சி நிற்பது எற்றிற்கு?' என்ருர். இவற்றிற்கெல்லாம் காரணம் புலவர்கள் செய்யுளில் அவர்கள் வைத்திருந்த அன்பும் மதிப் புமேயன்றோ!

பொதுவாக முற்காலத்துப் புலவர்கள் வறுமை மிக்கிருந் தனர். 'நாவின் கிழத்தியுறைதலாற் சேராளே, பூவின்கிழத் திபுலந்து' என்பது உண்மையே போலும்! புலவர்கள் வீடு களின் அடுக்களைகள் அடுதற்றொழிலையறவே மறந்தன. ஆங் குக் காளான்கள் பூத்தன. சுவர்கள் கரையான்களுக்கு இரை யாயின. கூரையின் கழிகள் கீழே வீழ்ந்தன. அவர்கள் அத் தகைய அடுக்களைகளில், குப்பையில் முளைத்த வேளைக்கீரை களை உப்பின்றி வேகவைத்து, மடவோர் காட்சி நாணி, வாயிலையடைத்து உண்டு வாழ்ந்தனர். பலபுலவர்களின் சுற் றத்தார், உண்ண உணவற்றும், உடுக்க உடையற்றும், இருக்க இல்லற்றும் வருந்தினர். ஆயின் அவ்வறுமையிலும் அப்புலவர்கள் செம்மை வாய்ந்திருந்தனர். தமக்குக்கிடைத் ததை ஏனையோர்க்கும் அளிப்பர். இனி,

"தோல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக

நல்குர வென்னு நசை"

என்று வள்ளுவனாரும், 'பசிப்பிணி என்னும்பாவி, ஒரு வனுடைய குடிப்பிறப்பையழிக்கும். விழுப்பம் கொல்லும். கல்வியறிவைக் கெடுக்கும். எழிலைச்சிதைக்கும்' என்று சாத்த னாரும், மானங், குலம், கல்வி, வண்மை,அறிவுடைமை, முதலி

யன பசிவரப்பறக்குமென ஔவையும் நல்குரவைச் சிறப்பித்துக்கூறியிருப்பினும், புலவர்கள் வறுமை மிகுந்த காலத்தில் இளிவந்த சொற்களைக்கூறினோர்களில்லை. மனமில்லாதொருவன் பரிசில் கொடுப்பினும், தம்மை மதியாது கொடுப்பினும் அவற்றைப்பெறார். பெருஞ்சித்திரனார் வெளிமானுழைச்சென்றார். வெளிமான் புலவரைப்பார்க்க விரும்பாது, ஏதேனும் அவர்க்களித்தனுப்புமாறு தம்பியை ஏவினான். அவனோ சிறிது பொருளளித்தான். புலவர் அதனைப்பெற மறுத்தகன்றார்.

அப்புலவர்களிற் பலர், ஆகவும் கெடவும் பாடல்தாவல்லவர்கள். அவர் தம்சீற்றத்திற்காளானோர் உய்வதரிது. கல்லாடர், மாமூலர், நக்கீரர், பெருந்தலைச் சாத்தர் முதலியோர் ஆகவும் கெடவும் பாடல் தாவல்லவர் என்று நூல்களினின்றும் அறியக்கிடக்கின்றது. மதுரைப் பட்டிமண்டபம் புகுந்து தென்மொழியிலும் வடமொழியே சிறந்ததென்று குயக்கொண்டான் என்பவன் கூற, நக்கீரனார் வெகுண்டு,

> "முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
> பரண கபிலரும் வாழி—யரணிலா
> வானந்த வேட்கையான் வேட்கோக்குயக்கோண்டா
> னனந்தஞ் சேர்கசுவா கா"

என்று அவன் இறக்கப்பாடினார் என்றும், அருகிலுள்ளோர் அவனைப் பிழைப்பிக்குமாறு வேண்ட,

> "ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
> காரியத்தாற் காலக்கோட்பட்டானைச்—சீரிய
> அந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
> செந்தமிழே தீர்க்கசுவா கா"

என்றுபாடி உயிர்பெறச் செய்தார் என்றும் வரலாறொன்று காணப்படுகின்றது. பிற்காலத்தில், வயிரபுரமாகாளியம்மையை யழைத்து, 'குதிரை மாளத்தின்ற காளிங்கராயன், குதிரை மாளக்கொண்டுபோ' என்றும், 'குதிரை மீளக்கொண்டுவா' என்றும் ஒரு புலவர் பாடிக்குதிரையின் உயிர்போகவும், மீளவுஞ் செய்தார் என்பதைப் பலர் பலர்மேல் ஏற்றிக்கூறுகின்றனர். இத்தகைய வரலாறுகள் உண்மையெனக் கோடற்குரிய சான்றுகள் காணப்படாவிடினும், அத்தகையவாற்றல் புலவர்களிடை வாய்ந்திருந்தது என்பதை மறுக்க எவருந் துணியார்.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனை, ஆவூர் மூலங்கிழார் பாடிச்செல்ல, அவன் பரிசிலளியாது நீட்டித்தான். புலவர் அவனை யகன்று செல்லக்கருதினர். ஆயின் தன்னை இகழ்ந்ததனால் அவனுக்கு ஏதேனும் துன்பம் வருங்கொல் என்றஞ்சி அவனைநோக்கி, 'எனைத்துஞ், சேய்த் துக்காணாது கண்டனம். அதனால் நோயிலாராக நின்புதல்வர்' என்று கூறிப்பின்னும், 'சிறக்க நின்னாளே' என்று பாடினர். ஆனால் இளம்பூரணர் 'நோயிலாராக நின்புதல்வர் என்றும், சிறக்க நின்னாளே என்றும் வரும் மங்கலச்சொல் கெடுகஎனப் பொருள்பட்டவாறு காண்க' என்று எழுதினர். புறநானூற்றிலும் 'அவை குறிப்புமொழி' என்று எழுதப்பட்டுளது. அவ்வாறு எழுதப்பட்டிருப்பினும் அது சிறிதும் பொருத்த முடையதன்று. கல்வியறிவு நிறைந்த ஓர் புலவர், பரிசில் நீட்டித்த ஒரு சிறு பிழைக்காக 'கெடுக' எனப்பொருள் படுமாறு பாடினர் என்பது, அப்புலவர்க்கு இழுக்கந்தருவ தொன்றாகும். ஆகவே அவனுக்குத்தீங்கு நேரிடுமென்றஞ்சி

அவனை வாழ்த்தினார் என்றே கோடல் சிறப்புடைத்து. அது பற்றியன்றே,

" தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்-உம்மை
யெரிவாய் நரகத்து வீழ்வர்கோ லென்று
பரிவதூஉஞ் சான்றோர்கடன் "

என்று ஆன்றோர் செய்யுளுமெழுந்தது. அன்றியும் அப்புலவர்கள் புன்மையும் பொழுதும் பழிப்பரேயன்றி, தாம் உள்ளிச் சென்றோரைப் பழியார்.

பரிசுபெற்று வருவோர் எதிரே வரும் பாணர்களையும், பொருநர்களையும், புலவர்களையும், தாம் செல்வம் பெற்றுவந் தோருழைச் செல்லுமாறு ஆற்றுப்படுப்பர். தாம் பெற்ற பெருவளத்தை, பெறுத அவர்களுக்கு அறிவுறுத்தி, ஆங்குச் சென்று பயனடையும்படிகூறி, அதற்கான வழிகளையு முரைத்து விடுப்பர். பத்துப்பாட்டில் கூத்தர், சிறுபாணர், பெரும்பாணர், பொருநர் இவர்களை யாற்றுப்படுத்திய செய்யுட்கள் காணப்படுதலினின்றும், விறலி, புலவர், இவர்களை யாற்றுப்படுத்தியதாகப் புறநானூற்றில் பாடல்களும், தொல்காப்பியத்தில் துறைகளும், காணப்படுவதினின்றும் ஆற்றுப் படை யுண்மை நன்கு தெளியலாம்.

பரிசில் பெற்று ஊர்க்குச்சென்றோர், அப்பொருள்களை யாவர்க்கும் அளிப்பர். அரிதிற்பெற்ற பொருளென்று

அவற்றைத் தாமே துய்க்க விரும்பார். குமணனைப்பாடிப் பரிசில் பெற்றுமீண்ட பெருஞ்சித்திரனார் தன் மனைவியை நோக்கி 'குமணன் நல்கிய இவ்வளத்தை, நின்னயந்துறை நர்க்கும், நீ நயந்துறைநர்க்கும், நின்கிளைஞர்க்கும், நினக்கு நெடுங்குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும், நின்விருப்பப்படி வேண்டுவனவற்றை நீயும் அளிப்பாயாக' என்றார்.

புலவர்கள் தம்மைப் புரந்த புரவலர்களை ஒரு பொழுதும் மறவார். அப்புரவலர் இறப்பின் அவர்கள் படும்பாடு சொல்லுந் தரத்ததொன்றன்று. அதியமான் இறந்துபட, ஔவை யார் அதற்கிரங்கி, 'அதியமானைக் கொன்றவேல் அவன் மார்பில் மட்டும் தைக்கவில்லை, பாணர் மண்டையைத் துளை செய்து, இரப்போர் கையுளும் போகி, புலவர் நாவிலும் தைத்தது. இனி இவ்வுலகில் பாடுநருமில்லை. பாடுநர்க் கொன்றீகுநருமில்லை. எமக்குப்பற்றுக்கோடாகிய அவ்விறை வன்யாண்டுளன்' என்று பாடினார். கபிலர் வேள்பாரியிறக்க, அவன் மகளிரைப்பார்ப்பார்ப் படுத்து வடக்கிருந்து,

> "இம்மை போலக் காட்டி யும்மை
> யிடையில் காட்சி நின்னோ
> டுடனுறை வாக்குக வுயர்ந்தபாலே"

எனக்கூறுகின்றார். ஔவையார், கபிலர் போன்றார் தம்மை யாதரித்தோர் இறந்ததற்கு வருந்துதற்கும், உடனுயிர் துறத்தற்கும் கடமைப்பட்டவராவர். ஆயின்,

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
> னட்பாங் கிழமை தரும்"

என்ற குறளிற்கு இலக்கியமான பிசிராந்தையார், கோப் பெருஞ் சோழன் வடக்கிருப்பதை எவ்வாறோவறிந்து வந்து உடனுயிர் நீத்தார் என்பது வியப்பினும் வியப்பே. இவ் வாறே பொத்தியாரும் புதல்வற் பெற்ற பிறகு கோப்பெருஞ் சோழனின் நடுகல்லைப்பாடி அங்கிடந்து, அருகிற்படுத்து உயிர் நீத்தார். இவற்றினின்றும் அரசரோடு புலவரிடை நட் பினை நாம் நன்குணரலாம்.

தம்மைப் போலவே அரும் புலமை வாய்ந்த ஏனைய புலவர்களைப் புகழ்ந்து பாடுகின்றதொரு தன்மை அப் புலவர்களுடைய தன்மைகளில் தலை சிறந்ததாகும். 'வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' 'பொய்யா நாவிற்கபிலன்' 'புலனழுக்கற்ற வந்தணாளன், இரந்தசெல் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப்பாடினன்' என்று கபிலரை, ஏனைப் புலவர்கள் புகழ்ந்தனர். அன்றியும் 'அன்றும் பாடு நர்க்கரியையின்றும் பரணன்பாடினன்' 'திருந்துமொழி மோசி பாடிய ஆய்' 'பொய்யில் புலவன் பொருளுரை தேராய்' என்பனபோன்ற அடிகளால் புலவர்களே புலவர் களைப் புகழ்ந்தமை அறியலாம்.

அக்காலத்திய அரசர்களில் வள்ளல்களாய் விளங்கி யோர் மிகக்கல்வியறிவு படைத்தவர்களாவர். புலவர்கள் தா மறிந்தளித்தனர் என்றால் அவற்றிற்கேற்ற கல்வியறிவு அவர் கட்குண்மை நாம் அறியலாம். அரசர்கள் பாடிய பாடல்கள் சங்க நூல்களில் பல காணப்படுகின்றன. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், 'உற்றுழியுதவியும் உறுபொருள் கொடுத்தும், பிற்றைநிலை முனியாது கற்றல்

நன்றே' என்று கற்றலின் சிறப்பை விளக்கி, தன் கல்வி யறிவையும் வெளிப்படுத்தினன். அரசர்கள் வஞ்சினங் கூறியதாகப் புறநானூற்றில் செய்யுட்கள் பல காணப்படுதல் யாவருமறிந்ததே. சிலப்பதிகாரம் பாடியோர் அரசரேயன்றோ!

பல புலவர்களால் பாடப்பெற்று ஆங்காங்கு சிதறிக் கிடந்த பாடல்களைத் தொகுப்பித்த பெருமை அரசர்கட்கே யுரியது. அவ்வாறு அவர்கள், தமிழ்ச் செய்யுட்களின் மதிப்பை அறிந்து, தொகுப்பித்து, பாதுகாவாவிடில், நாம்இத் துணைத் தமிழ் நூல்களைக் கனவிலும் கண்டிருக்கமுடியாது. அரசர்களிலும் ஒருவரை யொருவர் பாடுதல் உண்டு. கிள்ளி வளவன், சிறு குடிகிழான்பண்ணனைப் பாடியிருக்கிறான். கரிகாலனுடைய அம்மாளுகிய இருப்பிடர்த்தலையார்,பாண்டியன் கருங்கை யொள்வாட்பெரும் பெயர் வழுதியைப் பாடியுள்ளார். மேற்கூறிப்போந்தனவற்றினின்றும் புலவர்கள் செம்மையும், அரசர்கள் அவர்களிடை வைத்திருந்த நன்மதிப்பும், அவர்கள் கல்வி யறிவும் நாம் தெள்ளிதின் உணரலாம்.

